ஓம சக்தி

இரணைமடு

# திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில்

கிளிநொச்சி



சிறப்பு மலர்

## நான்காவது திருக்குடமுழுக்கு விழா

2012.01.30

"அம்பாளின் அருள் அகிலமெல்லாம் ஆளும்"

உ

சிவமயம்



கிளிநொச்சி - இரணைமடு

திருவருள்மிகு

## கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில்

நான்காவது பிரதிஷ்டா

# திருக்குடமுழுக்குநன்னீராட்டு விழா

பங்குனி 2012

மலரின் பெயர் :- நான்காவது திருக்குடமுழுக்கு நன்னீராட்டுவிழா சிறப்புமலர்

உரிமை :- மலர்க்குழு

ஆசிரியர்கள் : திரு.நா.சோதிநாதன்
திரு.க.சந்திரகுமார்

காலம் :- பங்குனி 2012

பக்கங்கள் :- 196

பிரதிகள் :- 1000

வெளியீடு : அறங்காவலர்சபை,
திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில்,
இரணைமடு, கிளிநொச்சி.

பதிப்பு :- கரிகணன் பிறிண்டேர்ஸ்,
424, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.






மூலமூர்த்தி

# அறங்காவலர்சபை

**தொண்டர்சபை உறுப்பினர்கள்**

1. திரு. இ. லோகேஸ்வரன்
2. திரு. இ. ஜெகதீபன்
3. திரு. ந. செந்தாளன்
4. திரு. வே. சரவணபவானந்தன்
5. திரு. மு. கர்ணன்
6. திரு. அ. சந்திரமோகன் (பிரியன்)
7. திரு. பு. விவேகநாதன்
8. திரு. பா. நகுலேஸ்வரன்
9. திரு. பா . பிரசன்னா
10. திரு. இ. திருவரன்
11. திரு. சி. பேரானந்தன்
12. திரு. ச. ஜெயரூபன்
13. திரு. மு. கபிலன்
14. திரு. மு. கஜீபன்
15. திரு. த. சைலேந்திரன்
16. திரு. பு. தர்மராசா
17. திரு. ச.இராஜேஸ்வரன்
18. திரு.இ.கிருஷ்ணகுமார்
19. திரு.வி.கேதீஸ்வரன்

**அறநெறிப்பாடசாலை ஆசிரியர்கள்**

1. திருமதி த. கோகிலவதனா
2. செல்வி பூ. கஸ்தூரி
3. செல்வி ச. சசிகலா

**ஆலய அனுக்கத்தொண்டர்கள்**

திரு. க. இராஜரட்ணம் (அறிவாளி)

**ஆலய பரிசாரகர்**

திரு. இ. இராசு (வூஸ்)

## மலர்க்குழு

**மலர்க்குழுத் தலைவர்** : திரு.நா. சோதிநாதன்

**செயல் உறுப்பினர்கள்** : திரு. எஸ். என். செல்வராசா
திரு. ந. சிவகுமார்
திரு. மு. இராமச்சந்திரன்
திரு. செ. கோகிலேஸ்வரன்
திரு. க. சந்திரகுமார்
எந்திரி சி. விகிர்தன்
திரு. பா. பிரசன்னா
திரு. அரிதாஸ் சந்திரமோகன் (பிரியன்)
திரு. க. பாலகணேசன்
திரு. சு. கணபதிப்பிள்ளை
திரு. சி. சிவஞானம்
திரு. தா. நிகேதன்

## மலரின் இதழ்களாக....

# அருளாசிச் செய்தி



அம்பிகை அடியார்களுக்கு,

கிளிநொச்சி இரணைமடுப் பிரதேசத்தில் எழுந்தருளி இருந்து அருள் ஆட்சி புரியும் கனகாம்பிகை அம்பாளுக்கு நடைபெற்ற கும்பாபிஷேகத்தை நிதர்சனமாக்கும் பொருட்டு மலர் வெளியிடுவதனையிட்டு மகிழ்ச்சியடைகிறோம். நீர்வளமும் நிலவளமும் கொண்ட இயற்கை அழகினைத் தனதாக்கிக் கொண்ட இரணைமடுப் பிரதேசம் நிறைவான ஆலயங்களோடு, ஆன்மீக சிந்தனை அழகை உருவாக்கிய பெருமை கொண்ட பிரதேசம். உலகத்துக்கு, தாயாக விளங்கும் அன்னை வேண்டுவார் வேண்டுவதனைத் ஈயும் பொருட்டு இவ்வாலயத்தில் கனகாம்பிகையாக எழுந்தருளி இருந்து அனைவருடைய வேண்டுதலையும் பூர்த்தி செய்பவளாக உள்ளார். 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் இக்கும்பாபிஷேகம் இவ்வாலயத்தின் பல ஆண்டுகளுக்குப் பிறகு நடைபெற்று இருப்பது அனைத்து மக்களுக்கும் மகிழ்ச்சியைத் தந்துள்ளது. இவ்வாலயம் இங்கு வாழும் சைவசமய மக்களின் ஆன்மீக அறிவையும் சமயதத்துவக் கருத்துக்களையும் இங்கு வாழும் மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கின்ற ஆலயமாக அமையப்பெறுவது. அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தருவதாகும். இவ்வாலய அறப்பணியில் ஈடுபட்டு இருக்கும் அனைத்து அன்புள்ளங்களையும் வாழ்த்திப் பாராட்டுகின்றோம். யாவும் சிறப்பாக அமைய அம்பிகையின் அருள் கிடைக்கும். இன்று வெளிவரும் மலர், மலராசிரியரையும், இரணைமடுவாழ் மக்களையும் இறைவன் ஆசீர்வதிப்பாராக.

"என்றும் வேண்டும் இன்ப அன்பு"

**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்,**
நல்லை ஆதீன முதல்வர்,
இரண்டாவது குருமஹா சந்நிதானம்,
நல்லூர், யாழ்ப்பாணம்.

## கும்பாபிஷேக பிரதம குருவின் ஆசி



அகில அண்டங்களையும் படைத்தும், காத்தும், அழித்தும், அருளியும், மறைத்தும் அம்பிகை அருவுருமாக எங்கும் நிறைந்து உயிர்களிடத்திலே அன்பு செலுத்தி பரிபூரணமாய் விளங்குபவளே அம்பிகை. அவ்வகையில் ஆங்காங்கு கோயில் கொண்டு வீற்றிருக்கின்ற வகையிலே மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றும் இணைந்து இரணைமடுக் குளத்தருகில் வீற்றிருந்து கனகாம்பிகை எனும் நாமத்தோடு அருள்பாலிப்பது ஆலய சிறப்பம்சமாகும். (கனம் – என்றால் தங்கம்) தன்னை நாடி வரும் பக்தர்களுக்கு தங்கத்தைப் போல் பிரகாசிப்பவள் அம்பிகை. சித்திரைப் பௌர்ணமியிலே ஆயிரம் பானை பொங்கல் வைத்து வழிபடுவது அந்த அம்பிகையின் கிருபாகடாட்சம் என்றே கூறவேண்டும்.

அடுத்ததாக இவ் ஆலயத்திலே தர்மகர்த்தா சபையினரின் வழித்தோன்றலில் நான்காவது கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பான முறையிலே எவ்வித குறையுமின்றி ஒற்றுமையோடு கும்பாபிஷேகத்தை நடாத்தியமை தர்மகர்த்தா சபையினரின் பெருமிதமாகும். அத்துடன் ஆலயத்தைச் செவ்வனே சீர்செய்த பெருமையும் அவர்களையே சாரும். இதன் காரணம் அம்பிகையின் அருள் ஒரு பக்கம் எல்லோரையும் மதிக்கின்ற நற்பண்பு ஒருபக்கம் அடியேன் நேரில் கண்ட காட்சி அதுதான் தர்மகர்த்தா சபையினரின் உயர்வுக்குக் காரணம்.

அடியார்கள் அம்பாளிடத்திலே செலுத்துகின்ற பக்தி அளவில்லாத அன்பு. நாம் என்னவென்று கூறமுடியும். இரணைமடுக்குளத்திலுள்ள நீரைப்போல் வற்றாத கருணை மழையாகும். இவ்வகையிலே அடியேனிடத்தில் கும்பாபிஷேகத்தை செய்துதரவேண்டும் என்று ஆலயக்குருக்கள், தர்மகர்த்தா சபையினரின் வேண்டுகோளுக்கிணங்க உத்தம நவகுண்ட பக்ஷமாக மிகவும் கோலாகலமாக நடந்தேறியது அம்பிகையின் திருவருட் கடாட்சமாகும். அந்தப் புண்ணிய கைங்கரியத்தை அடியேனுடைய திருக்கரத்தினால் செய்தமை அடியேன் செய்த பாக்கியமாகும். இக்கும்பாபிஷேகத்தை தரிசித்தவர்கள் ஆலய குருக்கள், தர்மகர்த்தாசபையினர், அடியார்கள் எல்லோருக்கும் அம்பிகையின் அருள் வேண்டி அருளாசி கூறுகின்றேன்.

"வேதாகம உதயசூரியன்", "வேதாகமசக்கரவர்த்தி"
**சிவஸ்ரீ ஆதி.சௌந்தரராஜக் குருக்கள்,**
பிரதமகுரு, முத்துமாரி அம்மன் தேவஸ்தானம்,
பண்டாரிக்குளம் - வவுனியா.



செஞ்சொற்செல்வர்
கலாநிதி ஆறு.திருமுருகன் அவர்கள் வழங்கிய

## ஆசிச்செய்தி



வன்னிப் பெருநிலப்பரப்பில் மக்களை வாழவைக்கும் அற்புதத்தெய்வம் கனகாம்பிகை அம்பாளின் கும்பாபிஷேகம் குறித்து வாழ்த்துவதில் ஆனந்தமடைகிறேன். தவத்திரு யோகசுவாமிகளின் அருட்பார்வையினால் எழிச்சிபெற்ற இத்திருக்கோவில் மேன்மையை அறியாதவர்களில்லை. சிந்தித்து செயல் வடிவங் கொடுத்து, பல நற்காரியங்களை எம்மண்ணில் நிலைபெற உதவிய அமரர் ம.ஸ்ரீகாந்தா அவர்களின் சேவையால் வளர்க்கப்பட்ட இக்கோயில் சிறப்பு பெருமைக்குரியது. போர்ச் சூழலில் வாடிப்போன மக்களுக்கு ஆறுதல் வழங்குவதற்கு ஆலயங்கள் புத்துயிர் பெறவேண்டியது அவசியமாகும். இத்திருக்கோவிலின் திருப்பணிக்காக அல்லும் பகலும் உழைத்த அடியார்களுக்கு எம் இதயபூர்வமான வாழ்த்துக்களும் நன்றிகளும் உரித்தாகுக.

அம்பாளின் திருவருளால் எம்மக்கள் நல்வாழ்வு வாழ அனைவரும் பிரார்த்தனை செய்வோம். கீலுமுற்றுப்போன வன்னிப்பிரதேசம் கீர்த்தி பெற்று மக்கள் உரிமையோடு வாழப் பிரார்த்திப்போம். அறம்காக்கும் அன்னையிடம் அனைவரும் சரணடைவோம். மஹாகும்பாபிஷேகத்தை முன்னிட்டு வெளிவரும் மஹா கும்பாபிஷேக மலர் சிறந்த ஆவணமாக விளங்க நல்லாசி கூறி அமைகிறேன்.

**ஆறு.திருமுருகன்,**
தலைவர், ஸ்ரீ துர்க்காதேவி தேவஸ்தானம்,
தெல்லிப்பழை.

## சிவதொண்டன் சபையாரின் நன்மொழி

'நமக்குக் குறைவில்லை என்றான் எங்கள் குருநாதன்'

முறிகண்டியான் அம்பலமாய் இருந்து அருள்சொரிய, தொன்மையான லிங்கேஸ்வர மூர்த்தங்கள் பல அந்தரங்கமாயிருந்து அருள்பொழியும் அருளாதார பூமி கிளிநொச்சி. இக் கிளிநொச்சி மண் மற்றவர் அறியா மாதவர் பலர் வாழ்ந்த மங்கல மண். இதனை இங்கு மாதவம் செய்த யோகசுவாமி நன்கு அறிவார். இங்கு மங்கலம் தங்கும் பொருட்டு கனகாம்பிகை அம்மனைப் பிரதிஷ்டைசெய்து வழிபாடு செய்யுமாறு சுவாமிகள் அறிவுறுத்தினார். இரணைமடுக்குளக்கரையில் பரந்தோங்கி வளர்ந்த பாலைமரத்தடியில் அம்மைக்கு ஆலயம் அமையுங்கள் என்று தானம் குறித்தவரும் யோகசுவாமிகளே. அம்மை கோயில் கொண்ட நாளன்று ஆயிரத்தெட்டுப் பானைகள் வைத்துப் பொங்குங்கள் என்று அவர் அருளிய வண்ணமே அன்பர்கள் ஆர்வமாய் பொங்கலிட்டு அம்மைக்கு ஆலயம் அமைத்தனர்.

சுவாமிகளது அணுக்கத்தொண்டருள் ஒருவரான அமரர் ஸ்ரீகாந்தா அவர்கள் அந்நாள் அரசஅதிபராய் இருந்தவர். அவர் சுவாமிகளது திருவுளம் நிறைவேறத் தம்மால் ஆனவற்றையெல்லாம் குருபத்தியோடு செய்தருளினார். சுவாமிகள் இளைஞர்களை இப்பகுதியில் குடியேறி உழுதுண்டு வாழுமாறு அறிவுறுத்தியதுடன், தமது அன்பர்களான இளைஞர்களை காலடி நிலத்துள் எல்லாமுள்ளது என்றுகூறி அனுப்பிவைத்தார். அம்மன் ஆலயத்தின் பெயரால் எழுந்த ஊருக்கு கனகபுரம் எனப் பெயர் சூட்டியதும் சுவாமிகளேயாகும்.

அப்பகுதியிலே ஓர் சிவதொண்டன் ஆச்சிரமம் கால்கொண்டதும் சுவாமிகளது சித்தப்படியே. அவ்வாச்சிரமத்தில் ஒளிரும் ஞானச்சுடர் விளக்கு அண்டை அயலெல்லாம் நல்லறிவுச் சுடர் பரப்பும் என்பது சுவாமிகளது வழியடியார்களின் நினைவாயிருந்தது. எங்கள் குருநாதனது சித்தப்படியும் வழிகாட்டுதல் படியும் உருவாகி வளர்ந்த அம்மையின் ஆலயம் பெருஞ்சாந்திக் குடமுழுக்குக் காண்பது குறித்து பெருமகிழ்ச்சி அடைகின்றோம்.

'ஞானதேசிகன் சரணம்............
எங்கும் மங்களம் தங்கும்படி அருள் தந்து இரட்சி'

**சிவதொண்டன் சபையினர்,**
**மூ.லிங்கேஸ்வரன்**
*செயலாளர், சிவதொண்டன் சபை,*
*யாழ்ப்பாணம்.*
*18.02.2012*



## வாழ்த்துச் செய்தி

1959ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட இப்பெருங்கோயில் யாழ்ப்பாணத்தில் சுவாமியென்று அழைக்கப்படும் தவத்திரு. யோகர்சுவாமி அவர்களின் வழிகாட்டலின் உருதுணையாக அக்காலத்தில் அரசாங்க அதிபராகயிருந்த மயில்வாகனம் ஸ்ரீகாந்தா அவர்களும், உதவி அரச செயலாளராகவிருந்த தி. முருகேசன்பிள்ளை அவர்களுக்கும் கொழும்புத்துறை ஆச்சிரமத்தில் திருவாக்கருளியபடி இரணைமடுக் குளத்திற்கு மேற்குப் பக்கமாக ஓர் அம்பாள் ஆலயம் அமைக்கவேண்டும்.

எனவே கரைச்சி வாழ் மக்கள் அனைவரும் வழிபாடாற்றி தங்களுடைய இஷ்ட சித்திகளை பெறுவதற்கு அம்பாள் கருணை காட்டுவதற்கு வழியாகும். இக்குளம் கட்டும்போது ஆரம்ப காலத்தில் களஞ்சிய பொறுப்பாளராகக் கடமையாற்றியவர் சிவயோகர் சுவாமிகள் அக்காலத்தில் குளக்கட்டு 18 அடி உயரமாக கட்டப்பட்டிருந்தது வரம்புயர நீருயரும் நீருயர நெல் உயரும் நெல் உயர குடியுயரும், குடியுயர கோனுயரும் என்பது முதுமொழி அம்பாளுக்கு அபிடேகம் பூஜை வழிபாடு முறையாக செய்தால் குளத்தில் நீருயரும் நீருயர்ந்தால் கிளிநொச்சியில் நீர்பெருகும் பகுதியெல்லாம் நெல் விளையும். இக்கோயில் அமைப்பதற்கு அடியார்கள் சேர்ந்து யோகர்சுவாமிகளிடம் முறையிட்டபோது மேற்கு பக்கமாக பாரிய விருட்சமொன்றுள்ளது, அதில் கருடன் குடிகொள்வார், அவ்விடத்தில் கற்பக்கிருகத்தையமைக்க திருவாக்கருளி சித்திராப் பூரணை விரததினத்தில் பொங்கலிட்டு பிரார்த்தனை செய்தால் சைவசமய மக்களுக்கு எழுச்சியுண்டு பண்ணும் ஆரம்ப கும்பாபிஷேக குடமுழுக்குவிழா பொன்னுச்சாமி குருக்களும் இரண்டாவது குடமுழுக்கு விழாவை நயினாதீவு பரமேஸ்வர குருக்கள் அவர்களும் நடாத்தப்பட்டு அன்றைய தினம் அம்பாளுக்கு அபிஷேகம் செய்யும்போது வருண பகவான் தன்னுடைய ஆனந்தத்தை அருள் பொழிந்தார் (மழை பொழிந்தது) விஷேட நைவேந்திய தினத்தில் நேர்த்தியை நிறைவு நெய்வதற்கு பாட்டுக் காவடி, பால் காவடி, பறவைக் காவடி, தூக்குக் காவடி, செடில் காவடி, பால் செம்பு மகளிர் எடுப்பது கற்பூர ஒளிச்சட்டி, ஆனந்தக் ஊத்து, கல்விமான்கள் மூலம் சமய சொற்பொழிவு பட்டிமன்றம் இன்னோரன்ன பெரும் காரியங்கள் பக்தி மார்க்கமாக நடைபெறுகிறது. மேலும் மூன்று தேர் பிள்ளையார், வள்ளி தெய்வானைசமேத முருகன் அம்பாள் சண்டேசுவரர் ஆகிய தேவர்கள் வீதி வலம் வருவதுடன் அடியார்கள் ஆண்கள் பிரதட்டை செய்வதும், பெண்கள் அடியழித்து வருவதும் கண்கொள்ளாகாட்சியாகும் தற்போது

30.01.2012 புனரமைப்பு இந்திய சிற்பாசிரியர் மூலமாக செய்து கோலாகலமாகவும் பக்திப் பூர்வமாகவும் விழா நிறைவேறியது. சிவஸ்ரீ ஆதி சௌந்தரராஜக் குருக்கள் விழாவை நிறைவேற்றி வைத்தார். மேலும் நீர்ப்பாசன இலாகாவின் பணிகள் அளப்பரியது.

மேன்மேலும் பணிகள் தேவைப்படுகிறது இவ்வாலயத்தை முன்னேற்றுவதற்காகவே படித்த வாலிபர்களுக்கு திருவையாற்று திட்டமென்றும் கனகபுரம் திட்டமென்றும் கனகாம்பிகை குளதிட்டமென்றும் உருவாக்கி குடியேற்றி நச்செய் என்றும் புன்செய் என்றும் பெருவாழ்வு வாழ வழிசமைத்து 1973–1983 வானம் சுருங்கி (மழை பெய்யாதிருக்க) அகண்ட நாம பஜனையுடன் அம்பாளுக்கு விஷேட அபிஷேகம் யாகம் இவைகளை நிறைவு செய்து, வருண பகவானை இரங்கச் செய்து, பூமியை குளிரச்செய்தது விரிவுக்கு அஞ்சுகிறோம் பூரணப்படுத்துகிறோம், அம்பாளுடைய கருணை யாவருக்கும் கிடைக்க பிரார்த்திக் கின்றோம்.

"அன்னையைத் தொழுவார் அதிக வரம் பெறலாம்"
"சக்தியை தொழுதால் அமோக சக்தியைப் பெறலாம்"
"சாவித்திரியைத் தொழுதால் சாகா வரம் பெறலாம்"
"துர்க்கையைத் தொழுதால் எடுத்த கருமம் கைகூடும்"
"சகல கலாவல்லியை தொழுதால் மாபெரும் அறிவாளியாகலாம்"

எனவே அன்னையே உலகத்தை உய்விக்கிறவள். நல்வழி காட்டுபவள் ஆலய அறங்காவலர் சபைக்கு நன்றி கூறி, நிறைவு செய்கின்றோம்.

ஓம் தத் ஸத் சாந்தி

தவத்திரு கணேசானந்த மகாதேவ சுவாமிகள்,
மகாதேவ ஆச்சிரமம்,
ஜெயந்தி நகர்,
கிளிநொச்சி.



# ஆலய குருவின் ஆசிச்செய்தி



வன்னிப் பெருநிலப்பரப்பின் கிளிநொச்சி மாவட்டத்தில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என மூன்றையும் தன்னகத்தே கொண்டு இரணைமடுக்குளத்தின் மேல் வீற்றிருந்து அரசாட்சி புரிந்து கொண்டு இருக்கும் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகி ஆதிபராசக்தியாம் அன்னை கனகாம்பிகை அம்பாளுக்குத் தை மாதம் அஸ்வினி நட்சத்திரமும் ஸ்ப்தமி திதியும் சித்தயோகமும் கூடிய சுபமுகூர்த்தத்தில் மஹா கும்பாபிஷேகப் பெரும் சாந்திப் பெருவிழா இடம்பெற்றமை நாம் மட்டுமன்றி உலகிலே வாழும் சகல இந்துக்களும் செய்த மிகப்பெரிய பாக்கியம் என்று தான் சொல்லவேண்டும்.

பல சொல்லொணாத்துயரங்கள், கஷ்டங்களுக்கும் மத்தியில் மழை, வெயில் பாராது அம்பாள் ஆலயத்தைப் புனராவர்த்தனம் செய்யவேண்டுமென்று அரும்பெரும்பாடு பட்ட ஆலய அறங்காவலர் சபையினருக்கும், ஆலயத்தைக்கட்டிய ஸ்தபதிமாருக்கும், வர்ணவேலை செய்தோர். உள்ளூர், வெளியூர்களில் இருந்து நிதி, பொருள், சரீர உதவிபுரிந்தோர் மட்டுமின்றி, கும்பாபிஷேகத் தினத்தில் மங்களவாத்தியம் வாசித்தோர், பூமாலை அலங்காரம் செய்தோர், இந்நூலை அச்சிட்டுத்தந்த அச்சகத்தார், இவ்வுலகில் வாழும் அனைத்து மக்களும் சாந்தி, சமாதானத்துடன் சுபீட்சமாக வாழ எல்லாம்வல்ல அன்னை கனகாம்பிகை அம்பாளின் பொற்பாதக் கமலங்களில் பணிந்து, எதிர்காலங்களில் நடைபெறுகின்ற திருப்பணி வேலைகளிலும், சமயப்பணிகளிலும், சமூகப்பணிகளிலும் தங்களுடைய ஒத்துழைப்புக் கிடைக்க வேண்டுமெனக் கேட்டு எனது நல்லாசிகளைச் சமர்ப்பிக்கின்றேன்.

"லோகா சமஸ்த்தா சுகினோ பவந்து"
அன்னையின் அருள் அகிலமெல்லாம் பரவட்டும்.

ஆலய ஸ்தானிக குரு
கிரியா பூசணம், கிரியாசாகரம்
சிவஸ்ரீ கணேச ஜெனார்த்தனக்குருக்கள்.



## ஆசிச்செய்தி

இந்துமதத்தின் வரலாற்றுப் பெருமைமிக்க இரணைமடு திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் திருக்கோயிலின் மஹாகும்பாபிஷேகம் 30.01.2012 அன்று அம்பிகை அருளால் சிறப்பாக நிறைவேறியது. அனைத்து அடியார்கள் மத்தியில் புத்துணர்வும், மகிழ்ச்சியும் கொண்ட மன நிறைவைத் தருகின்றது.

வேதாகமங்களின் துணையுடன் அனைத்துக் கலை அம்சங்களையும் உள்ளடக்கி கடவுளின் இலக்கணங்களை அறிவுபூர்வமாக நிரூபிக்க எமது முன்னோர் தெரிந்திருந்தனர். கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாத கண்ணையும் கருத்தையும் ஒளிர்விக்கின்ற மாபெரும் தத்துவமான கடவுள் பற்றி வேதங்கள் எமக்குக் கூறுகின்றன.

அனைத்து இயற்றைச் சக்திகளையும் ஜடப்பொருளில் உள்ள நீரில் அடக்கி மந்திய உச்சாடனத்துடன் விம்பத்தில் அபிஷேகிப்பதால் இறைவனின் தன்மைகள் விம்பத்தில் ஒளிர்கின்றது. மஹாகும்பாபிஷேகத்தின் குறிக்கோள் இதுவேயாகும்.

உலகம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையானது கடவுள் பற்றிய உணர்வுகள். உலகில் பல நாகரிகங்கள் தோன்றிய காலத்தில் நம் ரிஷிகள் கடவுளின் தத்துவம் குறித்து மிகத் தெளிவான பார்வை கொண்டிருந்தனர்.

அனைத்துக் கலை அம்சங்களையும் ஒருங்கே கொண்ட எமது இந்து மத வழிபாட்டில் சக்தி சொரூபமாக தாயாகவும், கன்னியாகவும் ஏக காலத்தில் காட்சிதர வல்ல அம்பிகை அருளால் தெய்வீகமான தன்னம்பிக்கை ஏற்படும். அறிவு புனிதமானதும், அறிவுள்ளதாகவும் விளங்கும். ஆழ்மனதில் எப்போதும் அமைதியும் மகிழ்வும் பூத்துக் குலுங்கும். துன்பம் நீங்கும்–இகழ்ச்சி புகழ்ச்சி நம்மைப் பாதிக்காது–மன நிறைவு தோன்றும்–உடல் புனிதமாகும்–காலத்தை வென்றவர்கள் ஆவோம். இதுவே இறைவழிபாட்டின் கோபுரமாக விளங்கும் குடமுழுக்கு விழாவின் பயனாகும்.

அம்பிகையின் குடமுக்கு விழாவைக் கண்டும் கேட்டும் தரிசித்து நிற்கும் மெய்யடியார்கள் எல்லோரும் அன்புள்ளவர்களாக, பண்புள்ளவர்களாக, நேர்மையுள்ளவர்களாக, சத்தியம் தவறாதவர்களாக, தீர்க்க ஆயுள் கொண்டவர்களாக, தீர்க்க சுமங்கலிகளாக, நல்வாழ்வு வாழ வேண்டுவதுடன் எம்மையெல்லாம் அம்பிகை இரட்சித்து அருளவேண்டும் என வேண்டி அம்பிகையின் திருத்தாழ் பணிகின்றேன்.

"அகிலமெல்லாம் அம்பிகையின் அருள் நாமமே சூழ்க வையகமும் துயர் தீர்க்கவே"
ஓம் சாந்தி சாந்தி சாந்தி

கிரியாதத்வ நிதி சிவஸ்ரீ கு. இரத்தினேஸ்வரக்குருக்கள்
*பிரதம சிவாச்சாரியார், அருள்மிகு கந்தசாமி கோவில், கிளிநொச்சி.*





## வாழ்த்துச் செய்தி

கிளிநொச்சி மாவட்டம், இரணைமடுப்பிரதேச கனகாம்பிகை அம்பாள் ஆலயத்தில் சிறப்புடன் நடைபெற்ற குடமுழுக்கு விழாவிற்கும் அதனை முன்னிட்டு வெளியிடப்படும் சிறப்பு மலருக்கும் எனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இறைவன் வீற்றிருந்து ஆன்மாக்களுக்கு அருள்பாலிக்கும் இடமாக ஆலயங்கள் விளங்குகின்றன. ஒவ்வொரு கிராமத்திலுள்ள ஆலயங்கள் அம்மக்களின் ஆன்மீக வாழ்வுக்கும், சமூகக்கலைகளின் வாழ்வியல் வளர்ச்சிக்கும் தளமாக அமைந்துள்ளன. இத்தகைய ஆலயங்களின் வரலாற்றிலும் விருத்தியிலும் அக்கிராமமக்களின் வரலாறும், விருத்தியும் தங்கியிருந்ததுடன் அவற்றை வெளிக்காட்டும் இடமாகவும் இருந்தன, இருக்கின்றன. அந்த வகையில் ஈழத்தின் முதன்மைச் சித்தரான யோகர்சுவாமிகளால் கிளிநொச்சி மாவட்ட மக்களுக்காக ஸ்தாபிக்கப்பட்டதே இவ்வாலயமாகும்.

இத்தகு பல சிறப்புக்களைக்கொண்ட அருள்மிகு கனகாம்பிகை அம்பாள் ஆலயத்தின் நான்காவது குடமுழுக்கு விழா இனிதே நடைபெற்றமை வாழ்த்துதற்குரியதாகும். குடமுழுக்கு விழாவை சிறப்புற நடத்திய ஆச்சாரியப் பெருமக்களுக்கும், செம்மையாக ஒழுங்கமைத்த ஆலய அறங்காவலர் சபையினருக்கும் எனது பாராட்டுக்களையும், வாழ்த்துக்களையும் தெரிவிக்கின்றேன்.

இவ்வாலயத்தில் சாந்தியும் சமாதானமும் நிலவி, எல்லோரும் இன்பமாக வாழ எல்லாம்வல்ல கனகாம்பிகை அம்பாள் அருள்புரிய வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன்.

**சாந்தி நாவுக்கரசன்,**
*பணிப்பாளர்,*
*இந்துசமய, கலாசார அலுவல்கள் திணைக்களம்,*
*கொழும்பு - 04*
*14-02-2012.*



## வாழ்த்துச் செய்தி

கிளிநொச்சி மாவட்டத்திலுள்ள மிகப்பெரிய குளம் இரணைமடுக்குளம். இக்குளத்து நீரைப் பயன்படுத்தி இம்மாவட்ட மக்கள் அதிக பயன்பெறுகின்றார்கள்.

இக்குளத்தின் அருகே அமைந்துள்ள திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில் குடமுழுக்கு நிகழ்ந்து மலரொன்று வெளிவருவதை எண்ணி, இப்பணியில் ஈடுபட்ட அனைவரையும் பாராட்டி வாழ்த்துவதில் அக மிக மகிழ்கின்றேன்.

**திருமதி றூபவதி கேதீஸ்வரன்,**
*அரசாங்க அதிபர்,*
*கிளிநொச்சி.*



## நான்காவது திருக்குடமுழுக்குடன் நாட்டில் நல்லவையெல்லாம் நடக்கட்டும்.



வட மாகாணத்தின் மிகமுக்கியமான காலத்தில் எல்லா வகையாலும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படும் கிளிநொச்சி மாவட்டத்தில் பாரியகுளமாகக் கணிக்கப்படும் இரணைமடு நீர்த்தேக்கரையில் அமைந்திருக்கும் பெருங் கோவிலான திருவள்மிகு கனகாம்பிகை அம்பாள் ஆலய திருக்குடமுழுக்கு திருவிழாக்காலம் பல நினைவுகளை மீட்டுத்தருகிறது.

பல காலமாக வாழ்ந்த முனிவர்களைப்பற்றி, சுவாமிகளைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கின்றோம். ஆனால் நம்மில் பலருக்கு கொழும்புத்துறையில் வாழ்ந்த தவத்திரு யோகர்சுவாமிகளைப் பற்றிக் கேள்விப்பட்டதோடு அவரோடு நெருங்கிப் பழகியவர்களையும் சந்திக்கக்கூடிய வாய்ப்புகள் கிடைத்திருக்கிறது. யோகர்சுவாமிகள் வழியாக நாளும் பொழுதும் படித்தின்புறக்கூடிய – வாழ்வை வளப்படுத்தக்கூடிய நற்சிந்தனைகளும், சிக்கலான வேளைகளிலும் மனதை இலேசாகக்கூடிய 'ஒரு பொல்லாப்புமில்லை எப்பவோ முடிந்த காரியம்' போன்ற வாக்கியங்களும் கிடைத்தி ருக்கிறது.

சுவாமிகள் கிளிநொச்சியில் கடமையாற்றியதாகவும், சிறந்த வழிபாட்டுத் தலமான 'திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் ஆலயமும் தவத்திரு யோகர் சுவாமிகள் ஆலோசனைப்படி அமைக்கப்பெற்ற ஆலயம் என்பது வரலாற்றுத் தகவல் மூர்த்தி தலம் தீர்த்தம் என எல்லாம் ஒருங்கமையப்பெற்ற சிறப்புகள் இவ்வாலயத்துக்குண்டு.

இரணைமடு நீர்த்தேக்கத்திலிருந்து பாசனத்தைப் பெறும் நிலம் பயிர்கள், செழித்து வளரும் நெல்வயல்கள் நிறைந்த பிரதேசமாகும். அந்தக்காலத்தில் அக்காணிகளில் பாரிய கட்டடங்களை அமைக்கவோ வேறு தேவைகளுக்குப் பயன்படுத்தவோ மக்கள் விரும்பவில்லை. பொன்முட்டை யிடும் வாத்து என்ற நம்பிக்கை நிலவியதால் நெற்செய்கைக்கும் பயிர்ச் செய்கைக்கும் மட்டும் பயன்படுத்தினார்கள். அதுவும் அம்பாள்அருள் தான் யோகர்சுவாமிகள் வாக்குக்கு மதிப்பளித்து ஆண்டு தோறும் அம்பாள் ஆலயத்தில் ஆயிரம் பானை வைத்து நடைபெறும் பொங்கல் விழாவும் தனிச்சிறப்பு வாய்ந்தாகும். நெல்வயல்கள் ஏனைய பயிர்வகைகள் மாத்திரமன்றி கால்நடைகளும் இப்பிரதேசத்தில் பெருகியுள்ளதால் பால்வளமும் நிறைந்த இடம் என்னும் சிறப்புக்கும் உரிய இடமாகத் திகழ்கிறது.

சில சந்தர்ப்பங்களில் சிலர் சொல்வதை உடனடியாக ஏற்றுக்கொள்ள தயங்கினாலும் காலப்போக்கில் அவை நடைபெறும்போது அவற்றை ஏற்றுக் கொண்டேயாக வேண்டும். அப்படி ஒரு சம்பவம் என் வாழ்விலும் நடந்தது. சிறுவனாக இருந்தவேளை தந்தையார் வேலைசெய்த கடைக்குச் செல்லுவேளைகளில் யோகர் சுவாமிகளைப் பார்த்திருக்கின்றேன். அவரது ஆற்றலைப்பற்றி பலர் சொல்லக்கேட்டி

ருக்கின்றேன். யாழ்.இந்துக்கல்லூரி மாணவனாக இருந்தபோது சிவதொண்டன் நிலையத்துக்கும் பின்னர் 60களின் இறுதிப் பகுதியில் மட்டக்களப்பில் கடமையாற்றிய போது செங்கலடிசிவதொண்டன் நிலையத்துக்கும் செல்லக்கூடிய வாய்ப்புக் கிடைத்தது.

1992 முதல் மூன்றாண்டுகள் வவுனியா அரச அதிபாராக கடமையாற்றி 1994ஆம் ஆண்டு கடைசியில் என்னை கிளிநொச்சிக்கு இடமாற்றிவிட்டார்கள். நான் கிளிநொச்சிக்குப் போவதா அல்லது போகாமல் விடுவதா என முடிவெதுவும் எடுக்க முடியாதநிலையில் கொழும்பு தமிழ்ச்சங்கச் செயலாளராக இருந்த தமிழவேள் கந்தசுவாமி அவர்களைச் சந்தித்தபோது, அவர் என்னிடம் "நீங்க கிளிநொச்சிக்கு போங்கோ. ஒரு நாளைக்கு யாழ்ப்பாண மக்களுக்கு கிளிநொச்சிதான் சாப்பாடுபோடும் என்று யோகசுவாமிகள் சொல்லி இருக்கிறார்" என்றார். அநேகமான சந்தர்ப்பங்களில் கிளிநோச்சி தொடராக போக்குவரத்து செய்பவர்களைக் கவனித்திருக்கின்றேன். பலவேளைகளில் கிளிநொச்சியில் தேநீர்கூட குடிப்பதில்லை. நிலைமை அப்படி இருக்கும்போது 'ஒரு நாளைக்கு யாழ்ப்பாண மக்களுக்கு கிளிநொச்சிதான் சாப்பாடுபோடும் என்று யோகர்சுவாமிகள் சொல்லியிருக்கிறார்" என கந்தசுவாமி மாஸ்ரர் சொன்னபோது அதை ஏற்றுக்கொள்ள சிரமப்பட்டேன்.

கிளிநொச்சி மாவட்டத்தில் கடமைகளைப் பொறுப்பேற்ற காலகட்டத்தில் ஒரு இலட்சத்துக்கும் சற்று அதிகமானோர் வாழ்ந்திருக்கலாம் என்பது எனது கணிப்பு 1995ஆம் ஆண்டின் நடுப்பகுதியில் யாழ்ப்பாண மாவட்ட பாரிய இடப்பெயர்வு வரலாறு காணாத தொன்று. அங்கிருந்து இடம்பெயர்ந்த இலட்சக்கணக்கானோரைத் தாங்கிக் கொண்ட மாவட்டம் கிளிநொச்சி அத்தனை பேருக்கும் வதிவதற்கு இடமும் புசிப்பதற்கு இடமும் மற்றும் தண்ணீரையும் அவசியத்தேவைகளையும் வழங்கியது.

ஏறக்குறைய ஒரு லட்சம் மக்கள் வாழ்ந்த பிரதேசத்தில், ஏழெட்டு லட்சத்துக்கு மதிகமானோர் திடீரென வந்தபோது தாங்கிக்கொள்வதற்கும் அம்பாளின் அநுக்கிரகம் கிடைத்தது.

1996ஆம் ஆண்டு கிளிநொச்சியில் கடமையாற்றிய காலத்தில் மூன்றாவது தடவையாக இரணைமடு திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில் திருக்குடமுழுக்கு வெகு சிறப்பாக நடைபெற்றது. அவ்வேளை ஓர் அற்புதம் நடைபெற்று அங்கிருந்தோரை ஆச்சரியத்திலும் ஆனந்தத்திலும் ஆழ்த்தியது. அந்த நிகழ்வு – வானில் இராஜளிப்பறவைகள் வட்டமாகப்பறந்து எல்லாவற்றையும் எல்லாம் வல்ல இறைவனே ஆசிர்வதிப்பது போன்ற அருட்டுணர்வை அங்கிருந்தோர் மத்தியில் ஏற்படுத்தியது.

கனகாம்பிகை அம்பாள் பெருங்கோவில் கோபுர உச்சியிலிருந்து ஊற்றப்படும் திருக்குட முழுக்கு நீர் மக்களுக்கு நம்பிக்கையை ஊட்டுகிறது. இந்நீராட்டு மேலும் எல்லவற்றையும் புனிதமாக்கி இறைசிந்தனையை வளர்த்து, நல்லவையெல்லாம் நடக்கவேண்டும் என்ற பெருவிருப்பை ஏற்படுத்துகின்றது.

உடுவை எஸ். தில்லைநடராசா,
*உறுப்பினர், பொதுசேவைகள் ஆணைக்குழு,*
*முன்னைநாள் கிளிநொச்சி அரச அதிபர்.*



## வாழ்த்துச் செய்தி



கிளிநொச்சி மாவட்டத்தில் வளம்மிக்க இரணைமடுப் பகுதியின் காவல் தெய்வமாகவும் அப்பகுதி மக்களுக்கும் ஆயிரக்கணக்கான அடியவர்களுக்கும் கனகாம்பிகை அம்பாள் ஆலயமானது நான்காவது திருக்குடமுழுக்கை இனிதே நிறைவுசெய்துள்ள நிகழ்வானது வரலாற்றுச் சிறப்புமிக்கதும் பெருமிதத்திற்குரியதும் ஆகும்.

1950களில் கிளிநொச்சியில் குடியேற்றத் திட்டங்கள் உருவாக்கப்பட்டு அபிவிருத்தி கண்டபோது தவத்திரு யோகர்சுவாமிகள் அவர்களின் உள்ளத்தில் உருவாகிய இக்கோயில் அப்போதைய யாழ் மாவட்ட அரசாங்க அதிபர் திரு.ம. சிறிகாந்தா அவர்களின் நெறிப்படுத்தலுடன் 22.01.1961ஆம் திகதி முதலாவது குடமுழுக்கினைக் கண்ட பெருங்கோயிலாகும்.

ஏறக்குறைய ஐம்பது ஆண்டு கால பழமையான வரலாற்றைக் கொண்டுள்ள இவ் ஆலயமானது இப்பிரதேசத்தில் சைவசமய பாரம்பரியங்களையும், பண்பாடுகளையும், வரலாற்று விழுமியங்களையும் கட்டிக் காத்துவருவதுடன் இப்பகுதி மக்களை சைவநெறி வழித்தடத்தில் இசைவாக்கம் பெற வழிகாட்டிய பெருமையும் இவ் ஆலயத்தினையே சாரும்.

பல்வேறு காலப்பகுதிகளில் சூழல் பாதிப்படைந்து ஆலயச் செயற்பாடுகள் முற்றாகத் தடைப்பட்டிருந்த நிலையில் மிகுந்த சிரமத்தின் மத்தியில் ஆலய அறங்காவல் சபையினர் புனரமைப்புச் செய்து கட்டியெழுப்பியதனையும் யான் நன்கு அறிவேன். ஆலய அறங்காவலர் சபையின் அயராத முயற்சிக்கு எனது பாராட்டுக்கள்.

இவ் ஆலயத்தின் சூழலைச் சுற்றிய இடங்களில் நெற் பயிர்கள் வான் பயிர்களென வளம்மிக்க பகுதியாகவும் கிராம மக்களது அபிவிருத்திக்கும் காவலாக இருந்து கரம் கொடுக்கும் கனகாம்பிகை அம்பாளின் புதுமைகள் சொல்லில் அடங்காதவை. இத்தலம் மேலும் பல புதுமைகளுடன் சைவநெறி வழுவாது மக்களைக் காத்து அடியவர்களை அரவணைத்து அருள்பாலிப்பதற்கு 30.01.2012 இல் இனிதே நிறைவுசெய்த நான்காவது குடமுழுக்குக்குப் பின்னரான சங்காபிஷேகப் பெருவிழாவினை யொட்டி வெளியிடப்படும் மலருக்கு எனது வாழ்த்துக்களை வழங்குவதில் மகிழ்வடைகின்றேன்.

நன்றி

**தி. இராசநாயகம்,**
*மகாதேவா ஆச்சிரமச் சிறுவர் இல்ல தலைவரும், முன்னாள் அரசாங்க அதிபரும்,*
*முன்னாள் வடமாகாண பொது நிர்வாகச் செயலக பிரதிப் பிரதம செயலாளரும்.*
*18.02.2012.*

## திருவருள்மிகு கனகாம்பிகை அம்மன் மலருக்கு மனமார்ந்த வாழ்த்து



இந்து ஆலயங்கள் மக்களுக்கு ஆன்மீக தத்துவங்களைப் புரிந்துகொள்ள வைப்பதாகவும் தமிழ்ப் பாண்பாட்டு மரபுகளை பாதுகாக்கும் நிலையங்களாகவும் விளங்குகின்றன. எமது இளம் சந்ததியினரிடையே சமய, கலை, கலாசார விழுமியங்கள் மீதான நம்பிக்கையை ஏற்படுத்துவதாகவும் அமைகின்றது. இவ்வாறான நிலையில் மிகவும் உயர்ந்த பணிகளைச் செய்துவரும் ஆலயங்களைப் புனரமைப்பதும், கும்பாபிஷேகம் செய்வதும் அதனைப் பராமரிப்பதும் ஒவ்வொருவரதும் கட்டாயமான கடமையாகும்.

அம்பிகை கருணையே வடிவமானவள். அம்பிகையின் அருட்பார்வை கிடைத்துவிட்டால் சகல செல்வங்களையும் நாம் பெற்று விடலாம். "அம்பிகையைச் சரணடைந்தால் அதிக வரம் பெறலாம்" என்ற மகாகவியின் வாக்கிற்கு அமைய அடியார்கள் அனைவரும் கனகாம்பிகை அம்பிகையின் திருத்தலத்தை நாடி வந்து வணங்கி இம்மையிலும் மறுமையிலும் நற்பயனை பெற்று நல்வாழ்வ வாழ எல்லாம் வல்ல அம்பிகையைப் பிரார்த்திக்கின்றேன்.

திருவருள்மிகு கனகாம்பிகை அம்மன் ஆலயத்தின் கும்பாபிஷேகத்தைச் சிறப்புற நடாத்திய சிவாச்சாரியார்களுக்கும், ஆலய பரிபாலன சபையினருக்கும் எனது பாராட்டுக்களையும், வாழ்த்துக்களையும் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகின்றேன்.

**திருமதி விமலேஸ்வரி சிறிஸ்காந்தரூபன்,**
*வடமாகாணப் பணிப்பாளர்,*
*தேசிய இளைஞர் சேவை மன்றம்.*



## இரணைமடு கனகாம்பிகை அம்பாள் திருக்குடமுழுக்கு விழா வாழ்த்துச் செய்தி



கிளிநொச்சி வாழ் மக்களின் வாழ்வின் ஆதாரமாக விளங்கும் இரணைமடுக் குளத்தின் மேற்குப்பக்கமாக எழுந்தருளியிருக்கும் கனகாம்பிகை அம்மனுக்கு திருக்குடமுழுக்கு விழாநடைபெறுவதையிட்டு நான் பேருவகையடைகின்றேன்.

மேலும் யாழ்ப்பாணச் சித்தர் பரம்பரையில் வந்தவரும், எமது திணைக்களமான நீர்ப்பாசனத் திணைக்களத்தில் களஞ்சியக் காப்பாளராக கடமையாற்றியவருமான யோகர்சுவாமிகள் அவர்களின் மனதில் தோன்றி, உருப்பெற்று இன்று வானுயர்ந்த தோற்றத்தில் நிற்கும் இந்த ஆலயத்திலே வீற்றிருக்கின்ற அம்பாளுக்கு நடைபெறும் நான்காவது திருக்குடமுழுக்கு விழாவினை முன்னிட்டு வெளியிடப்படும் இம்மலருக்கான வாழ்த்துச் செய்தியை வழங்குவதற்கு கிடைத்த இந்த வாய்ப்பினை பெரும்பேறாகவே எண்ணுகின்றேன்.

உண்மையிலே, மக்களின் துயர்துடைக்கும் அருள் நிலையங்களாகவே ஆலயங்கள் விளங்குகின்றன. அந்தவகையிலே, கிளிநொச்சி மக்களின் துயர்துடைத்து அருள் பாலித்துக் கொண்டிருக்கும் அம்பாளிற்கு காலத்திற்குக் காலம் மேற்கொள்ளப்பட வேண்டிய அனுட்டானங்களும், விழாக்களும் தங்குதடையின்றி சிறப்புடன் நடைபெற வேண்டும். அப்போது தான், பல வகைகளிலும் துயரத்தை அனுபவித்த கிளிநொச்சி வாழ் மக்களாகிய அன்னையின் அடியவர்கலெல்லாம் துன்பப் பிணிகளெல்லாம் நீங்கி, உடலிலும் உள்ளத்திலும் திடமான சக்தியைப் பெறக்கூடிய அன்னையின் அருட்கடாட்சம் கிடைக்கும்.

இந்த அம்பாளின் திருக்குடமுழுக்கினை மெய்யன்போடு கண்டுகளிக்கும் அடியவர்கள், பாவவினைகளெல்லாம் அகன்று, சகல நன்மைகளையும் பெறவேண்டுமென அன்னையை வேண்டிக்கொண்டு, அம்பாளின் திருக்குடமுழுக்கு விழா சிறப்புற நடைபெற, அன்னையின் பாதாரவிந்தங்களை வணங்கி நல்லாசிகளையும், வாழ்த்துக்களையும் தெரிவிக்கின்றேன்.

"என்றும் ஓங்குக அன்னையின் அருள்"

**எந்திரி ந.சுதாகரன்**
*பிரதி நீர்ப்பாசனப் பணிப்பாளர்,*
*கிளிநொச்சிப் பிராந்தியம்.*

## வாழ்த்துச் செய்தி
## அன்னையின் பாதங்களில்



கிளிநொச்சி மாவட்டத்தின் பிரதான கற்பகதருவாக விளங்குவது இரணைமடுக்குளம் ஆகும். அந்தக் குளத்தின்தாய் என்ற வகையிலும், காவல்தெய்வம் என்ற வகையிலும் இப்பிரதேச மக்களால் பக்தியோடு போற்றப்படும் தாய்த்தெய்வம் தான் கனகாம்பிகை அம்பாள்.

இக்கோயில் யாழ்ப்பாணத்துசித்தர் பரம்பரையில் முதன்மையானவரான யேகர் சுவாமிகளின் வழிகாட்டலில் இக்கோயிலின் மூலமூர்த்தி, மூலமூர்த்தியின் நாமம், பொதுமக்கள் பங்கெடுக்கும் பொங்கல் எல்லாம் அமைந்துள்ளதென்பது கோயில் வரலாறு தரும் உண்மை.

தமிழர் நாகரிகங்களும், சமயங்களும் நதிக்கரையோரங்களில் இருந்து ஆரம்பித்தன என்பதற்கு சான்றுபகரும் வகையில் யோகர்சுவாமிகளின் அறிவுறுத்தலின்வழியே குளத்தின் காவல் தெய்வமாக அருள்பாலித்துக் கொண்டிருக்கும் அம்பாளுக்கு நன்றிக்கடனாக ஆயிரம் பானைகளில் பொங்கல் செய்யப்படுகின்றது. இஃது இளங்கோவடிகளின் சிலப்பதிகாரக் கதையில் வருகின்ற காவேரித்தாயுக்கு விழா எடுப்பது போன்ற கடலாடுகாதையினை நினைவூட்டுகின்றது.

இரணைமடுத்தாயின் திருக்குடமுழுக்கு விழாவினைக் கண்ட பல்லாயிரம் அடியவர் களுள் யானும் ஒரு அடியவனாக மனம் மகிழ்வடைகின்றேன். அக்குடமுழுக்கு விழாவில் வெளியிடப்படுகின்ற மலருக்கு அரசஅதிகாரியாக மட்டுமல்லாது, அன்னை யின் அடியவன் என்றவகையில் வாழ்த்துச் செய்தி தருவதில் அகமகிழ் வடைகின்றேன்.

அன்னையின் ஆலயம் இத்தனை சிறப்பாக திருக்குடமுழுக்கு காண்பதற்கு அதன் ஆலய நிர்வாகமே திறம்பட்ட முறையில் இயங்கி வருகின்றது. ஆலயங்களின் நிர்வாகத்திறனே அவ் ஆலயத்தினையும், அதனோடு இயைந்த ஆன்மீகச் செயற்பாட்டினையும் வளர்க்கும் என்பதற்கு இம்முயற்சி சிறந்ததொரு எடுத்துக் காட்டாகும். எனவே இம்மலருக்கு வாழ்த்துத் தெரிவிப்பதோடு இச்செயற்பாட்டினைத் திறம்பட முன்னெடுக்கும் நிர்வாகத்தினையும் வாழ்த்தி அமைகின்றேன்.

**திரு. கோ. நாகேஸ்வரன்,**
*பிரதேச செயலர், கரைச்சி*



## வாழ்த்துச் செய்தி

மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் ஒருங்கே அமையப்பெற்ற இரணைமடு திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில் அறங்காவலர்சபையால் குடமுழுக்கு மலர் வெளியிடப்படுவது குறித்து பெருமகிழ்ச்சியடைகிறேன்.

இவ்வாயலம் சைவமும், தமிழும் சிறப்புற விளங்க கடந்தகாலங்களில் ஆற்றிய பங்கு சிறப்பானது, போற்றத்தக்கது.

எதிர்காலத்திலும் சைவமும், தமிழும் மேலும் வளர்ச்சி பெறவும், காலத்தின் தேவைகருதி சமயப்பணியுடன் நின்றுவிடாது பெற்றோர்களை இழந்த எம்சிறார்கள் தொடர்பிலும், ஆதரவற்றுக் காணப்படும் எம்முதியவர்கள் தொடர்பிலும், அவர்களது வாழ்வில் நம்பிக்கைகளையும், ஆறுதல்களையும் வழங்கத்தக்க சமூகப் பணியிலும் இவ்வாலய சமூகம் மற்றைய சமய நிறுவனங்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்க வேண்டுமென வாழ்த்துவதுடன். அதற்கு வேண்டிய சக்தி இப்பெருங்கோயில் அறங்காவலர்சபைக்குக் கிடைக்கவேண்டுமெனப் பிரார்த்திப்பதுடன் இக்கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயிலின் அறங்காவலர்சபையால் வெளியிடப்படும் குடமுழுக்கு மலர்சிறப்புற அமைய எனது வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. பெ. சிவகுமார்,**
*மாவட்ட நீதிபதி,*
*கிளிநொச்சி.*



## வாழ்த்துச் செய்தி

அருவாய் உருவாய் உளதாய் இலதாய் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைசக்தியை உருவத்திருமேனியில் ஆவாகனம் செய்து அடியார்களுக்கு அருள்பாலிக்க ஆலயத்தில் செய்யப்படுவதே மஹாகும்பாபிஷேகம் எனலாம். கிளிநொச்சி மாவட்ட மக்களின் வாழ்வியலுக்கு உயிர்நாடியான இரணைமடுகுளத் தருகிலிருந்து அருளாட்சி புரியும் கனகாம்பிகைத்தாய் அன்புசொரிந்து, கருணை கொண்டு செய்பிழைபொறுத்து மன்னித்து, அன்னை அனைவருக்கும் நல்வழிகாட்ட பிரார்த்திப்போமாக. இந்த மாவட்டத்தில் கடமையாற்றுகின்ற காலப்பகுதியில் அன்னையைத் தரிசிக்கின்ற வாய்ப்பைப் பெற்றமையை பெரும்பேறாக கருதுகின்றேன்.

அழகுறு ஆலயமும், அதுபற்றிய குடமுழுக்கு மலரும் அன்னையின் அருளை அகிலமெல்லாம் எடுத்துச் செல்வதாக நிமிர்ந்து எழவும், குடமுழுக்கு நிகழ்வு மக்களது மனதில் புத்துணர்வையும், புதுநம்பிக்கையையும் ஏற்படுத்தக்கூடியதாக அமையட்டும். அன்னையின் அருள் அகிலமெல்லாம் பரவட்டும், அறங்காவலரின் பணிதொடரட்டும்.

**"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"**

**திரு.அ. செல்வராசா,**
*பிரதி விவசாயப் பணிப்பாளர்,*
*கிளிநொச்சி.*



## இரணைமடு கனகாம்பிகை அம்பாளும்...
## கிளிநொச்சி நீர்ப்பாசனத் திணைக்களமும்....



கிளிநொச்சி மாவட்டத்தில் கனகாம்பிகை என்றாலே நினைவுக்கு வருவது இரணைமடுக்குளமும், யாழ்ப்பாண சித்தர் பரம்பரையின் தவமுதல்வர் யோகர் சுவாமிகளுமே. இவ்விரு நினைவுகளுமே கிளிநொச்சி நீர்ப்பாசன திணைக் களத்துடன் இரண்டறக் கலந்தவையே. 1901ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட நீர்ப்பாசன திணைக்களத்தினால் இலங்கைத்தீவில் முதல் முதலாக கட்டப்பட்ட குளமே இரணைமடுக்குளம். இலங்கை தீவில் காணப்படும் பாரிய நீர்ப்பாசனக் குளங்களில் இரணைமடுக்குளமும் ஒன்று. வடமாகாணத்தின் மிகப்பெரிய நன்னீரேரியான இரணைமடுக்குளத்தின் குடதிசையில் (மேற்குத் திசையில்) குளத்தை நோக்கியபடி அமைந்திருக்கின்றது இவ்வாலயம். இங்கு மூலமூர்த்தியாக அமர்ந்து இக்குளத்தை மட்டுமல்லாது இக்குளத்தை நம்பியிருக்கும் வட்டக்கச்சி, இராமநாதபுரம், திருவையாறு, பரந்தன், ஊரியான், உருத்திரபுரம் பிரதேசங்களையும் காத்தருள்கின்றார் கனகாம்பிகை அம்பாள் என்றால் மிகையாகாது. இதுவரை மூன்று குடமுழுக்குகளை சிறப்புற நிறைவு செய்ததுடன், கோயில் ஆரம்பிக்கப்பட்டு 50 ஆண்டுகளின் பின்னர் நான்காவது திருக்குடமுழுக்கை 30.01.2012 இல் திகதி இனிதே நிறைவுசெய்து அடியார்கள் அனைவருக்கும் அம்பாள் அருள்மழை பொழிந்தவண்ணம் அருள்பாலித்துக் கொண்டிருக்கின்றார்.

இக்கால கட்டத்தில் நீர்ப்பாசனத் திணைக்கள கிளிநொச்சிப் பிரிவில் நான் கடமையாற்றுவதையிட்டு பேரானந்தம் அடைவதோடு, அம்பாளின் அருள் ஆசிகள் அம்மாவட்ட மக்கள் அனைவருக்கும் கிடைக்கப்பெற வேண்டும் என்பதோடு இத்திருக்குடமுழுக்கு மலர்க் குழுவினருக்கு எனது வாழ்த்துச் செய்தியினைத் தருவதில் அகமகிழ்வடைகிறேன். அத்தோடு இவ்வாலய அறங்காவலர் சபைக்கும், மலர் குழுவினருக்கும் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

நன்றி

**எந்திரி.சி.விகிர்தன்,**
*நீர்ப்பாசனப் பொறியியலாளர்,*
*கிளிநொச்சிப் பிரிவு,*
*கிளிநொச்சி.*

# வாழ்த்துச் செய்தி



"அம்பிகையைச் சரணடைவோம் அதிக வரம் பெறுவோம்"

யாழ்ப்பாணச் சித்தர் பரம்பரையின் தவமுதல்வர் தவத்திரு யோகர் சுவாமிகளின் உள்ளத்தில் உதித்து உறைவிடமும், நாமமும் பெற்று அருள்பாலிப்பவள் எமது கனகாம்பிகை அம்பாள்.

கனகாம்பிகைக்குளம், இரணைமடுக்குளம். மம்மில்குளம், கறுப்பிகுளம், கிளிநொச்சி. நகர்க்குளம் என ஒரு வட்டகையை குளங்களால் வடிவமைத்து உச்சமான உயரத்தில் அமர்ந்திருந்து கிழக்கே சேத்துகண்டி அம்பாள், மேற்கே பொறிக்கடவை அம்பாள், தெற்கே மாவடி அம்பாள் வடக்கே தட்டுவன்கொட்டி அம்பாள் என தனது சக உதிரங்களைக் காவல் வைத்து அருளாட்சி செய்பவள் எமது கனகாம்பிகை அம்பாள் இது அருளாளர்கட்கு மட்டும் புரியும்.

வடக்கின் விளைநிலம் வன்னி என்பார்கள். வன்னியின் கேந்திரம் கிளிநொச்சி கிளிநொச்சியின் செல்வம் செந்நெல் விளைநிலமும், பொங்கிப் பிரவாகிக்கும் புனலும் அவை ஒருங்கே பெற்றது கிளிநொச்சி. செந்நெல், கோகுலம், இரண்டுக்குமான உயிர் நாடியானது இரணைமடுக்குளம். அதற்குக் காவலாய் அமர்ந்திருப்பவள் எமது கனகாம்பிகை.

அன்னதானக் கந்தனாக எனது குலதெய்வம் சந்நிதியானைக் கண்டேன். வன்னியில் அன்னதானத்துக்கு அம்மாவாக கனகாம்பிகையைக் காண்கிறேன். அரிசியையும், பாலையும் உவந்தளித்தவள் தன் இருப்பிடத்தில் வைத்தே பசி தீர்த்து அருள்பாலிக்கின்றாள்.

இரணைமடு நீரிணை சிறுபோகத்துக்காக வழங்கப்படும் போது "கல்வி நிதி" ஒரு வஞ்லிப்பை அம்பாளின் நாமத்தால் பெறுகின்றோம். அதை கல்விக்கான முதலீடாக வைத்து கல்வி வளர்ப்பதிலும் அம்பாளின் அடியவர்கள் முனைப்புக் காட்டுவது பெருமகிழ்வைத் தருகின்றது. கல்விப் பணிப்பாளர் என்றவகையில் அந்தக் காரியம் பற்றி அறியவும், பங்காற்றவும் ஆவலுடன் இருக்கின்றேன்.



அம்பாளுக்கு நாம் எடுக்கும் திருக்குடமுழுக்கு ஈழத்தமிழ் இனத்துக்கான விமோசன முழுக்காக அமையட்டும். எமது துன்பங்கள், துயரங்கள், அவலங்கள் அனைத்தும் அகலட்டும். அம்பிகையின் அருட்கடாட்சத்தால் எம் இனம் வாழ்வும் வளமும் பெற்று வாழ்வாங்கு வாழ அருள் கிடைக்கட்டும்.

குடமுழுக்கை நெறிப்படுத்தும் குரவர்கள், அறங்காவலர்கள், அடியவர்கள் அனைவருக்கும் கிளிநொச்சி வலயக் கல்விப் பணிமனையின் சார்பில் எமது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

கனகாம்பிகை அம்பாளின் இருப்பை நாம் அனைவரும் நிலைநிறுத்த வேண்டியவர்களாக உள்ளோம். அதற்காகப் பாடுபடுவோம்.

"அம்பிகை கடாட்சம் அனைவருக்கும் சுபீட்சம் ஆகட்டும்.
அம்பிகையின் திருவருளாளர்"

திரு.க. முருகவேள்,
*வலயக் கல்விப் பணிப்பாளர், கிளிநொச்சி.*



## கிளிநொச்சி மாவட்ட விவசாய சம்மேளன
## வாழ்த்துச் செய்தி

காத்தருள்வாய் – கனகாம்பிகை

இரணைமடுக் குளத்தைப் பார்த்த வண்ணம் அமர்ந்திருக்கும் தாயே – சொல்லொணாத் துயரத்தில் இருந்து எம்மையெல்லாம் காப்பாற்றியதோடு – உன்னுடைய ஆவணங்களையும் – பொக்கிஷங்களையும் காப்பாற்றி அதே இடத்தில் அமர்ந்து குடமுழுக்கும் பெற்றுவிட்டாய். மலரொன்றையும் வெளியிடுவதற்கு அருள் பாலித்துள்ளதால் இப்பணிகளை மேற்கொண்டு பணியாற்றிவரும் அறங்காவலர் சபையை மதித்து நிற்கிறோம்.

இம்மலரை வெளியிட்டு வைப்பதில் கிளிநொச்சி மாவட்ட விவசாயிகள் சார்பாக வெகு மகிழ்வடைகிறேன். இது ஒரு பொத்தகம் அல்ல – அதன் வடிவில் அவள் வீற்றிருக்கும் ஒரு மலர்.

தாயே உன் சேய் நான் – இரட்சிப்பாய்.

செல்லையா சிவப்பிரகாசம்
தலைவர்,
*கிளிநொச்சி மாவட்ட விவசாய சம்மேளனம்,*
*கிளிநொச்சி.*



## நூல் அறிமுகம்

கோவில் வழிபாட்டிற்கு உரித்தாக்கப் பட்டு ஐம்பதுஆண்டுகள் நிறைவாகியுள்ள இத்தருணத்தில், அன்னைக்கு தொடர்ந்து நிகழ்ந்த நான்கு திருக்குட நன்னீராட்டு விழாக்களில் அரிய பேரருளைப் பெற்றுள்ள இவ்வேளையில், இந்நூல் வெளிவருவது ஓர் அருமையான நிகழ்வே. 50 ஆண்டுகள் ஒரு கோயிலின் வரலாற்றில் பெரிய தாக்கங்களை ஏற்படுத்தக்கூடிய காலம் அல்ல. இருந்தாலும் கடந்த50ஆண்டுகாலத்தில் அறங்காவலர் சபைசெய்த அளப்பரிய பணிக்கோலங்களை, நிதிப்பயன்பாட்டு நியமங்களை மதிப்பீடு செய்யகோயில் அலுவலகத்தில் ஆவண மேதும் இல்லாதநிலையில், இக்குறை பாடுகளை நியாயமான அளவில் நிறைவு செய்யத்தக்க சான்றாக, இந்நூல் அமைய வேண்டும் என்பது அறங்காலவர் சபையின் அடிப்படைக் கோட்பாடு. அத்தோடு அம்பாளினுடைய பேரருளை வெளிக் கொணரும் ஆக்கங்களைக் கொண்டதாக இந்நூல் அமையவேண்டும் என்பதே பெரு விருப்பு.

இத்தகைய இலக்குடனே நாம் இப்பணியில் ஈடுபட்டோம், ஆக்கந்தரக் கூடியவர்களை அணுகினோம். நாம் தொடர்பு ஏற்படுத்திய அத்தனைபேரும், எமது இலக்கை மனதில் நிறுத்தியே தமது ஆக்க வடிவங்களைத் தந்துள்ளனர். ஆசிச்செய்திகள், வாழ்த்துச் செய்திகள், கட்டுரைகள், பாவினங்கள் வழங்கிய அத்தனை உள்ளங்களையும் நன்றி உணர்வோடு வணங்கி வாழ்த்துகிறோம். அம்பாளினுடைய அருள் அவர்களுக்கு நிறை வாகக்கிட்ட வேண்டுகிறோம்.

இந்நூல் வெளியிடும் பணியில் முழுமையாகத் தம்மை ஈடுபடுத்திய நூல் வெளியீட்டுக் குழுவினருக்கும், இந்நூலுக்குக் கிடைத்த அனைத்து ஆக்கங்களையும் செவ்வை பார்த்துதவிய அறங்காவலர்சபை யினருக்கும், இந்நூலை செவ்விய அழகிய நூலாக அமைத்துத்தந்த கரிகணன் பிறிண்டேர்ஸ் (தனியார்) நிறுவனத்திற்கும், இந்நூலில் வெளியிடவென தாராளமான விளம்பரங் களைத் தந்துதவிய வணிகப் பெருமக்களுக்கும் இந்நூல் மிகக்குறுகிய காலத்தில், மிகச் சிறப்பாக வெளிவருவ தற்கு நேரடியாகவும், மறை முகமாகவும் ஒத்துழைப்பு வழங்கிய அனைவரிற்கும் அம்பாளினுடைய அருள் நிறைவாகக் கிடைக்க வேண்டி வழிபடுகிறோம்.

**அம்பாளின் அருள் அகிலமெல்லாம் ஆளும்.**

**திரு.நா. சோதிநாதன்**
தலைவர்,
நூல்வெளியீட்டுக்குழு.

ஓம் சக்தி

# அறங்காவலர் சபை தலைவர் அறிக்கை

" கனிந்தேயுனது திருவடித்தாமரை காதலித்து
புனைந்தேத்துபவர் அல்லாது செய்யினும் புந்தியில்
நினைத்தார் அளிப்பது கண்டு கொண்டேன்
தினந்தோறும் கடைக்கண்ணால் அருள் செய் கனகாம்பிகையே"

(என அம்பிகையை வணங்கி) கடந்த ஐம்பது ஆண்டுகளில் அம்பாளுக்கு நான்கு திருக்குடமுழுக்கு விழாக்கள் நடைபெற்றுள்ளன என்ற மகிழ்வோடும், இப்போது நடந்தேறியுள்ள திருக்குடமுழுக்கு கோயில் அமைப்பில் உபயகாரர்கள், வழிப்பட்டாளர்கள்,ஏற்றுக்கொள்ளக்கூடிய மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றது என்ற நிறைவோடும் இவ்வறிக்கையை சமர்ப்பிக்கின்றேன்.

மக்கள் மீளக்குடியமரத் தொடங்கிய வேளை இராணுவ தளபதி எம்மை அழைத்து கோயிலைப் பொறுப்பேற்கும் படியும், கோயிலில் பூசைகள் நடைபெற ஏற்பாடு செய்யுமாறும் பணித்தார். இந்நிலையில் ஒன்று கூடக்கூடிய அறங்காவலர் சபையினர் 10.01.2010 அன்று வவுனியாவில் கூடி நிலைமைகளைப் பரிசீலித்தனர். அப்போது மூத்தசிவாச்சாரியாரினதும், இந்து சமயப் பண்பாட்டலுவல்கள் திணைக்களத்தினதும் ஆலோசனையைப் பெற்று நடவடிக்கை எடுப்பதென தீர்மானிக்கப்பட்டது. மூத்த சிவாச்சாரியார்களை அணுகியபோது வருடக் கணக்காக பூசைவழிபாடு ஏதும் நடைபெறாதிருந்த கோயில் என்பதால், பாலஸ் தாபனம் செய்து குடமுழுக்குச் செய்வதுதான் உகந்தது என அறிவுரை வழங்கினர். இந்துசமயப் பண்பாட்டலுவல்கள் திணைக்கள பணிப்பாளரும் இதேகருத்தை கடிதம்மூலம் வழங்கியிருந்தார்.

இவ்வறிவுறுத்தல்களுக்கு அமைவாகச் செயற்பட நாம் கோயிலுக்கு வந்து பார்வையிட்டபோது பெருங்கவலையாகவிருந்தது. இந்தநிலையில், அசாதாரண சூழ்நிலையில் புளியம்பொக்கணைக் கோயிலில் வைத்த எழுந்தருளி விக்கிரகங்களை தேடுவதும், கோயிலுக்குக் கொண்டு வந்து சேர்ப்பதும் பெரும்பணியாக இருந்தது. வள்ளி தெய்வானை உறைமுருகன் விக்கிரகம் அங்கு கிடைக்கவில்லை. அம்பாளினுடைய விக்கிரகம் வேறு கோயிலில் இருந்தது. அறிவுறுத்தல்களுக்கமைவாக 29.01.2010 பாலஸ்தானம் செய்யப்பட்டு மிகுந்த இன்னல்களுக்கு மத்தியில் ஒருநேரம் கோயில் பூசையைச் செய்யக்கூடிய பூசகர் ஒருவரை கிளிநொச்சி நகர் பிள்ளையார் கோயிலில் பரிபாலனசபை அனுமதியோடு ஏற்பாடு செய்தோம்.

அதன்பின் சேத விபரத்தை மதிப்பீடு செய்யப் பொருத்தமான ஆட்களைத் தேடினோம். சிற்பாசாரியார்களைத் தேனோம் இறுதியாக கட்டடத்திணைக்களப் பொறியியலாளர் மதிப்பீட்டைச் செய்துதந்ததோடு, கோயிலில் இனிச்செய்ய வேண்டிய பணிகளையும் விளக்கிக்கூறினார். கோயிலை வந்து பார்வையிட்ட சிற்பாசாரியார்களும், வியாழவரியோடு தொடங்கி மேலேயுள்ள திருப்பணிகளே இப்போது செய்யவேண்டியுள்ளது என்று தெரிவித்தனர். பின்னர் 2010 ஆகஸ்ட் மாதம் திருப்பணிகளைத் தொடங்கினோம்.



மூலஸ்தானம் இரட்டைப் பஞ்சாங்க விமானமாகக் கட்டப்படவேண்டும் என்பதும், திருமஞ்சனக்கிணறு தோண்டிக் கட்டப்படவேண்டும் என்பதும் நீண்டநாள் இருந்த கோரிக்கைகள். நடேசர் கோயில் அமையவேண்டிய இடத்தில் கட்டவேண்டும் பழுதடைந்த நிலையில் இருந்த மகாமண்டபம், யாகமண்டபம், வில்மண்டபவேலையும் செய்யப்படவேண்டியவை இவற்றோடு கோயிலை மேல்நிலைப்படுத்தல், மேம்படுத்தல் பணிகளையும் செய்து கோயில் திருப்பணித் திட்டம் உருவாக்கப்பட்டது.

வழமையான நிதிவரத்து இல்லாத படியாலும் எமது அம்பாள் அடியார்களின் நிதிநிலை வலுவாக இல்லாததாலும் திருப்பணிகள் தாமதமாயின. ஆனாலும், நிறைவேறியுள்ள திருப்பணிகள் அத்தனையும் ஆகம விதிகளுக்கமைவாகவும், கலையம்சத்துடன் கூடிய சிற்பங்களாகவும், மக்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டவையாகவும் அமைந்துள்ளன.

இந்த அரியபெரிய பணியை இவ்வாறு செயற்படுத்த உதவிய அறங்காவலர் சபையினருக்கும் சிற்பிகளுக்கும், வர்ணம் தீட்டியவர்களுக்கும், நன்கொடை வழங்கியவர்களுக்கும், பொருள்உதவி, சரீரஉதவி புரிந்தவர்களுக்கும் அம்பாளிடைய அருட்கடாட்சம் நிறைவாகக்கிடைக்க வேண்டுகின்றோம்.

இவ்வாலய அறங்காவலர் சபையின் செயலாளராகவிருப்பவர் திட்டமிடக் கூடியவராகவும், நடைமுறைப்படுத்தக் கூடியவராகவும், சமூகத்தில் செல்வாக்குப் பெற்றவராக இருப்பதால், இப்பணிகளை எடுத்துச்செல்ல இலகுவாக இருந்து. அந்த வகையில் செயலாளர் திரு. ந. சிவகுமார் செயற்பட்டமையினாலேயே இத்திருப்பணிகள் வெகுவிரைவாகப் பூர்த்தியடைய கூடியதாகவிருந்தது. அவருக்கு அன்னையின் அருட்கடாட்சம் கிட்ட பிரார்த்திக்கின்றேன். அதேவேளை அப்பர் உழவாரப் பணிபுரிந்தது போல், அல்லும்பகலும் ஆலயத் திருப்பணியில் நின்று உழைத்த உபதலைவர் திரு.சிவயோகநாதனையும் பாராட்டுவது எமதுகடமையாகும். அவருக்கும் அன்னையின் அருட்கடாட்சம் கிட்ட பிரார்த்திக்கின்றேன்.

1984ஆம் ஆண்டிலிருந்து அன்னையின் பணியை அடியேன் மேற்கொள்ள வழிகாட்டிய, இயைவாக்கிய இச்சபையின் தலைவர்களாக இருந்த திரு.வே.இராஜேந்திரனார் (அமரர்), திரு.நா.சோதிநாதன், திரு.மு. இராமச்சந்திரன், திரு.சு.கதிர்காமநாதன், திரு.அ.க.செல்வவிநாயகம் ஆகியோர்களின் ஆசியுடன் அன்னையைப் பணிந்து அன்னையின் பணி செய்யக்கிடைத்தமை தவப்பேறாகக் கருதுகின்றேன்.

அத்துடன் அன்னையின் திருப்பணிக்காக தோளோடுதோள் நின்று சகல வழிகளிலும் ஒத்துழைப்பு வழங்கிய அறங்காவல்சபையினர், அன்பர்களுக்கும் அன்னையின் அருட்கடாட்சம் கிட்டுவதாக, எதிர்காலத்தின் அம்பாள் ஆலயம், ஆலய பணிகளோடு நின்றுவிடாமல் ஏழைமக்களின் துயர் துடைப்புப் பணிகளிலும், கல்விப் பணிகளோடு நின்றுவிடாமல் சபை முன்னிற்க வேண்டும் என்பது நீண்டநாள் அவா. இவ்வேளையில் கோயிலில் ஆவணங்கள் ஏதும்இல்லாத நிலையில் வெளியிடவுள்ள திருக்குடமுழுக்கு விழாமலர் அக்குறைகளை அகற்றி நிறைவான எதிர்காலத்திற்கு வழி அமைக்கும் என்ற நம்பிக்கையோடு நிறைவு செய்கின்றேன்.

"அன்னையின் அருட்கடாட்சத்துக்குப் பிரார்த்திக்கின்றேன்"

**எஸ். என். செல்வராசா**
தலைவர். அறங்காவலர் சபை.

## கனகாம்பிகா

கங்கை கரை தாயே கனகாம்பிகா
கற்றவர் நாவில் களிநடமிடும் கனகாம்பிகையே
காலமெல்லாம் எமைக் காக்க
வருவாயம்மா அருள் தருவாயம்மா

(கங்கை கரை தாயே)

வளம் மிகு வன்னிப்பகுதியில்
வண்ணத் தேர் ஏறும் வடிவழகி நீயே அம்மா
முழுமதி முகமென மூன்று தேர் கொண்ட
முத்தமிழ் தலைவியும் நீயே அம்மா

அபிராமிப் பட்டருக்கு அன்று அமாவாசை திதியில்
பூரணை காட்டியவளும் நீயே
இன்று கனகாம்பிகையில் கண்கள் களிகூர
களிநடமிடும் எங்கள் காவல் தெய்வமும் நீயே

(கங்கை கரை தாயே)

சந்தணக் காப்பில் உன் தச்சுருபம் கண்டேன்
வரம் வேண்டி வாடி நிற்கும் அடியார் முன்
வண்ணத் தேரேறி வாழ்த்துக் கூறக் கண்டேன்
தீராத வினைகளெல்லாம் உன் தீர்த்தத்தில் தீர்த்திடக் கண்டேன்

பூமணக்கும் புகழ் மணக்கும் பூங்காவனத்தில்
உன் புன்முறுவல் கண்டேன்.

(கங்கை கரை தாயே)

திரு. க.சந்திரன்
முன்னைநாள் அறங்காவலர் சபை உறுப்பினர்



### ஆலயத்தின் கடந்தகாலப் பதிவுகள்



தேர் உற்சவம்



தீர்த்தோற்சவம்



ஆலய முகப்புத் தோற்றம்



எழுந்தருளிகள் வீதியுலா

## 1996ம் ஆண்டில் குடமுழுக்கின் பதிவுகள்



ஆலய முகப்புத் தோற்றம்.



மஹா கும்பம் கிரியைகள்



மங்கள வாத்தியத்துடன் கும்பவலம் வருதல்



## 1996ம் ஆண்டு நடைபெற்ற குடமுழுக்கின் பதிவுகள்



சிவாச்சார்யார்கள் கடஸ்தாபன நிகழ்வில்



பிரதம குருவின் ஆசியுரை நிறைவில்



பூ அலங்கரிப்பாளரைக் கௌரவித்தல்



கட்டட ஆசாரியரைக் கௌரவித்தல்

## கடந்தகாலப் போர் அனர்த்தத்தின் பின்னர்



அம்பாளின் மூலஸ்தானம்



பிள்ளையார் சந்நிதானம் தெற்குப்பக்கச் சேதம்.



அலுவலக அறை, மடப்பள்ளியின் பாதிப்புக்கள்.



மூலஸ்தானம், அர்த்தமண்டபம், மகா மண்டபத்தின் முன்னைய தோற்றம்.

## கடந்தகாலப் போர் அனர்த்தத்தின் பின்னர்



வாகனசாலையில் வாகனங்கள்



பின்புறத் தோற்றத்துடன் முருகன் சந்நிதானம்



வெளிவீதி மேற்குப்பக்கம்



வசந்த மண்டபமும், யாகசாலையும்

## கோயிலின் தோற்றங்கள்



தெற்கு வீதியின் தோற்றம்



நந்தவனத்துடன் வடக்கு வீதியின் தோற்றம்



தல விருட்சம் பாலைமரத்துடன் முகப்புத் தோற்றம்



மேற்கு வீதியின் தோற்றம்

உ

ஓம் சக்தி

# அத்தியாயம் – அ

இரணைமடு அருள்மிகு

# கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில்

## வரலாறும் வழிபாட்டியல்புகளும்

**இரணைமடுப் பதி**

இலங்கையில் ஒரு சில பகுதி மக்கள் ஆறுகளால் நீர்வசதியைப் பெற, ஏனைய பகுதிகள் குளங்களால் நீரைப் பெறுகின்றன. இந்தப் பகுதிகளில் மக்களின் வாழ்வுக்கு ஆதாரமாக உள்ளவை குளங்கள். இலங்கையில் வரண்ட பிரதேசத்தில் வாழும் மக்களுக்கு, குறிப்பாக வடக்கு கிழக்கில் வாழும் மக்களுக்கு உயிர்ப்பளிப்பதாக, அடிநாதமாக, அமைவது குளத்துநீர். காலாதிகாலமாக அரசாண்ட அரசர்கள், மக்களின் நல்வாழ்வுக்காக குளங்களைக் கட்டியுள்ளனர். இந்தக் குளக்கரை மக்களின் பண்பாடு, நாகரிகம் என்பவை, பெரிய நதிக்கரை நாகரிகத்திற்கு எந்த வகையிலும் குறைவானவை அல்ல. மன்னர்களால் கட்டடப்பட்ட குளங்கள், கலிங்குகள், வாய்க்கால்கள் என்பன புராதன மக்களின் மேம்பட்ட பொறியியல் அறிவை நன்கு புலப்படுத்துவனவாக உள்ளன. வவுனியாவில் உள்ள சாஸ்திரிகூளாங்குளப் பகுதியில் 2011 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வரலாற்றுத் துறை பேராசிரியர் திரு.பி. புஸ்பரட்ணம் தலைமையில் ஆய்வுகள் மேற்கொண்ட குழுவினர் இங்கு காணப்பட்ட சுடுமண் பொருட்கள், மக்கள் குளங்களை அண்டிய பகுதியில் 2300 ஆண்டுகளுக்கு முன் செழிப்பாக வாழ்ந்ததைக் காட்டுவதாகவும் அதிகளவான பெண் உருவச்சிலைகளே மீட்கப்பட்டுள்ளதாகவும் இவை பெண் தெய்வங்களின் செழிப்பைக் காட்டுவதாகவும் குறிப்பிட்டுள்ளார். இவை குளக்கரை வாழ்க்கைச் சிறப்பை விளக்குகின்றன.

குளங்களில் இருந்து நீர்பாய்ச்சக் கூடிய பள்ளமான சமதரைகள் நெற் செய்கைக்கும், ஏனையவை தானியப் பயிர்ச் செய்கைக்கும், வான் பயிர்ச்செய்கைக்கும் பயன்படுத்தப்பட்டன. மேட்டு நிலப்பகுதிகள், மக்கள் குடியிருப்புக்களுக்குப் பயன்படுத்தப்பட, குடியிருப்புக்களை அண்டிய பகுதிகள் வீட்டுத் தோட்டம், வழிபாட்டிடங்கள், பள்ளிகள், அங்காடிகள், வைத்திய சாலைகள், மடங்கள், வீதிகள், பொதுவிடங்கள் என்பன அமைக்க உதவின. இதனால் இக்குளங்கரை வாழ்க்கை மனித குலத்தின் பண்பாட்டு, நாகரிக, வரலாற்று மையங்களாகக் கணிக்கப்பட்டன. பின்னர் உள்நாட்டுப் போர்களாலும், மலேரியா நோயினாலும், அந்நியர் வருகையாலும் இவை சிறப்பிழந்தன. இருந்தாலும் பிரித்தானியருடைய ஆட்சியில், வில்லியம் கோல்புறுக் அவர்களினால் 1829 ஆம் ஆண்டு தயாரிக்கப்பட்ட இலங்கை நிர்வாக மறுசீரமைப்பு ஆய்வறிக்கையில் "வரண்ட பிரதேசம்

1000 குளங்களின் பிராந்தியம்" என்று குறிக்கப்பட்டுள்ளது. அந்தளவுக்கு அந்நாட்களில் குளக்கரை வாழ்க்கை சிறப்புற்று விளங்கியுள்ளது. இன்றும் பல ஊர்ப் பெயர்கள், குளங்களில் பெயரைக் கொண்டிருப்பது இதற்கு ஆதாரமாக உள்ளது.

வன்னியில் மன்னர்களிடையே அடிக்கடி ஏற்பட்ட கலகங்களாலும், அரசிருக்கை மாற்றங்களாலும், ஆட்கொல்லி நோய்களாலும், வரட்சியாலும் மக்கள் குடியிருப்புக்களைவிட்டு வேறு இடங்களுக்கு அல்லது முன்னர் வாழ்ந்த இடங்களுக்கு நகர்ந்தனர். இதனால், குளங்கள் பராமரிக்கப்படாமல் உடைப்பெடுத்தன. வழி, வாய்க்கால்கள் பயனின்றி அழிந்தன. காலப்போக்கில் இவை காடுகளாக மாறின.

நாடு சுதந்திரம் பெற்ற பின்னரான காலத்தில், மன்னர்களால் கட்டப்பட்டிருந்த குளங்கள் புனரமைக்கப்பட்டன. வழிகள், வாய்க்கால்கள், மீளமைக்கப்பட்டன. மீண்டும் குடியிருப்புக்கள் உருவாக்கப்பட்டன. வீடுகள், பாதைகள், பள்ளிகள், வைத்தியசாலைகள், தபாலகங்கள், சந்தைகள், வழிபாட்டிடங்கள், பொதுசேவைக் கட்டடங்கள் அமைக்கப்பட்டன. குடியேற்ற மக்களுக்கு, விதைகள், உபகரணங்கள், கருவிகள், உரவகைகள் என்பன கொடுக்கப்பட்டு, வசதிகள் செய்யப்பட்டன. காலத்திற்குக் காலம் அரசு புதிய குடியேற்றங்களை உருவாக்கியது. குடியேற்றவாசிகளில் பலர் சில மாதங்களில் சொந்த ஊர்களுக்குத் திரும்பிவிட்டனர். சிலர் இங்கொருகாலும், அங்கொருகாலுமாக வாழ்ந்து இரண்டுங்கெட்டான் நிலையெய்தினர். சிலர் மலேரியாக் கொடுமையால் அழிந்து போயினர். சிலரே இயற்கையோடும், காட்டு மிருகங்களோடும் போராடி, வாழ்ந்து நிலை பெற்றனர். இப்படியாக நாடுமுழுவதும் தொடர்ந்தும் குடியேற்றங்கள் ஏற்பட்டன.

ஆனால் இப்படியான குடியேற்றங்களை உருவாக்கக்கூடிய பிரமாண்டமான குளம் ஒன்று அமைக்கக்கூடிய நிலையம் யாழ்ப்பாணக் கடல்நீரேரியின் தென்மத்திய பகுதியில் இருந்தது. இரணைமடுக்குளம் இப்படியான ஒன்றல்ல. இது முற்றிலும் புதியது தனித்துவமான வரலாற்றையுடையது. வன்னியை ஆண்ட மன்னர்கள் நாட்டின் கடலோரப் பகுதிகளையே ஆண்டனர். இவர்கள் உறவுக்கும், பகைக்கும் தென்னிந்தியாவையே நம்பியிருந்ததனால் இவர்களுடைய தொடர்புகள் கடல்வழியே அமைந்தன. எனவே இவர்கள் இரணைமடு பகுதியைக் கண்டு கொள்ளவில்லை. வடமாகாண அரசாங்க அதிபராக இருந்த சேர் வில்லியம் துவைணம் அவர்கள் யாழ்ப்பாணக் கடல் நீரேரி ஊடாக பழைய, கண்டி வீதி வழியே கொழும்பு செல்வதற்காக வந்தார். இவர் கடல் நீரேரியை அண்மித்திருந்தவேளை தெற்கே மிகநீண்ட தூரத்தில் கருமேகங்கள்கூடி மழை பொழிந்து காட்டாறு பெருக்கெடுத்து கடல் நீரேரிக்குள் பாய்ந்து வருவதைக் கண்டார். இப்படியான நிகழ்வு நடந்ததால் இந்தப் பகுதியில் குளம் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்ற அறிக்கையை அவர் முதல்முறையாக 1879ஆம் ஆண்டில் வெளியிட்டார். அந்த நாட்களில் சாதாரணமாக மக்களின் பாவனையில் இருந்தவை மாட்டுவண்டில்களே. மக்கள் பிரயாணம் செய்யக்கூடார வண்டில்களும், பாரமேற்றத் தட்டி வண்டில்களும், பயன்பாட்டில் இருந்தன. ஒரே, வண்டிலில் கூடாரத்தையும் தட்டியையும் பொருத்தக்கூடியதாக அவை அமைக்கப்பட்டிருந்தன. செல்வந்தர்களான மேட்டுக்குடி மக்கள் தனியான சவாரி வண்டில் அமைப்பிலான ஒற்றைத் திருக்கல் வண்டியையும் உபயோகித்தனர். குதிரை வண்டில்களே அக்காலத்தில் கடுகதி ஊர்திகளாகக் கருதப்பட்டன. இவை, அரச பிரதானிகளின் பிரயாணத்திற்குப் பயன்படுத்தப்பட்டன. நகரங்களுக்கிடையிலான அஞ்சற் சேவையும் குதிரை வண்டில்களினாலேயே நடத்தப்பட்டன.

இந்தக் காலத்தில் அரசாங்க சட்டவாக்கக் கழக உத்தியோக சார்பற்ற உறுப்பினராக இருந்த சேர். பொன். இராமநாதன் அவர்கள் இத்தகவலை கருத்தில் எடுத்தார். இந்தப் பகுதியில் ஒரு குளம் புதிதாகக் கட்டவேண்டும் என்ற கோரிக்கையை வலியுறுத்தி வந்தார். அக்காலப் பிரித்தானிய அரசு இலங்கையின் அபிவிருத்தி விடயங்களில் அதிக கரிசனை காட்டவில்லை. சேர். பொன். இராமநாதன் அவர்கள் அறிவு, ஆற்றல், அனுபவம், அறிமுகம் அத்தனையையும் பயன்படுத்திப் போராடி வந்தார். இறுதியாக, அப்போதைய விவசாயப் பணிப்பாளர், திரு. புங்குலமே திஸ்ஸவா, 1897ஆம் ஆண்டு இக்குளக் கட்டுமாணப் பணிக்கு அனுமதி கொடுத்தார். இதற்கு முன்னர் முல்லைத்தீவுக் காட்டின் மையப்பகுதியில் 500 சதுர மைலுக்கு மேற்பட்ட காட்டில் 500 பேர் அளவிலான நிலஅளவைக் கந்தோர் பணியாளர்கள் 500 நாள் வரையில், வேலை செய்து, இரணைமடுக் குளத்தின் அமைவிடத்தைத் தீர்மானித்தார்கள். இங்கு இரு ஓடை வடிவிலான பள்ள நிலம் காணப்பட்டது. ஆதலால் இந்த மையப் பகுதிக்கு இரணைமடு என்று பெயரிட்டனர்.

இரணைமடுக்குளம் முற்றிலும் மனித முயற்சியால் உருவானது. 1957ஆம் ஆண்டு உடைப்பு எடுத்த பின்னரே இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்டன. 1903ஆம் ஆண்டு மண்வெட்டி, பிக்கான் போன்றவற்றைப் பயன்படுத்தி மண்ணைவெட்டி கூடை, வட்டில் என்பவற்றால் அணைகட்டத் தொடங்கினர். கடுமையான கிரவல் பிட்டிகள் மட்டும் டைனமைற் வைத்து உடைக்கப்பட்டன. குளம் கட்டும் பணி 1920ஆம் ஆண்டு நிறைவடைந்தது.

மேலும் இரணைமடு பல மைல் தூரங்கொண்ட பாசன வாய்க்கால்களுக்கு, நீரைப் பாய்ச்சக்கூடிய, நிலமட்டத்தில் இருந்து 89 அடி உயரங்கொண்ட, உயர்ந்த இடமாகவும், யாழ்ப்பாணக் கடல்நீரேரியின் அருகில் அமைந்துள்ள அதியுயர் வரண்ட வலயமான ஊரியான் பகுதி உட்பட 30,000 ஏக்கர் வயல் நிலங்களுக்குப் பாச்சுவதற்குத் தேவையான நீரைத் தேக்கக்கூடிய 106,500 ஏக்கர்/அடி நீரைக் கொண்ட, நீரேரியாகவும், 50,000க்கு மேற்பட்ட கிளிநொச்சி வாழ் மக்களின் வாழ்க்கை, வளர்ச்சி, வனப்பு என்பவற்றை மேம்படுத்தும் காரணியாகவும், சமாதான காலத்தில், தலைவர்கள் வானூர்தியில் வந்து இறங்கக்கூடிய நீர்த்தளமாகவும் காணப்பட்டது. 1960ஆம் ஆண்டுக்கு முன்னரான காலத்தில், கடும் மாரிமழை





மஹாகும்பாபிஷேக சிறப்பு மலர்

பெய்தால், பன்னக் கண்டிப் பாலம் உடைப்பெடுத்து விடும். வட்டக்கச்சிக்கான தரை வழிப்பாதை துண்டிக்கப்பட்டுவிடும். அந்த நாட்களில் பணியாளர்களும், அத்தியாவசியப் பண்டங்களும் படகுகள் மூலம் வட்டக்கச்சியைச் சென்றடையும், அந்த அவசர தேவைக்கான நீர்வழிப்பாதையாகவும், போராட்ட காலத்தில் கிழக்கையும் மேற்கையும் இணைக்கின்ற தெருக்களின் கடவையாகவும், பல வழிகளில் இரணைமடு பயன்பட்டிருக்கின்றது. பயன்படுத்தப்பட்டுள்ளது.

மேலும் இலங்கையின் புவியியல் தரைத்தோற்ற வரைபடங்கள் தாள்களாக உருவமைக்கப்பட்டுள்ளன. இப்பகுதிக்கு மேற்கேயுள்ள வரைபடத்தாள் கிளிநொச்சி என்று பெயர் பெற்றுள்ளது. ஆனால் இக்குளமும் கோவிலும் அமைந்துள்ள, பெரு நிலப்பரப்பு இரணைமடு என்றே பெயர் சூடப்பட்டுள்ளது. ஆனையிறவு சுண்டிக்குளம் நிலப்பரப்பு, முல்லைத்தீவுப் பகுதியோடு சேர்ந்து இப்பெயரைப் பெறுகின்றது. எனவே இந்த அயலிலுள்ள நிலப்பரப்பு யாவற்றிலும், இதுவே ஆதியில் உருவான இடம் என்பதை மேன் மேலும் நிருபணமாகின்றது. ஏறத்தாள 1000 ச. கிமீ உள்ள பிரதேசம், 25 கி.மீ அகலமும் 40 கி.மீ நீளமும் கொண்டது.

இந்தளவு பெயரோடும் புகழோடும் திகழ்கின்ற இரணைமடுவில், கனகாம்பிகை அம்பாள் கோயில் அமைந்துள்ளது. அருள்மிகு கனகாம்பிகை அம்பாள் கோயில், தவத்திரு யோகர் சுவாமிகளின் உள்ளத்தில் உதித்தது. யாழ்ப்பாணச் சித்தர் பரம்பரையின் தவமுதல்வர் யோகர் சுவாமிகள். இவர் இரணைமடுக்குளக் கட்டுமாணப்பணி நடந்தபோது இங்கு களஞ்சியப் பொறுப்பாளராகவும் கடமையாற்றியுள்ளார்.

யாழ். மாவட்டத்தில் அரசாங்க அதிபராக இருந்த திரு.ம. சிறிகாந்தா அவர்கள் யோகர் சுவாமிகளுடைய அணுக்கத்தொண்டராகவும் இருந்தார். அரசாங்க அதிபர் சுவாமிகளுடைய ஆலோசனைகளைக் கேட்டு கிளிநொச்சியில் பல குடியேற்றத் திட்டங்களை உருவாக்கினார். கிளிநொச்சி வளர்ச்சிக்கென கிளிநொச்சி உதவி அரசாங்க அதிபர் (பிரதேச செயலர்) பிரிவை, 08.01.1959ஆம் ஆண்டு உருவாக்கினார். பின்னர், கிளிநொச்சிப் பாராளுமன்ற உறுப்பினர் தொகுதி ஏற்படவும், காலப்போக்கில் கிளிநொச்சி மாவட்டம் உருவாக்கவும், வழிவகுத்தார்.

அக்காலப் பகுதியில் இரணைமடுக் குளக்கட்டுமாணப் பணியில் தீவிரமாக ஈடுபட்டு, அடிக்கடி கிளிநொச்சி வருகைதந்த சேர்.பொன். இராமநாதன், சென்னையில் நடந்த சைவசித்தாந்த மாநாட்டிற்குத் தலைமை தாங்கியவர். உலகம் போற்றும் சைவப் பரப்புரையாளன். "இவர், இரணைமடுவில் ஒரு காவற் தெய்வக்கோயில் கட்டவில்லையே" என்ற குறைபாடு கிளிநொச்சி மக்கள் மத்தியிலே இருந்து வந்தது. எனினும் 1957ஆம் ஆண்டு ஏற்பட்ட பெருவெள்ளத்தால் இரணைமடுக் குளவாற்கட்டு உடைப்பெடுத்ததால் கோயில் அமைக்கும் கோரிக்கை மேலும் வலுப்பெற்றது. இதை நன்குணர்ந்த அரச அதிபர் விரைவிலேயே கோயில் கட்ட எண்ணினார். இதற்கான கூட்டம் 09.01.1959 ஆம் ஆண்டு கிளிநொச்சியில் உள்ள 29 சைவச்சான்றோர் சமூகத்தில் நடைபெற்றது. அரச அதிபர் தலைமையில் திருப்பணிச் சபை ஒன்று, அன்றே உருவானது.

பின்னர் தொடர்ந்து கூட்டங்கள் நடைபெற்றன. அத்தகைய கூட்டமொன்றில், முற்றிலும் புதிய இடம் ஒன்றில் கோவில் கட்டுவதற்கான விதிகள் ஆராயப்பட்டன. இவ்விடயத்தைச் சுவாமிகளிடம் தெரியப்படுத்திய தலைவர், சுவாமிகள் கூறியவற்றைச் சபைக்குத் தெரியப்படுத்தினார். அவையாவன, முதலாவதாக கட்டடம் ஏதும் கட்டப்பட்டிராத கன்னியிடமாக பரந்த காடு உள்ள, அருகில் நீர்நிலையுடன் கூடிய உயர்வான இடமாகத் திகழ வேண்டும். இன்னோரன்ன விதிகளில், அத்தியாவசியமான பல விதிகள் ஒன்று சேர்ந்து காணப்படும் இடமாக இரணைமடு அணைக்கட்டின் மேற்குப் பகுதி பொருத்தமான இடமாக அமையும் என்று சுவாமிகள் தெரிவித்திருந்தார். இத்தெரிவை சபை முழுமனதுடன் ஏற்றுக் கொண்டது.

கோயில் அமைவிடம் தீர்மானிக்கப்பட்டவுடன், நிலையம் எடுத்து அத்திபாரம் வெட்டும் பணிகள் ஆரம்பமாயின. கோயில் கட்டும் பணியும் உடன் தொடங்கியது. கல். சீமெந்து, இரும்பு போன்ற கட்டடப் பொருள்களை அன்பர்கள் சிலர் தாமாகவே முன்வந்து, கோவிலில் கொண்டு வந்து சேர்த்தனர். உடலுழைப்புக்கு, நீர்ப்பாசன ஊழியர்களும், கனகபுரவாசிகளும், உதவினர். மூலஸ்தானம், அர்த்தமண்டபம் என்பன முடிவடைந்த நிலையில் ஏனைய தேவையான மண்டபங்களைத் தற்காலிகமாக அமைத்தது. திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடாத்த எண்ணினர்.

மூலமூர்த்தியை இக்காலத்திற்கும் இவ்விடத்திற்கும் ஏற்றதாக, மீனாட்சி மூர்த்தத்தையே கொள்ளவேண்டும், என்றும் அம்மூர்த்திக்கு கனகபுரம் மக்கள் நினைவாகவும், கனகராயன் ஆற்றைக் கொண்டும், இந்நீரைப் பயன்படுத்தும் இடங்கள் பொன் விளையும் பூமியாகத் திகழும் என்பதையும் கருதி (கனகம்-பொன்) கனகாம்பிகை அம்பாள் என்று பெயர் சூட்டலாம் என்றும் சுவாமிகள் தெரிவித்தார். இதை சபை ஏற்றுக்கொண்டது. அரசாங்க அதிபர் திரு.ம.சிறிகாந்தா முன்னின்று நெறிப்படுத்த, மட்டுவில் ச. பொன்னுச்சாமிக்குருக்கள் தலைமையில், அம்பாளின் முதலாவது திருக்குட நன்னீராட்டுவிழா 22.01.1961 அன்று, திருப்திகரமான முறையில் நிறைவெய்தியது. இவ்விடம் சுவாமிகளுடைய திருவடிகள் பட்ட புண்ணிய பூமி என்பதாலும், திருப்பணிகள் யாவும் சுவாமிகளுடைய திருவாக்குப் படியே நடந்ததாலும், எண்ணியதை விடச் சிறப்பாகவும், விரைவாகவும் நடந்து முடிந்துள்ளன என்று எல்லோரும் இன்புற்றனர்.

"எல்லோரும் கிளிநொச்சிக்கும் போங்கள். நாங்களும் அங்குதான் போகப் போகிறோம்" என்று யோகர் சுவாமிகள் 1960ஆம் ஆண்டுகளின் தொடக்கத்தில், கூறிவைத்தார். ஆனால், எங்களுடைய மக்கள் அதைப் புரிந்து கொள்ளவில்லை. 1995 யாழ்ப்பாண இடப்பெயர்வின் பின் கிளிநொச்சியைப் பற்றிச் சிந்தித்துக்கூட பார்க்காத பலர் வந்திருந்தனர். அவர்களில் சிலர், அந்தச் சந்தர்ப்பத்தில் ஐயனார்புர யோகர் சுவாமிகள் வயோதிபர் இல்ல முன்பள்ளியில் நடைபெற்ற கூட்டம் ஒன்றில் இதனைத் தெரிவித்தனர்.



மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

யோகர்சுவாமிகள், படிக்காத பாமர மக்களும் சைவசமய உண்மை களை அறிந்து கொள்ளவும் உணர்ந்து வாழவும் தேன் கலந்து மருந்து கொடுப்பது போல் சைவசிந்தனை நல்லொழுக்கங்களை நற்சிந்தனைப் பாடல் களில் பாடியுள்ளார். சமய உண்மைகளைச் சற்றுத் தெரிந்தவர்கள் மேலுங் கற்றுத் தெளிந்துகொள்ள, "சிவத் தொண்டன்' சஞ்சிகை மூலம் வழிகாட்டினார். இவற்றை விட உயர்நிலை அடைந்தவர்கள், தியானம், யோகம் போன்றவற்றில் பயிற்சியும், தேர்ச்சி யும்பெற சிவத்தொண்டன் தியான மண்ட பத்தை அமைக்கச் செய்தார். மக்களை அருள் நோக்கிலும், அருள் வாக்கினாலும் ஆன்மீக மேம்பாட்டிற்கு வழிகாட்டியுள்ளார். இதனால் சுவாமிகளுக்கு பல சீடர்கள் இருக்கி றார்கள். உலகம் முழுவதும் பல நிறுவனங்கள் உள்ளன. அந்த அளவுக்கு மக்களுடன் கலந்து வாழ்ந்து அவர்களின் ஆன்மீக ஈடேற்றத்திற்கு வழிவகுத்துள்ளனர்.

முன்னர் சுன்னாகச் சந்தை தாய்ச் சந்தை யாகத் திகழ்ந்தது. பின்னர், அச்சந்தையைச் சூழவுள்ள தோட்ட நிலங்கள் பயன்தராத சூழ்நிலை உருவாக, கிளிநொச்சிச் சந்தை தாய்ச் சந்தை ஆனது. 1978 இன் பின் கிளிநொச்சி சந்தை வியாபாரச் செயற்பாடுகளில் உச்சத்தை எட்டியது. மக்களும் நல்வாழ்வு வாழ்ந்தனர்.

இரணைமடுக்குளம் கிளிநொச்சி வாழ் மக்களின் உயிர் மழைகாலம் தொடங்கி விட்டால் இரணைமடுவின் நீர்மட்டம் எத்தனை அடி என்றும், மழைகூடினால் கலிங்குப் பலகைகள் திறக்கப் பட்டுள்ளனவா? என்றும் கேள்வி கேட்பார்கள். இரணைமடுவில் போதிய நீர் உள்ளதா என்றும் அறியும் நோக்கமே இது. இரணை மடு நிரம்பிவால் சிறுபோக நெற்செய்கை இருக்கும். வாழ்க்கை நல்லபடியாக அமையும் என்ற சிந்தனைகளின் வெளிப்பாடே இவை.

1974களில் நாட்டில் மழை பொய்த்தது. வருட மழைவீழ்ச்சி குறைந்தது. இவற்றால் நெல் உற்பத்தி மிகக் குறைந்தது. மாவட்டங் களுக்கு வெளியே அரிசி கொண்டு செல்லத் தடை இருந்தது. வயோதிபர்களும் சிறு குழந்தைகளும் பாணுக்காக வரிசையில் நின்ற காலமது. யாழ்ப்பாண மக்களின் அரிசித் தேவையை கிளிநொச்சியே ஈடுசெய்தது. அரிசி வியாபாரிகளும் அரிசி ஆலை உரிமையாளர்களும் திடீர்ப் பணக்காரர் களான காலம். கிளிநொச்சியில் உருத்திரபுரம், இராமநாதபுரம், முரசுமோட்டை, வட்டக் கச்சி என்ற ஊர்கள் அரிசி விற்பனைக் கிராமங் களாயின.

இதேபோன்று 1985ஆம் ஆண்டு நாட்டில் கடும் மழை பெய்தது. தொடர்ந்து பல மாதங்கள் கடும்மழை பொழிவு ஏற்பட்டது. இரணைமடுக்குள அணைக்கட்டில் சிறுகசிவு ஏற்படத் தொடங்கியது. இரவு நேரத்தில் இரணைமடுக்குள அணைக் கட்டுக்கு ஏற்படவுள்ள ஆபத்து மக்களுக்கு ஒலிபெருக்கி வாயிலாக அறிவிக்கப்பட்டது. நீர்ப்பாசனத் திணைக்களப் பொறியியலாளர் திரு.தி. குமாரசாமி அணைக்கட்டில் கட்டைக் காற்சட்டையோடு ஆயத்த நிலையில் நின் றார். சில நிமிட நேரங்களில் உழவு பொறிகள் பெட்டியுடன் மண்வெட்டி, கூடை, கடகம் என்பன ஒருங்கே வந்து சேர்ந்தன. இரவிரவாக இப்படிப் பல உழவுப் பொறிகள் பல்லாயிரக் கணக்கான மக்கள் வந்து கூடிவிட்டனர். மண்வெட்டி வந்து அணைக்கட்டில் குவிக்க, அதை மக்கள் கடகம், கூடைகளில் உரிய இடத்திற்கு எடுத்துச்சென்று நிரப்பினர். அன்று விடிபொழுது ஆபத்தைத் தாண்டி விட்டோம். என்ற செய்தியோடு உதயமானது. நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். பொறியியலாளர் மக்களைப் பாராட்டினார்.





## அத்தியாயம் – ஆ

# கிளிநொச்சியின் வாழ்விற்கும் நிலைபேற்றிற்கும் உறுதுணையான இரணைமடுக் குளத்து நீர்.

கங்கைநதி வடஇந்திய மக்களின் சமய பண்பாட்டு வாழ்வியற் கூறுகளோடு மிகவும் பின்னிப் பிணைந்திருப்பது போன்று, தமிழ் நாட்டில் காவேரி நதி அதேபோன்று, மனிதப் பண்பாட்டுக் கோலங்களிற்கு ஆதாரமாக விளங்குகின்றது. உலகம் முழுவதும் உள்ள தமிழர்கள் கங்கை நதியில் நீராடி தமது பாவங்களை நீக்கவேண்டும் என்று எண்ணு வார். அதேபோன்று, தமிழ்நாட்டில் உள்ள மக்கள் காவேரியில் ஓர் முறை முழுகி பாவங் களைப் போக்கவேண்டும் என நினைப்பார். கங்கை நீர்ப்பெருக்கம் கூடிய நதி காவேரி தமிழ்நாட்டில் உள்ள மிகநீண்ட நதி. இவைபோல, இலங்கை வடபகுதியிலுள்ள மத்திய வன்னிப் பிரதேச மக்களின் வாழ்விய லோடு கனகராயன் ஆறு இரண்டறக் கலந்துள்ளது என்று கூறினால் மிகையாகாது.

"காவிரிதென் பெண்ணைப் பாலாறு - தமிழ்
கண்டதோர் வைகை பொருணைநதி - என
மேவிய ஆறு பலவோடத் - திரு
மேனி செழித் தமிழ்நாடு"

என்று பாரதி தமிழ்நாட்டில் உள்ள ஆறுகளின் சிறப்பை வியந்து பாராட்டிப் பாடியுள்ளான். தமிழ்நாட்டிலுள்ள மேற்பரப் புத் தரைகளில் எல்லாம் தாவரங்கள் செழிப்புடன் காணப்படுகின்றன. நல்ல நிலத்துடன், போதிய நீரும் சேர்ந்தால், தாவரங்கள், செடிகள், சிறுபயிர்கள், உயிரினங்கள் எல்லாம், உரிய வளர்ச்சி பெற்று, வளத்துடனும், வனப்புடனும் வாழும் என்பது வெளிப்படை.

இதேபோன்று கனகராயன் ஆறு கிளிநொச்சி வாழ் மக்களின், வாழ்விய லோடும், பொருளாதாரத்தோடும் ஊன்றிக் கலந்துள்ளது. இம்மக்களின் ஜீவநோபாயத் திற்கும் மேம்பாட்டிற்கும் தொழிற்றுறை மேம்பாட்டிற்கும் உறுதுணையாகவுள்ளது. குடியிருப்புக்களில் பயிரிடப்படும் செய்பயிர் களுக்கு கிணற்று நீரைப் பயன்படுத்தினாலும் கிணறுகளின் நீர் ஊற்று வாய்க்கால் நீர் மட்டத்திலேயே தங்கியுள்ளது. கிளிநொச்சி யில் உள்ள கிணறுகளில் பெரும்பான்மை யானவை குளத்து நீரோடு நெருங்கிய தொடர்புடையவை.

"தண்ணீர் நில நலத்தால்" என்று ஆன்றோர் கூறியுள்ளனர். தண்ணீரின் நலம், பயன்பாடு என்பன மண்ணின் நலத்தைப் பொறுத்தே அமையும் என்பது இவர்களின் கருத்து. இரணைமடுக் குளநீர் பாயும் கரைச்சி, கண்டாவளைப் பிரதேசக் குடியிருப்புக்களில் நல்ல கிணற்று நீர் கிடைக்கிறது. இங்கு உவர்நீர் கிடைப்பதில்லை. சில பகுதிகளில் இளம் மஞ்சள் நிறமுடைய நீர் காணப்படுகின்றது. இந்நீரில் சிறிதளவு இரும்புச் சத்து கலந்துள்ளது என்பதைக் காட்டுகிறது. இது

மனிதப் பயன்பாட்டிற்கோ, உயிரினங்கள் வாழ்வதற்கோ, ஊறு விளைவிக்கக்கூடியதல்ல. கிளிநொச்சியில் அநேகமான இடத்து நீர் நிறமற்றது. சுத்தமான நீராக வெளிப்படுகிறது. இந்நீரே இப்பகுதி மக்களின் உயிர்நாடி. இது குளத்தில் இருந்து பரந்துபட்ட பல்லாயிரக் கணக்கான ஏக்கர் கொண்ட நிலப்பரப்பில் வாழும் மனிதர்களின் வாழ்வை உறுதிப்படுத்துவதும் உயிர்களின் இருப்புக்கு உதவுவதாகவும் அமைகின்றது.

சில இடங்களில் குடிநீர்தேடி பல மைல்தூரம் செல்ல வேண்டியுள்ளது. இதற்காக பல மணிநேரத்தைப் பயன்படுத்த வேண்டியுள்ளது. பல மணிநேரம் இவற்றால் வீணடிக்கப்படுவதுண்டு. இத்தகைய விரயமேதும் இங்கு அறவேயில்லை. இது ஒரு விவசாயப் பிரதேசம், நெல் வேளாண்மை செய்பவர்கள் எல்லாரும் இரணைமடுக் குளநீரைப் பெறுவதில்லை. பல்லாயிரக்கணக்கான ஏக்கர் நிலத்தில் மானாவரி நெற்செய்கை மேற்கொள்ளப்படுகின்றது. இந்த இடங்களில் நெற்பயிர் செய்வதைவிட வரகு, உழுந்து, பயறு, குரக்கன், சோளம், இறுங்கு போன்ற தானியப் பயிர்களைப் பயிரிட்டு இலாபமடையலாம். இதற்கும் மேலாகத் தோட்டப் பயிர்ச் செய்கை பயனுள்ளதாக இருந்து இலாபம் ஈட்டக்கூடியதாக அமையும். அதற்கு மண் ஆராய்ச்சி முடிவுகள் பயனுள்ளதாகும்.

இற்றைக்கு 25 ஆண்டுகளுக்கு முன் யாழ்ப்பாணப் பல்கலைக்கழக விவசாய பீடம் இங்கு உருவாக்கப்பட்டபோது எமது மக்கள் விடுத்த கோரிக்கைகளில் முதன்மையானது மண் ஆராய்ச்சியே இது இன்னும் நிறை வேற்றப்படவில்லை. தமிழ்நாட்டில் பயிர்ச் செய்கையாவும் மண்ணாராய்ச்சியின் அடிப்படையிலேயே நடைபெறுகின்றன. ஆனால் எமது விவசாயிகளுக்கு இப்படியான வசதி வாய்ப்புகள் இன்னும் ஏற்படுத்தப்படவில்லை. விளை நிலங்களும், நீர்ப்பாசன வாய்க்கால்களும் சீராக இருந்து, பயிரின் ஆராய்ச்சியும், அவற்றின் பயன்பாடுகளும் உடனுக்குடன் கிடைத்தால் எந்த உற்பத்தியிலும் உச்ச விளைச்சலைப் பெறலாம். அந்த வகையில் பயிர்ச் செய்கைக்குத் தேவையான மண்வள ஆராய்ச்சி தொடர்பான அமைப்பு விரைவில் ஏற்படுத்தப்பட வேண்டும்.

குடியிருப்பு நிலங்களிலுள்ள வான் பயிர்களும், செய்பயிர்களும், செழித்து வளர்ந்து, நிரம்பிய பயன்தருகின்றன. இவர்களுக்குரிமையான கால்நடைகளின் வளர்ச்சிக்கும், பெருக்கத்திற்கும் இந்நீரே பயன்படுகின்றது. பால்வளம் பெருகுவதும், இந்நீரினாலேயே. இப்பயன்கள் அவர்களின் மேலதிக வருமானத்தைக் கூட்ட உதவுகின்றன. பெரும்பாலும் கடின உழைப்பற்ற இத்தேட்டம் அன்பர்களின் பாரம்பரிய தொழிலான நெற்செய்கைகளையும், வளப்படுத்தி மேம்படுத்துகின்றது. இவர்களின் வாழ்விடங்களில் உள்ள வான் பயிர்கள் புயல்காற்றின் போதும், கடும் வெய்யில், மழை காலங்களிலும், இவர்களின் மனையையும் இவர்களையும் பாதுகாக்கப் பெரிதும் பயன்படுகின்றன. (காற்றுத் தடை)

கனகராயன் ஆறு, வடகீழ் பருவக் காற்றுக் காலத்தில், மழைநீரைப் பெறுகின்றது. இரண்டு அல்லது மூன்று மாதங்கள், மழை கிடைக்கும். அதன் பின்பு, அது வற்றி வரண்டு விடும். இந்நிலையை எண்ணிய ஔவையார் இவ்வாறு பாடுகின்றார்.



"ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும்
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்"

ஆறு வற்றினாலும் அது தன்னுடைய ஊற்றுநீர் பெருகாததால் உலக மக்களை வாழவைக்கும். அதேபோன்று கனகராயன் ஆறு நீர்த்தேக்கத்தால் உணவூட்டுகின்றது. கனகராயன் ஆறு, மூன்று மாதம் வரை பெறும் மழைநீர், இயல்பாக எட்டு ஒன்பது மாதங்களில் வற்றி தன் நிலை அல்லது வனப்பை இழந்துவிடும். ஆனால் நீர் தேக்கப்படுவதால் ஆண்டு முழுவதும் பயனளிக்கிறது. பரந்த பரப்பளவு பயன்பெறுகின்றது.

கனகராயன் ஆற்றின் நீர்த்தேக்கமான இரணைமடு, ஆரம்பத்தில் 40.000 ஏக்கர்/ அடி நீர் கொள்ளக்கூடியதாக இருந்தது. பின்னர், மேலதிக நிலப் பயன்பாட்டிற்காகவும், மேலதிக குடியேற்றங்களை உருவாக்குவதற்காகவும், குளத்தின் அணைக்கட்டை நான்கு முறை உயர்த்தி, அதன் கொள்ளளவை 106,500 ஏக்கர்/அடியாக அதிகரித்தனர். மேலும் அணைக்கட்டைப் புனரமைப்பதன் மூலம் 34 அடி உயரம் கொண்ட நீரை 36 அடி உயரக் கொள்ளளவாகச் சேகரிப்பதன் மூலம் யாழ்ப்பாணக் குடாநாட்டு மக்களுக்கு குடிநீர் வழங்க, ஏற்பாடு நடைபெறுகின்றது.

மேலதிகமான நீர் சேமிப்பு, நிலப் பயன்பாட்டை அதிகரித்தது. முதல் முறையாக இரணைமடுக்குள இடதுகரை வாய்க்கால், 1950 ஆம் ஆண்டு பயன்படுத்தப்பட்டு, உருத்திரபுரம் 10ஆம் வாய்க்கால் குடியேற்றத் திட்டம் உருவானது. 1952 இல் வலதுகரை வாய்க்கால் அமைத்து முடிக்கப்பட்டது. அதன் பின், வலது கரை குடியேற்றத் திட்டங்களான வட்டக்கச்சித் திட்டம் தொடங்கி வைக்கப்பட்டது. தொடர்ந்து இடதுகரை வாய்க்கால் பயன்பாட்டைப் பெற்ற குடியேற்றத் திட்டங்கள். உள்ளடக்கப்பட்டன. அதேபோன்று வலது கரை வாய்க்கால் உபயோகத்தில், மேலும் பல திட்டங்கள் ஏற்பட்டன. முன்னர் இருந்த குடியேற்ற வெறுப்பு மாறி, ஓரளவிலான விருப்பு இப்போது ஏற்பட்டது. அத்தோடு யாழ்ப்பாண நிலமைகளும் ஊக்குவிக்க, பலர் இங்குவந்து குடியேறினர். 1953இல், 14276 ஆக இருந்த கரைச்சிப் பகுதி குடித்தொகை 1971இல் 50300 ஆக அதிகரித்தது. எல்லாமாக நான்கு தடவைகள் அணைக்கட்டு உயர்த்தப்பட்டது. இதில், 1954 - 1955 என இருமுறை விரைவாக அணைக்கட்டு உயர்த்தப்பட்டது. அணைக்கட்டு அதிகரிப்பும் குடிசனப் பெருக்கமும், இரணைமடுவின் நீர்வளத்தை உணர்த்துகின்றன.

பரந்த நீர் காவிடங்களையும், பாரிய விளைநிலங்களையும் கொண்ட இப்பகுதி, ஏற்ற மேம்பாட்டு நடவடிக்கைகளால், பாரிய பயனைத் தருகின்ற பிராந்தியமாக உள்ளது. இந்த வகையில் சேர். பொன். இராமநாதன், அரச அதிபர் சிறிகாந்த, நீர்ப்பாசனத் திணைக்கள உயரதிகாரிகள், வணக்கத்திற்குரியவர்கள், பாராட்டப்பட வேண்டியவர்கள். இவர்களுடைய தூரநோக்குச் சிந்தனைகளும், ஏற்ற திட்டமிட்ட செயற்பாடுகளும், இலங்கையில் ஓர் உன்னத இடமாக இரணை மடுவை மாற்றியுள்ளன.

இன்னும், இந்த நீரைப் பயன்படுத்தி, ஏற்று நீர்ப்பாய்ச்சல் திட்டம் உருவாக்கப்பட்டது. இத்திட்டம் இல்லாது போனால், திருவையாறுப் பகுதி இன்னும் அடர்ந்த பெருங் காடாகக் காட்சி தந்திருக்கும். நல்ல செம்மண் பகுதி, ஏற்று நீரைப்பெற்று, பாரிய மேம்பாட்டு நிலப்பயிர்ச் செய்கைக்கு வழி வகுத்தது. இத்திட்டத்தால் பாரிய

மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

படித்த வாலிபர் திட்டம் உருவானது. இப்போது ஏற்று நீர்ப்பாவனை இல்லை. இருந்தால் பல நன்மைகள் உருவாக்கியிருக்கின்றன. இதை விடப் பல குடும்பங்கள், குளத்து நீரைப் பயன்படுத்தி, மீன்பிடித்து, வாழ்க்கை நடத்துகின்றனர். இக்குளத்தில் பிடிக்கப்படும் மீன்களில் ஒரு பகுதி விற்பனையாகின்றது. எஞ்சியுள்ளவை கருவாடு போடப்பட்டுத் தென்னிலங்கைச் சந்தைகளுக்கு அனுப்பப் படுகின்றன.

இந்தியாவில் உள்ள ஆறுகள், பெண் தெய்வங்களின் பெயர்களில் உள்ளன. ஆனால் இலங்கையில் பாய்கின்ற ஆறுகளில் மக்களின் பெயர்களைக் கொண்டவை. மிக மிக அரிது. இவற்றுள் வட இலங்கையில் உள்ள மிகச் சில ஆறுகளே மனிதப் பெயர்களைக் கொண்டவை. அவற்றுள் கனகராயன் ஆறு வன்னி மன்னன் ஒருவனுடைய பெயரைக் கொண்டுள்ளது. கி.பி. 4ஆம் நூற்றாண்டளவில், கனகராயன் குளத்தின் மேற்குப் புறத்தில், அரசிருக்கை அமைத்து, ஆண்ட வன்னி மன்னனின் பெயரே கனகராயன். இம் மன்னனுடைய ஆள்புலத்தில் அமைந்திருந்ததால், இவ்வாறு கனகராயன் ஆறு எனப் பெயர் பெற்றது. இவ்வாற்றின் இருகரையோரப் பள்ளத் தாக்குகளிலும் வாழ்ந்த இம்மன்னனின் குடிகள், இவ்வாற்று நீரைப் பயன்படுத்தி, தங்கள் தொழிலை முன்னேற்றகரமாக அமைத்து, செல்வச் செழிப்புடன் சீரும் சிறப்புமாக வாழ்ந்தனர். இவ்வரலாற்றுப் பெருமையோடு, இன்னும் கனகராயன் ஆறு பாய்ந்து பயன்தருகிறது.





கனகராயன் ஆறானது வவுனியா மாவட்டத்தின் ஓமந்தைக்குக் கிழக்கே உள்ள ஆறுமுகத்தான் புதுக்குளத்திற்கு தென்கிழக்கே உற்பத்தியாகின்றது. இதன் கூடிய பங்கு முல்லைத்தீவு மாவட்டத்தில் அமைந்துள்ளதுடன், இம் மாவட்டத்தின் தென்பகுதியில் பாய்கின்ற ஆறுகளில் மிகப் பரந்த 587 சதுர கிலோமீற்றர் நீரேந்து பரப்பையும் கொண்டது. அத்துடன் வட இலங்கையில் பாய்கின்ற மிக நீளமான (70 கி. மீ) ஆறும் இதுவே ஆகும்.

இவ் ஆற்றில் இருந்து பெறப்படும் நீரை இரணைமடுக் குளம் காவு கொள்வதுடன், கரைச்சி, கண்டாவளை ஆகிய பிரதேச செயலர் பிரிவிலுள்ள 8900 கெக்டேயர் நிலத்திற்கு நீர்பாய்ச்சுவதற்கு உதவுகின்றது. இக்குளத்தில் தேக்கிவைக்கப்படும் நீர் ஆண்டிற்கு இரண்டு முறை காலபோகம், சிறுபோகம் ஆகிய இருபோக நெல் வேளாண்மைக்கு இடது கரை, வலது கரை வாய்க்கால் வழியே நீரைக் கொண்டு செல்கிறது.

இதில் 63,938 அடி நீளமான இடது கரை வாய்க்கல் ஆனது இரணைமடுக் குளத்தில் கலிங்கிற்கு மேற்கே ஆரம்பமாகி மொட்டைப் பாலம் வரை உயர்ந்து காணப்படும் நிலப்பகுதி ஊடாக மிக ஆழத்தில் நீரை கொண்டு சென்று மொட்டைப் பாலத்தில் இருந்து சமதரை வழியாக கிளிநொச்சிக் குளத்திற்கு நீரை வழங்குகின்றது. அதே வேளை இவ்வாய்க் காலின் கீழ் உள்ள மூன்றாம் வாய்க்கால் ஆனது முரசுமோட்டை, பன்னங்கண்டி, சின்னக் காடு, ஊரியான் ஆகிய பகுதிகளுக்கு நீரை வழங்குகின்றது. கிளிநொச்சிக் குளத்தில் இருந்து வடக்கு நோக்கி இவ்வாய்க்கால் கரப்போக்கு சந்நியினூடாக உருத்திரபுரம் வரை நீண்டு செல்கின்றது. இவ்வாய்க்கால் பரந்தன் பிரதான வாய்க்கால் என அழைக்கப் படுவதுடன் 4ஆம், 5ஆம், 6ஆம், 7ஆம், 8ஆம், 9ஆம், 10ஆம் வாய்க்கால்களிற்கும் நீரை பாய்ச்சுகின்றது. அத்துடன் சிவிக் சென்ர, கணேசபுரம் பகுதிக்கும் இவ்வாய்க்காலில் இருந்தே நீர் வழங்கப்படுகின்றது.

இதேபோல் இக்குளத்தில் 37,662 அடி நீளமான வலது கரை வாய்க்கால் ஆனது வட்டக்கச்சி, இராமநாதபுரம் பகுதிகளிலுள்ள நெற்காணிகளுக்கு நீரை வழங்குகின்றது. மேலும் இக்குளத்தில் 34 அடி உயரம் வரை நீரை தேக்கி வைக்கக்கூடிய கட்டுமாணத்தைக் கொண்டுள்ளதுடன் 106, 500 ஏக்கர் பரப்பிற்கு ஒரு அடி உயரம் என்ற அளவில் நீர்க் கொள்ளளவையும் கொண்டுள்ளது.

இரணைமடுவுக்கு நீர் வழங்கிய பின்பு இவ் ஆறு மூன்று கிளைகளாகப் பிரிந்து யாழ்ப்பாணக் கடல் நீரேரியைச் சென்றடைகின்றது. இதில் கிழக்குப் பகுதியில் உள்ள கிளையாறு வெலிகண்டல் வழியாக கடலை அடைகின்றது. இக்கிளையில் இருந்து உருவாகும் பிறிதொரு கிளை முரசுமோட்டை வழியே ஆனையிறவுக் கடலை சேர்கிறது. மேற்குப் பக்கத்தில் உள்ள கிளை கோரக்கட்டு ஊடாக கடலை சென்றடைகின்றது.

கிழக்குப் பகுதியில் உள்ள கிளையாறு வெலிக்கண்டல் வழியாகக் கடலை அடைகிறது. இக்கிளையில் இருந்து உருவாகும் பிறிதொரு கிளை முரசுமோட்டை வழியே ஆனையிறவுக் கடலைச் சேர்கிறது மேற்குப் பக்கத்தில் உள்ள கிளை கோரக்கன்ட்டு ஊடாகக் கடலைச் சென்று சேர்கிறது. இவ்வாறுகள் பெருமளவு மணலைக் கொண்டு வந்து சேர்க்கின்றன. இவை யாழ்ப்பாணம், கிளிநொச்சி மாவட்டங்களில் கட்டட நிர்மாணப் பணிகளுக்கு உதவுகின்றன. இவ்வாறுகள் கடலுடன் சேரும் கழிமுகப் பகுதிகள் இறால், மீன் பிடிக்கு உதவுகின்றன.

இரணைமடுக்குள நீரை நேர்த்திப் பொருளாகப் பயன்படுத்தி, வழிபாடு நடைபெறுவதுண்டு. இது ஆண்டுப் பெருவிழாக் காலத்தில் இரவு, தீர்த்தத் திருவிழாவின்போது நிகழ்கிறது. பொங்கல் நாளன்று வழுந்துப் பானைக்கு நீர், இரணைமடுக் குளத்தில் கொள்ளப்படும். அந்தவேளையில் அந்நிகழ்வோடு சமாந்தரமாக குடும்ப தீர்த்தமெடுத்தல் நடைபெறுகின்றது. முதல் வழுந்துப் பானைகளுக்குப் பூசை கிரியைகளோடு நீர் எடுத்தல் நடைபெறும். நீர் எடுத்த வழுந்துப் பானையினர். படியேறி மேல்வந்து, அம்பாளைப் பார்த்தபடி நிற்பர். பின்னர் குடும்ப தீர்த்தம் எடுக்கும் நிகழ்வு நடைபெறும். வழுந்துப் பானைகள் போன்று இக்குடும்ப தீர்த்தத்தைக் குருக்களே எடுத்துக் கொடுப்பார். குடும்ப தீர்த்தப் பானையினர் வரிசையாகத் தொடர்ந்து வருவர். கோயில் கோபுர வாசலை அடைந்தவுடன் வழுந்துப் பானைக்காரர் உள்வீதியை வலம் வரும்போது, குடும்ப தீர்த்தக்காரர் நேரடியாக கோயில் உள்ளே சென்று குருக்களிடம் குடங்களைக் கொடுப்பார். குருக்கள் குடங்களைப் பெற்று அம்பாளினுடைய திருவடிகளில் சேர்ப்பிப்பார்.

பெரும்பாலும் பெண்களே குடும்ப தீர்த்தம் எடுக்கின்றனர். அன்று ஒரு புனிதமான நாள், தாய் உறவில் உள்ளவர்களுக்குப் பிதுர் கடமை செய்கின்ற நாள். குடும்ப தீர்த்தம் எடுக்கும் பக்தர்கள், தோய்ந்து, நீராடி சுத்தமாக வந்து விரதமிருந்து இந்நேர்த்தியைச் செய்கின்றனர். பொங்கல் தொடங்கிய நாள் முதல், இந்நிகழ்வு இடம்பெறுவதால் இதுவும் சுவாமிகளுடைய சிந்தனை என்று மக்கள் நம்புகின்றனர்.

நேர்த்தி வைப் போர் பிள்ளை களின் கல்வி, திருமணம், தொழிற் பிணக்குகள், வாழ்க்கைச் சிக்கல், நோய் நொடிகள் ஆகிய வற்றுக்கு நேர்த்தி வைத்துப் பயன்பெறு கின்றனர்.

முதல்முதல் வழுந்துப் பானை பொங்கியவர், புத்துவெட்டுவானில் வாழ்பவர். கோவிலோடு நீண்ட தொடர்புடையவர். அவருக்கு அப்பணி வழங்கப்பட்டது. அவர் குடும்பத்துடன் சிறப்பாகவே செய்து வந்தார். ஒருமுறை நாட்டின் அசாதாரண சூழ்நிலையால் வரமுடியவில்லை. உடனடியாக ஒருவரை ஏற்பாடு செய்தனர். அவரும் கண்ணுங்கருத்துமாக நடத்திவந்தார். பிறிதொருமுறை, இருவருமே வரமுடியவில்லை. அவசர அவசரமாக வேறு ஒருவரை ஒழுங்கு செய்தோம். இப்போது இம்மூவரும் ஒழுங்காகவும், சிறப்பாகவும் செய்து வருகின்றனர். வழுந்துப் பானைகளில், குளத்து நீரை எடுப்பது, ஒரு பண்பாட்டு நிகழ்ச்சி. வழுந்துப் பானைகளுக்கு நீர் எடுக்கப்போகும்போது, சங்கு சேமக்கலம் ஒலிக்க, பறைமேளங் கொட்ட, நட்டுவமேளம் இசைபரப்ப, ஆலவட்டம், பதாகை, கொடி என்பன அணி வகுத்து முன்செல்ல, பின்னர் கூட்டு வழிபாட்டுடன் அணி வழிபாடு இயற்ற, "அரோகரா" "அரோகரா" ஒலி உரத்து ஒலிக்க நடைபெறும் நிகழ்வு இது பக்தியை ஏற்படுத்துவது.



பொங்கல் யாவும் நிறைவெய்தியதும், பொதுப்படையால், கோயில் முன்றலில் நடைபெறும் அந்நேரம் அம்பாள் வெளிவீதி ஊர்வலமாக வந்து, பொங்கியவர்களை நோக்கி அருள்பாலிப்பார். அன்பர்கள் அடியார்கள் மனநிறைவுடன் இல்லம் செல்வர். வடபகுதி விவசாயிகளின் ஒன்றுகூடல் நிகழ்வாகவும் அடியவர்களின் நேர்த்திக் கடனாகவும் இது பெருஞ் சிறப்புடன் நடந்துவருகின்றது. இப்போது தேரோட்டம் நடைபெறுகின்றது. பின்னரே பழைமையான பொங்கலைக் கொண்டாட வேண்டும் என அன்பர்கள் சிலர் எண்ணினர். அறங்காவலர் சபையினர் நீண்ட ஆலோசனையின் பின் அம்பாளிடம் முடிவெடுக்கும் பொறுப்பை விட்டார். அம்பாள் பழமையும், பாரம்பரியமும் தொடர வேண்டும் என உணர்த்தினர். அந்த அளவுக்கு இது அம்பாளினுடைய பழைமையும், பாரம்பரியமும் உடைய ஒரு சிறந்த நிகழ்ச்சி.

பொங்கல் அம்பாளுக்காக ஏற்படுத்தப்பட்ட, பொதுமக்கள் பங்குகொள்ளும் சிறப்பு நிகழ்ச்சி, சித்திரை பூரணை நாள், முன்னிரவு வேளையில், நடைபெறுவது. அந்நாட்களில் இங்கு வாழ்ந்த மக்களில் பெரும்பங்கினர், விவசாயிகளாக இருந்தனர். அவர்களுடைய தொழில் என்னவாக இருந்தாலும், நீர் பிரதானமானது. இவர்களுக்கு நீர் கிடைப்பது, இரணைமடுக் குளத்தால். இதை உணர்ந்த தவத்திருயோகர்சுவாமிகள், "அம்பாளுக்கு ஆயிரம் பானை வைத்துப் பொங்குங்கள்" என்று தீர்க்க தரிசனமாகக் கூறினார். இதற்கமைவாக இரணைமடுக்குள நீர்பாயும் ஊர்களும், அயற்கிராமங்களும், அம்பாளுடைய பொங்கல் ஒரு முக்கிய எழுச்சி நிகழ்ச்சியாகக் கருதப்பட்டது. பொங்கல் ஒரு நேரடி வழிபாட்டு நிகழ்வு. ஒருவர் தமக்கு வசதிபோல், தன் எண்ணம்போல, சொந்தத் தீர்மானம் எடுத்துச் செயற்படுத்தக்கூடியது. தாம் எண்ணியபடி பொங்கல் நிறைவேறிவிட்டால், குடும்ப உறுப்பினர் யாவரும் மனஅமைதியும், மனநிறைவும் பெறுவார். எனவே அடியார்கள் கூடுவதில் தடையிராது. இந்நாட்களில் விசேட பேருந்து சேவையும் நடைபெறுவதில், குடும்பத்தினர் கூடிவந்து பொங்கி மகிழ்வார்.

## கோயிற் சூழல்


தேர்முட்டியடி


குருக்கள் தங்குமிடம்


பல்சேவை மண்டபம்


தாகசாந்தி நிலையம்



ஆலய உள் வீதி





வில்லு மண்டபம்



மணிக்கூட்டுக் கோபுரம்

## அத்தியாயம் – இ

# கனகாம்பிகை அம்பாளின் தனித்துவம்

சக்தி வழிபாடு தமிழர்களின் ஆதிவழி பாடுகளில் ஒன்று. காடுறை தெய்வமாக கொற்றவையாகத் தமிழர்களால் வழிபாடு நடத்தப்பட்டுள்ளது. இதேபோன்று உலகம் முழுவதும் சக்தி வழிபாட்டு முறைமை பேணப்பட்டுள்ளது. அந்த வகையில் 64 சக்திபீடங்கள் உள்ளன. இவற்றின் தலைமைப் பீடமாக மதுரை மீனாட்சி அம்மன் கோயில் கொள்ளப்படுகிறது. இலங்கையில் உள்ள நயினாதீவு நாகபூசணி அம்பாள் கோயில் சக்திபீடங்களில் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. பெண்தெய்வ வழிபாடு தமிழர் களுடன் தொடர்புடையது என்று நிறுவப்பட் டுள்ளது. இக்கருத்தை, 2011ஆம் ஆண்டு நடைபெற்ற தமிழ்மொழி மாநாட்டில், சுவிடம், ரஷ்யா, அமெரிக்கா நாட்டுத் தமிழ் அறிஞர் மொகன்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சி களில் கண்டெடுக்கப்பட்ட பெண் தெய்வச் சிலைகள் இதற்குச் சான்றாக உள்ளன என்று ஆதாரங்களுடன் வலியுறுத்தியுள்ளார்.

இலங்கையில், கண்ணகி வழிபாடு, கயபாகு மன்னனால் இரண்டாம் நூற்றாண் டில் உருவாக்கப்பட்டுள்ளது. இது இலங்கை முழுவதும் வெவ்வேறு கடவுளராக வழிபாடு நடைபெறுகிறது. தென்னிலங்கைச் சிங்கள வர் மத்தியில் பத்தினித் தெய்வ வழிபாடு என்ற பெயரில் கிராமங்கள் தோறும் நடைபெறு கின்றது. அத்தோடு கண்டிய பெரஹெரா என்ற விழாவாகவும் ஆண்டுதோறும் அரச மரியாதையோடு மிகச் சிறப்பாகக் கொண்டா டப்படுகின்றது. கிழக்கிலங்கையில், நகரங்கள் தவிர்ந்த கிராமங்கள் யாவற்றிலும் கண்ணகி வழிபாடு மக்கள் இயக்கமாக நடைபெறு கின்றது. இங்கு இக்கோயில்களாலும் மக்களாவும் கண்ணகி வழக்குரை என்ற காவியம் போற்றிப் பாராட்டப்படுகின்றது.

முல்லைத்தீவில், கயவாகு மன்னனால் அமைக்கப்பட்ட பத்தாவது கண்ணகி கோயில், பற்றாப்பளையில் உள்ளது. இங்கு ஆண்டுதோறும் வைகாசிப் பூரணையில், பலவூர் மக்கள் கலந்து கொள்ளும், இராப்பகல் காவடி ஆட்டத்தோடு கூடிய பொங்கல் நடை பெறுகின்றது. பல்வேறு வகையான நாட்டுக்கூத்தும் அரங்கேறு கின்றது. இந்த எழுச்சியின் பயனாக, யாழ்ப்பாணக் கோயில்களில் கண்ணகி கோவலன் கதை படிக்கப் படுகின்றது. முன்னர், இக்கோயில்களில் இக்கதை, பறைமேளத்துடன் கூத்தாக நடைபெற்றுள்ளது. இந்தக் கண்ணகி வழிபாட்டோடு தொடர்புடைய மீனாட்சி அம்மன் வழிபாடு வடக்கி லும், மாரியம்மன் வழிபாடு மலைநாட்டிலும், கண்ணகி வழிபாடு கிழக் கிலங்கையி லும் பெருவழக்காக கொண்டாடப்படுகின்றது.

இப்படியான சக்தி வழிபாட்டுத் தொடர்ச்சி ஒன்று பரவலாகக் காணப்பட்டாலும், மதுரையில் சிற்ப வேலைகள் நிறைந்த பழைமை வாய்ந்த தலமாக உள்ளது. மீனாட்சி அம்மன் கோயில் இது உலகம் முழுவதும் தமிழர்களால் தலைமை சக்தி வழிபாட்டு தலமாக போற்றப்படுகின்றது. மதுரை மீனாட்சி, காசிவிசாலாட்சி, காஞ்சிகாமாட்சி முதலிய எல்லா மூர்த்தங்களும், ஒரே சக்தி மூர்த்தம் என்று சொல்லப்படுகின்றது. ஆனால் அமைப்பிலும் திருவருட் சக்தியிலும், வழிபாட்டிலும் வேறுபாடுடையவை. இவற்றுள் மதுரை மீனாட்சி மூர்த்தம் மீனாட்சிப் பெயரிலும், வேறு பெயர்களிலும் வழிபடப்படுகின்றன. இந்த வகையில் இரணைமடு பதியுறை பெருமாட்டியும் மதுரை மீனாட்சியின் அமைப்பே.

தாய்த்தெய்வ வழிபாட்டிற்கு உலகில் பல வழிபாட்டிடங்கள் உள்ளன. அவற்றுள் மூலமூர்த்தியாகவும், முன்னிலையிலும் உள்ளது. மதுரை மீனாட்சி அம்மன் கோயில். இங்கு உள்ள மூலமூர்த்தி தனித்துவமானது. மற்றைய பெண் தெய்வங்களுக்கெல்லாம், நான்கு கைகளோ, அல்லது அதற்கு மேற்பட்ட கைகளோ உள்ளபோது: மதுரை மீனாட்சி அம்மனுக்கு மாத்திரம் மனிதர்களைப் போன்று இரண்டு கைகள் உள்ளன. ஏனைய பெண் தெய்வங்களின் கைகளில், ஆயுதம், பூ, நூல், மாலை போன்ற பொருட்களில் ஏதோ ஒன்று காட்சி தரும். ஆனால், மீனாட்சி அம்மனுடைய வலது கையில் இரண்டு பொருட்கள், அவையாவன இராச மல்லிகைப்பூவும் (பாரிஜாதம்), அதன்மேலே கிளியும், இடது கையிலே பொருளேதும் இல்லை. அது இடுப்பை அண்மித்து காட்சி தருகின்றது. இக்கோலம் அவர்கள் நடனமாடிய வடிவம் என்பர்.

பெண் தெய்வங்கள், மனித வடிவில் தோன்றி, நடனமாடிய இடங்களில் உருவாக்கப்பட்ட கோயில்களிலேயே, மீனாட்சி அம்மன் சிலை போன்ற அமைப்புக்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இப்படியான தெய்வ வடிவங்கள், வழிபாட்டு முறைகள் என்பவற்றை, நன்குணர்ந்த யோகர் சுவாமிகள், இங்கு மீனாட்சி மூர்த்தமான சிலையையே அமைக்க வேண்டும் என்று தெரிவித்தார். சுவாமிகளுடைய உள உணர்வை நன்கு அறிந்த அரச அதிபர், தமிழ் நாட்டில் உள்ள சமயச் சான்றோர்களுடன் தொடர்புகொண்டு, சிற்பிகளைத் தேடினார். அந்த வகையில் பாரதி, கட்டப்பொம்மன், வள்ளுவர் போன்ற சிலைகள் அமைத்துப் பேர் புகழோடு இருந்தவரை இனங்கண்டார். இப்படியான சிற்பக்கலைக் கல்லூரி முதல்வராகத் திருவொற்றியூரிலே வாழ்ந்த அவரோடு தொடர்புகொண்டு யோகர் சுவாமிகளுடைய மனக்கிடையைத் தெரிவித்தார். அவர் பெயர் சுந்தசாமி அவர் அரச அதிபர் தெரிவித்த மீனாட்சி அம்மன் சிலையை அமைத்துத்தர ஒத்துக்கொண்டார். இப்படியான சிலை அமைக்கும் சிற்பிகள் அதற்கென நூல்களில் சொல்லப்பட்டவாறே அமைப்பர். அந்தச் சுலோகங்களை மனப்பாடஞ் செய்து, சிலை வடிக்கும் போதும், ஏனைய நேரங்களிலும், சிலை வேலை நிறைவேறும் வரை அச்சுலோகங்களையே மனதில் இருத்தி ஏதும் தவறு ஏற்படக்கூடாது என்ற எண்ணத்தோடு சிலை செய்யும் பணியில் ஈடுபடுவார்.

கந்தசாமி ஸ்தபதி அம்பாளுடைய மூலஸ்தானச் சிலையை, குறிப்பிட்ட காலத்தில் செய்து தருவதாக, இணங்கியிருந்தார். இதற்கமைவாக, மதுரை மீனாட்சி அம்மன் கோயில் அருகே ஒரு நிலையம் அமைத்தும் தினமும் மதுரை மீனாட்சி அம்பாள் கோயில் சென்று வழிபட்டு கேட்டு பின்பு வந்துதான் சிலை அமைக்கும் பணியில் ஈடுபடுவார். தொடங்கிய நாள் முதல், தனக்கு ஏற்பட்ட சகுனங்களின்படி, கிளிநொச்சியில் உருவாகப் போகின்ற கோயிலில், மூலமூர்த்தியாகிய அம்பாளின் பேரருளை உணர்ந்து, வியந்து போனார். சிலை உரிய காலத்திற்கு சற்று முன்பாக, அமைந்து விட்டது. மிகுந்த அகமகிழ்வோடு அரச அதிபருக்கு அறிவித்து, அதிபர் தெரிவித்தபடியே சிலையை அனுப்பி வைத்தார்.

இந்தியாவில் உள்ள கோயில்கள் பல்லாயிரம், ஆனால் மக்கள் நிரம்பி வழியும் கோயில்கள் ஒரு சிலவே, மக்கள் கூடும் கோயில்களில், சித்தர்கள், யோகிகள், ஞானிகள் வாழ்ந்து, மக்களுக்கு வாழ வழிகாட்டி, துன்ப துயரங்களில் இருந்து விடுபட வேண்டிய, போதனைகளை மேற்கொண்டனர். இதனால், பாமர மக்களும் பயனடைந்தனர். இச்சித்தர்கள், பூதவுடலை விட்டு நீங்கிய பின், அக்கோயில்கள் மூலமாக அருள் பாலித்து வருகின்றனர். அவர்களின் வழிகாட்டலினால் ஆன்மீக மேன்மையடைவார்கள். இக்கோயில்களுக்கு மீண்டும் மீண்டும் படையெடுக்கின்றனர். இந்த நோக்கில், சிதம்பரம், மதுரை, திருவண்ணாமலை, திருச்செந்தூர் ஆகியவை சக்தி வாய்ந்த தலங்களாகவும், மக்கள் மிகுதியாக விரும்பிக் கூடும் கோயில்களாகவும் உள்ளன. சிதம்பரத்தில் திருமூலரும், மதுரையில் சுந்தரனாரும், திருவண்ணாமலையில் இடைக்காடரும் வாழ்ந்து மகாசமாதியடைந்துள்ளனர். திருச்செந்தூரில் மூலஸ்தானத்திற்கு கீழே, பாதாள அறையில், பஞ்சலிங்கங்கள் என்ற உருவங்கள் உள்ளன. இவையனைத்தும் சித்தர்களே. இதேபோன்று பழனியில் போகரும் திருவையாற்றில் சுகபேகசித்தரும், மருதமலையில் பாம்பாட்டிச் சித்தரும் வாழ்ந்து, மக்களை நல்வழிப்படுத்தி வாழவழிகாட்டியுள்ளனர்.

இதேபோன்று மேல்மருவத்தூரில் உள்ள ஆதிபராசக்தி சித்தர் பீடத்தில் பங்காரு அடிகள் என்ற சித்தர் இன்றும் பல்லாயிரக் கணக்கானவர்களை ஈர்க்கின்றார். இவரது வழிகாட்டலை ஏற்று ஆந்திரா, கர்நாடகா, மலையாளம், ஒறிஸா போன்ற மாநிலங்களிலும், உலகம் முழுவதும் பல, சக்திபீடங்கள், வாரவழிபாட்டு மன்றங்கள் என்பன, 6000க்கு மேல் உருவாகியுள்ளன. இதே போன்று ஏனைய கோயில்களிலும் முன்னைய சித்தர்களின் வழித்தோன்றல்கள் இருந்து இன்றும் வழிபடுத்துகின்றனர்.

நமது நாட்டிலுள்ள நல்லூர் முருகன் கோயில், ஆகம முறைப்படி அமைக்கப்பட்ட கோயில் அல்ல, அங்கு இவ்வளவு பெருந்தொகையிலான மக்கள், ஆண்டுதோறும் கூடக்காரணம் என்ன? அவ்விடமுள்ள சித்தர்கள் வாழ்ந்த இடமே. நல்லூர் தேர்முட்டியருகே யோகர் சுவாமிகள் அவரது குருமார்கள் பலரும் வாழ்ந்துள்ளனர். இவர்களுக்கு மேலாக நல்லூர் மூலஸ்தானம் அமைந்துள்ள இடத்திலுள்ள ஒரு முஸ்லீம் சுவாமி சமாதியடைந்ததாகச் சொல்லப்படுகின்றது. ஆகவே உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் இருந்து

பல்லாயிரக்கணக்கானவர்கள் வந்து வழி பட்டுப் பயனடைந்து திரும்புகின்றனர்.

அந்த மாதிரி யோகர் சுவாமிகள் நடமாடிய வளாகம் இப்போது கனகாம்பிகை அம்பாள் கோயில் அமைந்துள்ள இடம். யோகர் சுவாமிகள் நல்லூர் செல்லும் முன், இங்கு கடமையாற்றினார். அவரை அப்போது இங்குள்ள பொறியியலாளராக இருந்த ஆங்கிலேயர் 'கடவுள் மனிதன்" என்று அழைத்துள்ளார். அந்த அளவுக்கு தனது ஆன்மீக ஈடேற்றத்திற்கான முயற்சிகளை இங்கு நிறைவாகச் செய்துள்ளார். சமய நூல்கள் வாசித்து தியானம் யோகப் பயிற்சியையும் சாதனைகளையும் இங்கு செய்துள்ளார். ஆனால் இந்த மண்ணில் அவருடைய சித்து தொழிற்படுகின்றது. எல்லாச் சித்தர்களுக்கும், அவர்கள் வாழ்ந்த இடத்திலேயே, சமாதி அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் யோகர் சுவாமிகளுக்கு சமாதி எங்கும் அமைக்கப்படவில்லை என்பதாலும், அவர் இங்கு இக்கோயிலின் அமைவிடம், மூலமூர்த்தி, செயற்பாடுகள் யாவற்றையும், நெறிப்படுத்தியவர் என்பதாலும் இவர் இக்கோயிலில் இருந்து அருள் பாலிக்கின்றார் என மக்கள் நம்புகின்றனர்.

எல்லாத் தெய்வங்களுக்கும் அபயக்கரம் உண்டு. ஆனால் மீனாட்சி அம்மனுக்கு இல்லை அது போன்று கனகாம்பிகை அம்பாளுக்கும் இல்லை. இவர்கள் கடைக்கண் பார்வையாலே அருள் சுரக்கின்றனர். சிலர் அம்பாள் திருவடிகளால் அருள் சுரப்பதாகவும் சொல்கின்றனர். பெண் தெய்வங்கள் இருந்த நிலையில், அமையும், ஆனால்? மீனாட்சி அம்மன் நின்ற திருக்கோலத்திலேயே அமைக்கப்படுகின்றார். அதேபோன்று கனகாம்பிகை அம்பாளும் நின்ற திருக்கோலத்திலேயே உருவாக்கப்பட்டுள்ளார்.

கனகாம்பிகை அம்பாளில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா, மற்றும் ஆண்டுப் பெருவிழாக் காலங்களில், கோயிலில் பணிபுரிந்த சிவாச்சாரியார்கள் அம்பாளுடைய மூலமூர்த்தியாகவுள்ள சில அமைப்பைப் பாராட்டிப் பேசியுள்ளார். கலை நுட்பங்கள் தெரிந்த விற்பனர்களும் கூறியுள்ளார். இதேபோன்று வீதி உலாவரும் எழுந்தருளி விக்கிரமும் இந்தியாவிலே செய்யப்பட்டது. சிறந்த ஒரு படைப்பு ஒருமுறை அம்பாள் சிலையின் கலையம்சங்களைப் பார்த்தவர் மீண்டும் மீண்டும் பார்க்க விரும்புவர். அம்பாள் வீதி உலா வரும்போது தூர உள்ள மக்களும் அம்பாள் தம்மையே பார்ப்பதாகவும் கூறுவார். அந்த மாதிரியான அற்புதச்சிலையமைப்பு.

சில காலத்தின் பின், அரசாங்க அதிபர் சிறிகாந்தா இந்தியா சென்றார். அந்தக் காலத்தில் அவர், திருவொற்றியூர் சென்று, ஸ்பதி கந்தசாமியைக் கண்டு, அம்பாளை அமைத்த கலைத்தன்மையை மெச்சிப் பாராட்டிப் பரிசும் வழங்கினார். அத்தோடு, ஸ்பதியினுடைய கைகளைப் பற்றி, முத்தங்கொடுத்து, தன் மனஉணர்வை வெளிப்படுத்தினார்.



## வாகனசாலையும், தீர்த்தமும்



வாகனங்கள்



இரணைமடுக் குளம் - தீர்த்தம்



வாகனங்கள்



பீடங்கள்

## 29-01-2010 இல் பாலஸ்தாபனம்



பாலஸ்தாபன யாகத்தின்போது



பாலஸ்தாபனக் கிரியைகளின்போது



முழுமுதற்கடவுள் விநாயகப் பெருமானின் தீபாராதனை



அம்பாளின் விக்கிரகம் பாலஸ்தாபனம் செய்யமுன்.

## 29-01-2010 இல் பாலஸ்தாபனம்



நந்தி பலிபீடத்திற்குக் குருக்கள் கிரியை செய்தல்



சிற்பாசார்யார் நந்தி விக்கிரகத்தை எடுக்கும்போது.



பாலஸ்தாபன அறையில் அம்பாளிற்கு அபிஷேகம் செய்யும்போது



பாலஸ்தாபனத்துடன் முன் தோற்றம்.

இயந்திர பூசை



யந்திர அபிஷேகம்



கோமுகை பிரதிஷ்டானம்



ஆரம்ப நிகழ்வில்



காளாஞ்சி பெறல்

## அத்தியாயம் – ஈ

# கனகாம்பிகை அம்பாளின் கரிக்கோலம்

கனகாம்பிகை அம்பாள் கோயில் 50 ஆண்டுகளுக்கு முன், இப்போதைய சந்ததி மக்கள் உள்ள இப்போதைய காலத்தில் உருவாக்கப்பட்டது என்பதால் மக்கள் இந்த நிகழ்ச்சிகளை விரிவாக அறிந்து கொள்ள வென இதை விரிப்புச் செய்கிறோம். காடுகள் நிறைந்த ஓர் இடத்திற் கோயில் அமைத்து இறைவியை நிலைநிறுத்தமுன் செய்ய வேண்டியவற்றை விரிவாகப் பார்ப்போம். இறைவியை 108க்கு மேற்பட்ட ஊர்களுக்கு எடுத்துச் சென்று, அங்கு வாழும் சைவச் சான்றோர்களினதும், ஞானிகளினதும், மூர்த்திகளினதும், ஆசியைப் பெறவேண்டும் என்பது விதியும் நடைமுறையுமாகும். அதற்கமைவாகவே அம்பாளினுடைய கரிக்கோலமும் நடைபெற்றது.

இனி, அம்பாளினுடைய கரிக்கோலத் திற்கு வருவோம். முன்னர் மன்னர் காலத்தில் அக்கால மக்கள் புதிதாக அமைக்கப்படும் கோவிலின் மூலமூர்த்தியை யானைமீது இருத்தி 108க்கு மேற்பட்ட ஊர்களுக்கு எடுத்துச்சென்று அவ்வூர்களில் உள்ள சைவச் சான்றோர்களினதும், சித்தர்களினதும், கோயில்களினதும் ஆசியைப் பெறவைப்பர். இப்படிச் செய்வதன்மூலம், அம்மூல மூர்த்திக்கு அருள் வழங்கல், என்ற சாந்நித்தியம் அதிகரிக்கும் என்ற வழமையைப் பின்பற்றினர். கரி=யானை, கோலம் = ஊர் உலாப் போதல். எனவே, கரிக்கோலம் என்பது மூலமூர்த்தியை யானைமீது ஏற்றி ஊர் ஊராகச் செல்லுதல் என்று பொருள்படும்.

அந்நாளிற் பிரபல வர்த்தகரான இராமசாமிப்பிள்ளை அவர்களால், தமிழ் நாட்டில் இருந்து இந்த விக்கிரகம் வல்வெட்டித்துறைக்கு எடுத்துவரப்பட்டது. பின்னர் அங்கிருந்து, யாழ்ப்பாணத்து மூலை முடுக்குகளில் உள்ள ஊரெல்லாம், புதிய சிறிய ஊர்தி ஒன்றில் எடுத்துச் செல்லப்பட்டது. அக்காலத்தில் யாழ்ப்பாணத்து அரச அதிபராக இருந்த திரு.ம.சிறிகாந்தா அவர்கள் மாவட்ட இணைப்புக் குழுக்கூட்டத்தில் எடுத்துச் சொல்லி; உதவி அரசாங்க அதிபர்கள் யாவரினதும் முழுமையான ஒத்துழைப்பைப் பெற்றுச் சிறப்பாகப் பவனி நடைபெற ஏற்பாடு செய்திருந்தார். இதற்கமைவாக, ஒவ்வொரு உதவி அரசாங்க அதிபர் பிரிவிலும், அவர்களே முன்னின்று, தங்கள் பிரிவில் உள்ள ஊர்களுக்கு எடுத்துச் சென்றனர். இரவில் ஒரு கோயிலில் அம்பாள் தங்க வசதி செய்து, வழிபாடு, பூசை முதலியன செய்து, அடுத்த நாட் காலை பவனி புறப்படும் முன்னரும்; வழிபாடு, பூசை செய்து வரவேற்றனர். மதியம் ஒரு கோயிலில் இளைப்பாறி, வழிபாடுகளும் நடந்தன. இவ்வாறாக ஒரு மாத காலத்திற்குக் கூடுதலாக; பிரபல்ய மான எல்லாக் கோயில் களின் பூசைகளையும்

ஏற்றுக்கொண்டு; எமது பிரதேசமான கரைச்சி, துணுக்காய்ப் பிரிவுக்கு அம்பாள் வந்து சேர்ந்தார்.

பின்னர், பச்சிலைப்பள்ளி, கரைச்சி, துணுக்காய்ப் பிரிவு உதவி அரசாங்க அதிபராக இருந்த திரு. தி. முருகேசபிள்ளை அவர்கள் தலைமையில், அன்று பிரபலமாக இருந்த கோயில்களுக்கும், கோயிலை அண்டிய ஊர்களுக்கும், அம்பாள் அழைத்துச் செல்லப்பட்டார். இவ்விக்கிரகம் இரணைமடுவில் உள்ள கோயிலில் திருநிலை நிறுத்தப்படப் போகிறது என்பதால்; இப்பகுதிகளில் மனப்பூர்வமான வரவேற்புக் கிடைத்தது. எல்லாமாக 48 நாட்கள் கொண்ட ஒரு மண்டலச் சுற்றுலா முடிந்த பின்னர், அம்பாள் கோவிலை அடைந்தார். இந்த உதவி அரசாங்க அதிபர் பிரிவு ஏற்பாடுகளை அந்த நாட்களில் கிளிநொச்சி திருநெறிக்கழகம் செய்தது.

கோயிலில், சில நாட்கள் தானியங்களுக்குள் நிறுத்திவைத்த பின், சில நாட்களுக்கு நீருக்குள் மூழ்க வைத்த பின்னர்தான், மூலஸ்தானத்தில் அம்பாள் நிலைநிறுத்தப்பட்டார். இவ்வாறு மூலஸ்தானத்தில் எழுந்தருள்வதற்கு முன்னரான சிறப்புகள் யாவும் சீராகவும், செம்மையாகவும் நடைபெற்ற பின்னர்தான், அம்பாள் மூலஸ்தானத்தில் திருஅருளாட்சி வழங்கலானார்.

இந்தக் கரிக்கோலம் முதல், இறுதியாகக் கோயிலில் நடந்த வைபவங்கள்வரை யோகர் சுவாமிகளுடைய நெறிப்படுத்தலில் ஒழுங்காக நடைபெற்றது.

ஒரு கொள்கையை எடுத்துக்கொள்
அதற்காகவே உன்னை அர்ப்பணித்து
பொறுமையுடன் போராடிக் கொண்டிரு
உனக்கு ஆதரவான காலம் வரும்
உங்கள் ஒவ்வொரு முயற்சியிலும்
என் பிரார்த்தனைகளும் ஆசிகளும் தொடர்ந்து வரும்
நீங்கள் இணைந்து பாடுபடுங்கள்
நீங்கள் வென்றே ஆகவேண்டும்

– சுவாமி விவேகானந்தா



## அத்தியாயம் – உ

## கிராமங்கள் தோறும் அம்பாளின் ஊர் உலா

இது பங்குனி மாதம், இரண்டாம் திங்கட்கிழமை தொடங்கி அந்தக் கிழமையில் தொடர்ந்துவரும் ஞாயிறு மாலையுடன் நிறைவுறும் இவ்வூர் உலா கிளிநொச்சியின் தெற்குப் பகுதியில் உள்ள இரணைமடுவின் இடதுகரை வாய்க்காற் கிராமங்களுடன் தொடங்கும். கோயிலுக்கு அருகாமையில் உள்ள கிராமங்கள் ஊர் உலா முடிந்ததும், A9 வீதியின் மேற்குப் பக்கமாகக் கிராமங்களுக்குச் செல்லும், தொடர்ந்து வடபகுதிக் கிராமங்கள் முடிவுற்றதும் A9 வீதியின் கிழக்குக் கரைக்குச் செல்லும் அவ்வழியில், பரந்தன், முரசு மோட்டை, கல்மடு, இராமநாதபுரம், கிராமங்களை வலம்வந்து பின்னர், வலது கரை வாய்க்கால் வழியாக இரணைமடு அணைக்கட்டை அடையும், இரணைமடுக்குளத்தின் மீதும், அணைக்கட்டின் மீதும் கடைக் கண் பார்வையைச் செலுத்தியபடி கோவிலை வந்தடையும்.

அம்பாள் ஊர் உலா வருவதை முன்னரே சபையினர், ஒலிபெருக்கி வாயிலாக அறிவிப்பர். அம்பாளின் ஊர்திக்குச் சற்று முன்பாக, அம்பாளுக்கு விருப்பமான பறை மேளங் கொட்டும் ஊர்தி சென்று கொண்டிருக்கும். அம்பாள் தங்கள் கிராமத்துக்கு வருவதாக அறிவித்தல் கிடைத்ததும், அடியார்கள் அம்பாள் வரும் வழியைச் சுத்தம் செய்யத் தொடங்கிவிடுவர். பின்னர், தண்ணீர் தெளித்துப் பந்தல்போட்டு, வாழை, மாவிலை, தோரணம், மலர்ச் சரங்கட்டி, பூரண கும்பத்தோடும், காணிக்கைப் பொருட்களோடும், நீராடித் தோய்த்துலர்ந்த ஆடை அணிந்து திருநீற்று மேனியராக குளித்து ஆயத்தமாகி காத்திருப்பார். அம்பாள் வந்ததும் அர்ச்சனைத்தட்டை வழங்கி அர்ச்சனை செய்விப்பர். விபூதிப் பிரசாதம் பெறமுண்டியடிப்பர். அம்பாளுக்கு அர்ச்சனை நடைபெறும்போதே மக்கள், ஆண்டாண்டாகச் செய்யும் காணிக்கைப் பொருட்களான நெல், அரிசி, தேங்காய் என்பவற்றைத் தொண்டர்களிடம் கையளிப்பர். காணிக்கை பெரும்பாலும் நெல்லாகவே அமையும். சிலர் மூடைக் கணக்கிற் கொடுப்பர். அம்பாளுடன் வந்த அடியார்களுக்கு, நேரத்துக்குத் தக்கபடியான பான வகைகளும், சிற்றுண்டியும் கிடைக்கும்.

அதேநேரம், அம்பாளினுடைய ஊர்தி மதியம் ஒரு கோயிலிலும், இரவு ஒரு கோயிலிலும் இளைப்பாறும் அப்போது அக்குறிச்சி மக்கள் அக்கோயிலிற் கூடி பூசை வழிபாட்டில் ஈடுபடுவர். அம்பாளுடன் வரும் தொண்டர்களுக்கு உணவு வழங்கப்படும். அம்பாள் இரவு தங்கும் கோயிலில், மாலையில் வரவேற்புப் பூசையும், அடுத்த நாட்காலையில் வழியனுப்புதற் பூசையும் நடைபெறும். இந்நேரங்களில் அக்கோயில்களில் கூட்டு வழிபாடு நடைபெறும். இரவு தங்கும் கோயிலில் அறங்காவலர் சபை உறுப்பினரும், அக்கோயிற் தொண்டர்களும், காவல் இருப்பர். ஊர்களில் அம்பாளை வரவேற்பது, தங்கள்

இல்லங்களுக்கு அம்பாளை அழைப்பது. போன்ற உணர் வோடு, நடைபெறும். தொண்டர்கள் ஊர் உலாவின்போதும், கோயில்களில் தங்கி இளைப்பாறும்போதும், உண்டியல்களைக் குலுக்கி நிதிசேகரிப்பர். அத்தனை நாளும் ஆசாரமாய் நடப்பர்.

இவ்வூர் உலா முதலாவது திருக்குட முழுக்கு நடைபெறுவதற்கு முன்னர் அம்பாளைக் கரிகோலம் கொண்டுசென்ற கோயில்களில், இரணைமடுக் குளத்து நீர்பாயும் இடங் களுக்குரிய கோயில்களுக்கு முன்னர் நடந்தது. ஊர் உலாத் தொடங்கிய காலத்தில் பாரதிபுரம் பகுதியும், சாந்தபுரம் பகுதியும் உருவாக்கப் பட்டிருக்கவில்லை. பின்னர் பாரதிபுரம் பகுதியில் மக்கள் குடியேறத்தொடங்கியபின் அங்கு கிராம சேவையாளர் திரு.க. யோகேந்திரன் அவர்கள், கோயில் அறங்காவலர் சபையிலும் துணைத் தலைவராக இருந்தார். அவர் அறங்காவலர் சபையுடன் வாதிட்டு ஏழை எளியமக்கள் வாழும் அப் பகுதிகளுக்கும் அம்பாளை எடுத்துச்சென்று, அவர்கள் வாழ்வை மேம்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டதற்கமைவாக அவ் விடம் முன்னர் சேர்க்கப் பட்டது. பின்னர் அதே போன்று சாந்தபுரமும் சேர்க்கப்பட்டது. இந்த ஊர் உலாச் செல்லும் ஏழு நாட்களும், அம்பாள் வீற்றிருக்கும் இழுபொறியில் மாற்றமிராது. ஏனைய நாட்களில் முற்பகல் ஒரு இழுபொறியும், பிற்பகல் ஒரு இழுபொறியும் பயன்படுத் தப்படும்.

பிற தேவைகளுக்கான இழுபொறி களும், இந்த மாதிரியே ஏற்பாடு செய்யப் படும். இவ்விடயங்களுக்கு அம்பாள் ஊர் ஊராகச் செல்லும் பகுதிகளில் உள்ள இழு பொறிகளுக்கு முன்னுரிமை கொடுக்கப் படும். அம்பாளின் ஊர்உலாவில் தமது இழுபொறி பயன்படுத்தப்படவேண்டும் என்றே பலரும் விரும்புவர்.

மூன்று வாரங்களுக்கு முன்னர் நடை பெறும் பொதுக் கூட்டத்தில், இதற்கான ஏற்பாடுகள் யாவும் கலந்துரையாடி, முடிவுகள் எடுக்கப்படும். இவ்வூர் உலாவில், அறங் காவலர் சுழற்சி முறையிற் பங்குகொள்வார். ஊர், ஊராகத் தொண்டர்கள் தெரிவு செய்யப்பட்டு, பணியில் ஈடுபடுத்தப்படுவர். தொடக்க காலங்களில் ஊர் உலாத் தொடங்கு முன் துண்டுப்பிரசுரங்கள், ஒலிபெருக்கி வாயிலாக அறிவித்தல் கொடுக்கப்படும்.

அன்பே நல்ல மொழி
ஆர்வமே உயர்வின் வழி
இயல்பான நடத்தையே இன்பம்
ஈன்றவரை மறப்பதே பெரும் துன்பம்
உண்மையாகப் பழகுதல் நல்ல மனிதப் பண்பு
ஊர்போற்ற உழைப்பை நீ நம்பு
எல்லோரும் வாழ வழிகாட்டு
ஏழைகள் உயரவும் உன்கரம் நீட்டு
ஐக்கியமே வாழ்வியலில் முக்கியம்
ஒற்றுமையே சந்தோசப் பாக்கியம்
ஓடுகிற தண்ணீராய் தெளிந்திரு
ஔவையைப் போல் வரலாற்றில் மிளிர்ந்திரு.

அ.பிரியன்



## அத்தியாயம் – ஊ

## அம்பாள் நிகழ்த்தி அருளிய அற்புதங்கள்

அற்புதங்களோடேயே அம்பாளின் கோயில் அமைப்புப்பணி தொடங்குகிறது. அந்நாளைய யாழ். மாவட்ட அரசாங்க அதிபர் உயர்திரு. ம. சிறிகாந்தா அவர்கள் யோகர்சுவாமிகளினுடைய அணுக்கத் தொண்டராகவும் இருந்தார். இவர் அம்பாளி னுடைய திருப்பணிச் சபைத் தலைவராகவும் இருந்ததால்; கால்கோள் விழாவில் சுவாமி களும் கலந்துகொள்ள வேண்டும் என அழைப்பு விட்டிருந்தார். சுவாமிகள் இரணைமடுக்குளக் கட்டுமானப் பணியின் போது களஞ்சியப் பொறுப்பாளராக இருந்து நடமாடிய புனிதபூமியிலே இக்கோயில் அமைய இருக்கிறது. சுவாமிகள் "நீங்கள் யாவரும் அங்கே போங்கள் நான் அங்கே வருவேன்" என்று சொல்லி அனுப்பியிருந்தார்.

அன்று அரசாங்க அதிபரின் அலுவலக ஊர்தி, உதவி அரசாங்க அதிபரின் ஊர்தி, ஆர்அன் கோ சின்னத்துரை அவர்களின் மகிழூந்து; ஞா. அப்புத்துரை அவர்களின் மகிழூந்து; கோம்கே ஜெயநூலபதினுடைய மகிழூந்து என்பன தொடர் அணியாக கிளிநொச்சியை விட்டுப் புறப்பட்டன. புறப்பட்டுச் சிறிது நேரத்தில் இத்தொடர் அணியின் முன் ஒரு கருடன் (ராஜாழி) தாளப் பறந்து சென்றது. அது இவர்கள் யாவரும் ஊர்தியைவிட்டு இறங்கியதும் இவர்கள் காணத்தக்கதாக முன்னே சென்று ஒரு மரத்தில் இருந்தது. இந்தச் சான்றோர்களுடன்; கோயில் நிலையம் எடுக்கும் விடயங்களில் நிபுணரான இந்தியப் பன்மொழி அறிஞர் ஸ்ரீமான் துரைசாமி சாஸ்திரி அவர்களும் இருந்தார். இவர்களுக்கு அவ்வறிஞர் கருடன் சென்று அமர்ந்த மரமே மூலஸ்தானம் என உறுதிபடத் தெரிவித்தார்.

இந்தத் தெய்வீகக் காட்சியையும்; யோகர்சுவாமிகளுடைய சித்தடலையும் கண்டு களிபேருவகை கொண்டனர். இச்சைவச் சான்றோர். இக்காட்சியை 29 ஆண்டுகளுக்குப் பின்னர் உருவாக்கப்பட்ட தேரில் அமைத்துள்ளனர். இக்காட்சி தேரின் வலது பக்கப் பின் பகுதியில் அமைந்துள்ளது. இன்னும் இதைக் காண்பவர்களுக்கு அம்பாளின் மூர்த்திகரத்தை எண்ணி வியக்கச் செய்கிறது. அன்று 10 மணியளவிற் சண்முகா படமாளிகையில் அரச அதிபர் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் இந்தச் செய்தியை பல்துறை அறிஞர் துரைசாமி சாஸ்திரி அவர்கள் தெரிவித்தார். இயற்கை அழகு மிளிரும் ஒரு அமைதியான சூழலில் அம் பாளின் ஆலயம் அமையப் போகிறது என்பதையும் அவர் அறிவித்தார்.

அதேபோன்று திருப் பணிச்சபையினருக்கு மாத்தி ரமல்ல; தனிப்பட்ட அன்பர் களுக்கும் அம்பாள் தன் அற்புதங்களையும் நிகழ்த்திக் காட்டியுள்ளார். ஒரு கடவுள் நம்பிக்கை இல்லாத ஒரு கொம்யூனிஸ்ட் அன்பர் நெல் வேளாண்மை செய்து பெயர் பெற்றிருந்தார். அவ ருக்கு மருதநகர், கோணா வில், 4ஆம் வாய்க்காற் பகுதி களில் வயல்கள் இருந்தன. கோணாவிலில் 10 ஏக்கர் வயல் இருந்தது. ஒரு கால போக வெள்ளாமை யின் போது மழைகுறைந்து

பயிர்கள் வாட்ட முற்றன. அவரைப் பார்த்து அவரது நண்பர்கள் சிலர் கேலி செய்தனர். அவருக்கும் அப்பயிர் களைப் பார்க்க மிகுந்த கவலையாக இருந்தது. பயன்தர வேண்டிய நேரத்திற் பயன் அற்றுப் போகிறதே என்ற கவலையில் அம்பாளை நினைந்துருகி வேண்டினார். அம்பாளுக்கு ரூபா 10000 என்று நேர்ந்தார். பின் வீடு திரும்பிவிட்டார். சில மணிநேரத்தில் மிகவும் குறுகிய இடத்தில் அவரது வயல் உள்ள இடத்தில் மட்டும நல்ல மழைபெய்தது. எதிர்பார்த்ததைவிடப் பல மடங்கு அதிக விளைச்சல் கிடைத்தது. ஏனம் செய்த அன்பர்கள் அவரது பக்தியை மெச்சினர். அவர்தான் தருவதாக நேர்ந்த ரூபா 10000 தொகையினை கோயிலுக்குத் தருவதாகத் தெரிவித்தார். கோவிற் சபையார் அம்பாளின் புதிய தேருக்கு வடம் வாங்கித் தரும்படி கேட்டனர். அவர் அத்தொகைக்கு மேலான செலவில் வடம் வாங்கிக் கொடுத்தார்.

அம்பாளுடைய உபயங்கள், விழாக்கள் படிப்படியாக முன்னேற்றங்கண்டு கோயி லில் அலங்காரத் திரு விழாக்கள் நடைபெற்றன. ஓராண்டு திருவிழாக்கள் நடைபெற்று நிறைவு பெறும் வேளை சில அன்பர்களுக்கு "அடுத்த ஆண்டு அம்பாள் தேரேறி உலாவந்தா லென்ன" என்ற எண்ணம் தோன்றியது. விரைவில் தேர்த் திருப்பணிச் சபை உரு வானது. அவர்கள் ஆளுக்கு ரூபா 1000 கொடுத்து 1000 கொடையாளரைத் திரட்டும் திட்டத்தை முன் வைத்தனர். பலரும் விரும்பி இத்திட் டத்தில் இணைந்தனர். திருப்பணிச் சபையினர் நினைத்ததற்கு மேலாக மூன்று அழகிய சித்திரத் தேர்கள் குறுகிய காலத்தில் உருவாகின. அம்பாள் பரிவார மூர்த்திகளுடன் தேரிற் பவனிவரும் நிலை வந்தது. இந்தியக் கலைஞர்களால் உருவாக்கப்பட்ட இத்தேர்கள் வன்னிப் பிராந்தியத்திலே அதிஉன்னதமானவை. இப்பணியில் முன்னின்று உழைத்த அன்பர் களும், உதவியவர்களும் "இது நாங்கள் செய்த பணியல்ல; அம்பாள் அருளால் நிறைவேறிய கருமம்" என்று கூறி மகிழ்வர். உண்மையில் இதுவும் ஒரு அம்பாளின் ஓர் அற்புதம்!

தேர்கட்டிய புதிதில் தேர்த்திருவிழா அன்று வழமைபோல்த் தேர் புறப்பட்டு தெற்கு வீதியால் மேற்கு வீதி திரும்பும் இடத்தில் டக்கென்று ஒரு சத்தங்கேட்டது. தேர் நின்று விட்டது. பல வகையான முயற்சிகள் செய்தும் பலன் கிடைக்கவில்லை. யாவரும் கவலை நிறைந்த உள்ளத்தோடு சோர்வுற்றிருக்கையில், எங்கிருந்தோ வந்த தாய் ஒருத்தி "அம்பாளே நான் உன்னை வீதியிற் காணவேண்டும் என்று வேண்டி யழுததை நிறைவேற்றிவிட்டாய்" என்றுகூறி அழுதபடி; அர்ச்சனைத் தட்டொன்றை நீட்டினார். அத்தட்டில் இருந்த சேலையை அம்பாளுக்கு உடுத்தி அர்ச்சனை செய்து முடிய; ஐயர் தேர் புறப்பட மணியடித்தார். அன்பர்கள்-தாய்மார்கள் "அரோகரா அரோகரா" என்று கூவியபடி தேரை இழுத் தனர். தேர் சாதாரணமாக அசைந்துவந்து கொண்டிருந்தது. எல்லோரும் மகிழ்ச்சி மேலீட்டால் அந்த அம்மையாரிடம் வினா வியபோது, நான் தீவுப்பகுதியில் இருந்து வருவதாகவும், புறப்பட்ட நேரத்திலிருந்து அம்பாளைத் தேரில் தரிசிக்க வேண்டும் என்றும், இந்தச் சேலையைக் கொடுத்து அர்ச்சனை செய்யவேண்டும் என்று, எண்ணிய படியே வந்ததாகவும்; தன்நேர்த்தியை அம் பாள் நிறைவேற்றிவிட்டதாகவும்; கண்ணீர் மல்கியபடி தெரிவித்தார். இது அடியார் களுக்கு அம்பாள் எப்படிக் கருணைகாட்டு கிறார் என்பதை உணரவைத்தது.



இரண்டாவது திருக்குடமுழுக்கு நடை பெற்று 15 வருடங்களுக்கு மேலாகிவிட்டது அம்பாளின் அடுத்த திருக்குட முழுக்கை ஒப்பேற்றக்கூடிய காலம் கனியவில்லையே என்ற கவலை அறங்காவலர் சபையை வருத்தியது. 1995ஆம் ஆண்டு தெரிவான அறக்காவலர் சபை; திருக்குட முழுக்கை நடத்தத் தீர்மானித்தது. பாலஸ்தாபனம் செய்யத் தீர்மானித்த நாளில் அதைச் செய்ய முடியவில்லை. யாழ்ப்பாணத்திலிருந்து வரவேண்டிய சிவாச்சார்யர்கள் வரமுடிய வில்லை. ஓடத்திற் கிளாலிப் பாதையூடாக வரவேண்டிய அவர்கள் கடுமையான காற்று வீசியதால் ஓடங்கள் ஓடவில்லை. பிறிதொரு நாள் பாலஸ்தாபனம் சிறப்பாக நடந்தேறியது. குறுகிய காலத்திற் சீமெந்து, இரும்பு, தீந்தைகள் கிடைப்பது பெரிதும் அரிதாக இருந்த காலத்தில், முன்னரே குறித்த நாளில் திருக்குடமுழுக்குச் சிறப்பாக நடை பெற்றது.

அத்தோடு அத்திருமுழுக்கில் அடுத்த அரிய அற்புதம் நடந்தது. அம்பாளுக்குப் பண்டிகையில் இருந்து கும்பதீர்த்தத்தைப் பிரதம சிவாச்சார்யார் ஊற்ற முற்பட்டபோது அவர் வானத்தைப் பார்த்தார். அடியார்களும் பார்த்தனர். ஏழு கருடன்கள் அம்பாளுடைய மூலஸ்தானத்துக்கு நேரே வானில் வட்ட மிட்டுப் பறந்தன. பிள்ளையாருக்குக் கும்ப தீர்த்தம் வார்க்கும்போது மூன்று கருடன்கள் கால்வட்டமிட்டன. அவற்றோடு வேறு சிலவும் சேர்ந்து அம்பாளுக்கு முழுமையான வட்டமிட்டுச் சென்றன. இது அம்பாள் அடியார்களை மெய்சிலிர்க்க வைத்தது. இது அம்பாளுடைய கருணை என்றும், தேவர் களின் ஆசிர்வாதம் என்றும் அன்பர்கள் தம்முட் பேசிக்கொண்டனர். வேறு சிலர் யோகர் சுவாமிகளுடைய ஆன்மா நின்று நிலவுவதை நினைவூட்டுவதாகவும், நிறுவுவ தாகவும் உள்ளது என்றனர்.

இதேபோன்று, இன்னுமொரு சம்பவம் அன்று ஞாயிற்றுக்கிழமை அறங்காவலர் சபைகூட இருக்கிறது. நாங்கள் சிலர் முன்னமே வந்துவிட்டோம். அன்று ஒரு இளம் தம்பதி யினர் குழந்தை ஒன்றுடன் கோயிலுக்கு வந்திருந்தனர். வழமையான வழிபாட்டாளர் கள் அல்ல. பெண் கோவிலைச் சுற்றிப் பலமுறை பயபக்தியோடு அடிஅளந்து வழி பட்டுக் கொண்டிருக்கிறார். அப்போது அந்த அழகான குழந்தை அழுதது. கணவர் குழந்தைக்குப் போத்தலிற் பால் கொடுத்தார். குழந்தை குடித்துவிட்டு மறுபடியும் உறங்கி விட்டது. அப்போது அருகில் நின்ற எம்மிடம் அவர் கூறினார்: "நாங்கள் மட்டக்களப்பைச் சேர்ந்தவர்கள். இருப்பது வட்டக்கச்சியில். நான் தனியார் வணிக நிலையமொன்றில் மல்லாவியில் வேலை செய்கிறேன். எமக்குத் திருமணமாகி ஒரு வருடமாகிறது. எனது மனைவி தாய்மையடைந்துள்ளதைப் பரி சோதித்துப் பார்க்க மல்லாவிக்குச் சென்றோம். அப்போது மல்லாவி வெளிநாட்டு மருத்துவர்கள் பணி புரியும் ஓரளவு வசதியான வைத்தியசாலை. அங்கிருந்த வைத்தியர்கள் வயிற்றிற் குழந்தை இல்லை; கட்டி வளர்கிறது என்று சொல்லி விட்டனர். நாங்கள் மிகுந்த வேதனையடைந்தோம். நான் இந்த வழியாற் போய் வரும்போது இந்தக் கோயி லில் வந்து வழிபடும்வேளை எமக்கு ஒரு பெண் குழந்தை சுகப்பிரசவமாகப் பிறந்தால் அம்பாளின் பெயரை வைப் போம். இந்த நேர்த்தியை நிறைவேற்றுவோம். என்று நேர்த்தி வைத்தேன். என் மனைவிக்கும் இதைச் சொல்லி ஆறுதற்படுத்தி னேன். பின்னர் வெளிநாட்டு வைத்தியர்கள் பரிசோதித்து பெண்குழந்தை என்றனர். சுகமாகவும் பிறந்தது. அபிராமி என்று பெயர்

வைத்துள்ளோம். இன்று அந்நேர்த்தியை நிறைவுசெய்யவும் பூசை வழிபாட்டில் ஈடுபட்டுள்ளோம்." என்று தெரிவித்தார். அம்பாளுடைய பூசைப் பிரசாதத்தைக் குழந்தைக்கும் ஊட்டினர்.

கொடியேறித் திருவிழாக்கள் நடக்கத் தொடங்கியதும் திருவிழா நாட்களில் வீதி உலாவரும்போது அம்பாள் நடுவிலும்; பிள்ளையார் முருகன் ஆகியோர் அருகில் வருவதுபோல் தேரில் வீதி உலாவரும்போது அம்பாள் நடுவில் வரவேண்டும் என்று அன்பர்கள் சிலர் எண்ணினர். இவ்விடயத்தை அறங்காவலர் சபையினர் அம்பாளின் முடிவுக்கே விட்டுவிட்டனர். அம்பாளை இப்போது நடைபெறுவதுபோல், மைந்தர்கள் முன்னே செல்லத் தான் பின்னே வருவதற்கான உள்ளக்கிடக்கையையே வெளிப்படுத்தினார். அதேபோன்று தேரோட்டம் அம்பாள் ஆலய வளர்ச்சியில் ஒரு முக்கிய கட்டம். அதற்குப் பின்பும் ஏன் பொங்கல் நடத்த வேண்டும் என்று கருத்துரைத்தனர் சிலர். தொடக்க நாட்களில் "அம்பாளுக்கு 1000 பானை வைத்துப் பொங்குங்கள்" என்று யோகர் சுவாமிகள் கூறியுள்ளதாலும், விவசாயப் பிரதேசமான இப்பகுதியில் பரந்து வாழும் பொதுமக்கள் ஈடுபாடு காட்டிய முதலாவது நிகழ்வாக அமைந்துள்ளதாலும், அறங்காவல் சபையினர் சிறிது தாமதங் காட்டினர். இறுதியாக அம்பாளின் திருவுள்ளப்படி தீர்மானிக்க அறங்காவலர் சபையினர் எண்ணினர். இதற்குப் "பொங்கல் தொடர வேண்டும்" என்றே அம்பாள் தனது மனவிருப்பைக் காட்டினார். இதனால், பொங்கல் தொடர்ந்து நடைபெறுகிறது.

இதேபோன்று ஆண்டுப் பெருவிழா நடைபெறும் காலம் சப்பறத் திருவிழா அன்று மாலை ஒரு திருமணமாகாத 20 - 25 வயது மதிக்கத்தக்க இளம் பெண் தனக்குக் காவடி எடுக்க உதவும்படி அறங்காவலரிடம் கேட்டுக்கொண்டார். அப்போது அவர் தெரிவித்ததாவது "நான் திருவையாற்றிலிருந்து சுயநினைவு அற்றவளாக கிளிநொச்சி வைத்திய நோயாளர் காவு வண்டியில் வவுனியா வைத்தியசாலைக்கு அனுப்பப் பட்டவள். அப்போது நான் உயிருடன் திரும்பினால் உடலில் செதிள் குத்தி நாவில் வேலூன்றி காவடி எடுப்பது என்று நேர்த்தி வைத்துள்ளேன்" என்றார். அதை அப்படியே செய்ய வேண்டும் என்று கூறியவுடன் அவ்வாறே செய்து மகிழ்ந்தார்.

இதேபோன்று திருவிழாக் காலத்தில் பலர் பல்வேறு வகையான காவடி எடுப்பார். இக்காலத்தில் அங்கே வலம் வருபவரில் பலர் தேர்த்திருவிழாவின்போது அங்கு வலம் வருவார். பெண்கள் சிலர் விரதமிருந்து அடி அளிப்பார். பெண்கள் சிலர் கற்பூரச்சட்டி எடுப்பார். சிலர் பாற்செம்பு எடுப்பார். ஆண்களும் பெண்களுமாகக் குடும்பத்துடன் பொங்குவர். கன்னிப் பெண்களும் தாய்மாரும் எண்ணியபடி திருமணம் நிறைவுற்றால், அம்பாளுக்கு அழகிய சேலையும், பவுண் தாலியும் கொடுப்பர். இதேபோன்று நோய் நொடியுற்றவர்கள், குடும்பம் கஸ்ட நிலையில் உடையவர்கள், கால்நடைகள், பயிர்கள் பாதிக்கப்பட்டவர்கள் எல்லாம் நேர்த்தி வைத்து நிறைவு செய்வர். சிலர் சாதாரணமான நாட்களில் நேர்த்தியை நிறைவேற்றுவர். பலர் அம்பாளுடைய மூர்த்திகரம் நிரம்பியுள்ள நாட்களான திருவிழா நாட்களில் நிறைவு செய்வர். பிறவூர்களில் இருந்தும், பிற மாவட்டங்களில் இருந்தும் வெளிநாடுகளில் இருந்தும் நேர்த்திக்கடன் நிறைவேற்றக் குடும்பம் குடும்பமாக மக்கள் வருவார்கள். இவர்கள் எல்லோரும் மனநிறைவு பெறும் வகையில் அம்பாள் அருட்கருணையைக் காட்டி அரவணைத்துக் கொள்கிறார்.



2012ம் ஆண்டில் குடமுழுக்கின் பதிவுகள்


தீர்த்த வாவியிற் புண்ணியதானம்


அக்கினியில் ஆகுதி ஆதல்


ஆலயத்தில் அடியார்கள்


பிரதான கும்பக் கிரியைகள்

## 2012ம் ஆண்டில் குடமுழுக்கின் பதிவுகள்...



தம்ப பரிவார மூர்த்திகள் பிரதிஷ்டை



ஐம்பொன் மூர்த்திகள் பிரதிஷ்டை



எழுந்தருளி மூர்த்திகள் பிரதிஷ்டை



அஷ்டபந்தனம் தயார்ப்படுத்தும்போது



மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கல்யாணம்



புதிதாக அமைக்கப்பட்ட திருமஞ்சனக் கிணறு



மூலமூர்த்தி பிரதிஷ்டை செய்தல்



பிரதமகுரு அம்பாளின் ஆசி பெறல்



பாதகாப்புப் படைத் தலைமை அதிகாரி நந்திக்கு எண்ணெய்க்காப்புச் சாத்துதல்



மூலமூர்த்திக்கு எண்ணெய்க்காப்புச் சாத்துதல்

எண்ணெய்க்காப்பின் பதிவுகள்...



# அத்தியாயம் – ௭

## அம்பாளின் பூங்காவும், வசதிகள் பிறவும்

கோயில் பூங்காவிலிருந்தே, கோயிற் பூசைக்குப் பூ எடுக்க வேண்டும் என்பது விதி. எப்படியான பூ எடுக்க வேண்டும் என்றெல் லாம், விதிகள் உள்ளன. ஆரம்பத்தில், கோயிலுக்கு வழிபட வருபவர்கள், எல்லாரும் பூ கொண்டு வரவேண்டும் என்ற, ஒரு பணிப்பு இருந்தது. ஆதலால், முதலிருந்தே பூங்கா அமைய வேண்டும் என்ற சிந்தனை இருந்தது. இக்கோயிலை அண்மித்த ஊர்களின், நிலவளமும, நீர்வளமும், பூந்தோட்டம் அமைக்க உகந்தவை. இதனால், வாழ்க்கை நடக்கக்கூடிய வசதியும், வாய்ப்பும் ஏற்படும். தமிழ்நாட்டில் பூ மரங்கள் நாட்டிப் பலர், பிழைக்கின்றனர். நம்மவர்களும் இதுபற்றிச் சிந்திக்க வேண்டும். ஊரிலே பூ மரங்கள் இருந்தால் அம்பாளை அழகுபடுத்தல் மேம்படும்.

கோயிலில் உள்ள வடக்கு வீதிக் கிணற்றுக்கு அண்மையாக, கோயிலின் உள்வீதியின் வடக்குப் பகுதிக்கு வெளிப் புறமாக, ஓர் ஏக்கர் வரையுள்ள காணியில் இப்பூங்கா அமைந்துள்ளது. திருக்குட நீராட்டுப் பெருவிழா நடந்தேறினால், இப்புனித நாள் நினைவாக்கத் தலவிருட்சங்கள் நாட்டி உண்டாக்க வேண்டும் என்பதும் ஒருவிதி. இந்த வகையில் கோயில் பூசைகளுக்கும், விழாக்களுக்கும், தேவையான பூக்களையும், இலைகளையும், பெற்றுக் கொள்ளக்கூடியதாக ஆரம்பத்தில் மரங்கள் நாட்டப்பட்டன. பின்னர் யாகங்களுக்குப் பயன்படுத்தும் அரிய மரங்களும், செவ்விளநீர் மரங்களும் உருவாக்கப்பட்டன. இடம் பெயர்வுக்கு முன்னர், கோயிற் தேவைக்கான சகல மரங்களும், பூங்காவில் வளர்ந்தன. சந்தனமரம், நாகலிங்கப் பூ மரம், என்பனவும் வளர்க்கப்பட்டன. இம்மாவட்டத்தில் உள்ள ஓர் அரிய கோயிற் பூங்காவாகத் திகழ்ந்தது. இதை வளப்படுத்துவதில் அறிவாளி அண்ணரின் பங்கு காத்திரமானது. இப்போது இடப்பெயர்வால் தளர்வடைந்து விட்டது. மேலும் பூங்கா வளர்ச்சிபெறும், முன்னைய பெருமையை எட்டும் என்று அறிவாளி அண்ணர் கூறியுள்ளார். நாம் இதை நம்பு வோம். நல்லது நடக்கும்.

பிற வசதிகள் என்றுநோக்கும்போது, இப்பூங்காவில் உள்ள கிணறும், பழைய அன்னதான மடமும் அடங்கும் இவற்றில், முதல் தோண்டிக் கட்டப்பட்டதுமான கிணறு மிகுந்த ஆளமானது. பாவனைக்கு வந்த தொடக்கத்தில், போதுமான நீர் இருந்தது. இதுவே அம்பாளின் தேவைகளுக்கும் பயன் பட்டது. காலப்போக்கில் நீர்மட்டம் குறைந்தமையினால் பிள்ளைக்கிணறு தோண்டப் பெற்று, தற்போது போதிய நீருடன் இப்போது பாவனையில் உள்ளது.

முதற் கிணறு, பாவனைக்குத் தொடங்கிய காலத்தில், தெற்குவீதியில் உள்ள கிணறு, தோண்டிக் கட்டப்படாது. இது பாராளுமன்ற உறுப்பினரின் நிதி ஒதுக்கீட்டில் தோண்டிக் கட்டப்பட்டது. இதற்கு, இரண்டு கிணறுக்கான நிதி ஒதுக்கப்பட்டிருந்தது. இது, அயலில் உள்ள குடும்பங்கள் வீட்டுப் பாவனைக்கும்.

கடைகளின் தேவைக்கும் பயன்படுகிறது. இவ்வளவு உயரமான இடத்தில், இக்கிணறு களில நீரை பெறத்தக்கதாக உள்ளது, அம்பாளினுடைய கருணையே.

முதல் கிணறு கட்டப்பட்டவுடன், கட்டப்பட்டது பழைய அன்னதான மடம், ஒரு பொது மண்டபமாகக் கருதப்பட்டே, உருவமைக்கப்பெற்றது. இது கோயிலில் திருப்பணி நடைபெறும் காலங்களில் கட்டடப் பொருட்களைப் பாதுகாக்கவும், பணி யாளர்கள் தங்குவதற்கும், பயன்படும். அன்று முதல், இன்று வரை அன்னதான மடமாகவும் பயன்பெறுகிறது. இது பிராமணச் சிறுவர் களின், தொழிற் பயிற்சி வகுப்புகளுக்கும் பயன்படுகிறது. சமாதான காலத்திலே, சர்வோதய ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களுக் கான, பயிற்சி வகுப்புக்களும், இங்கு இடம் பெற்றுள்ளன.

கழிப்பறைத் தேவை ஒன்று, பல வருடங்களாக உணர விட்டு வந்தது, ஆனால் அண்மையில், நிர்மாணிக்கப்பட்டது. இது, ஆண்டுப் பெருவிழா நாட்களில் பெரிதும் பயன்படும், நாளாந்தம், கோவிற் சூழலில் உள்ளவர்களால் பயன்படுத்தப்படுகிறது. இனிவருங் காலங்களில் பெரிதும் பயன்படக் கூடியது.

புதிய அன்னதான மடம், திருமண மண்டபம், அன்பர்களின் பொதுத் தேவை களுக்கான மண்டபம், ஒன்று தேவைப் பட்டது. பழைய அன்னதான மண்டபம், பின்னரான காலத் தேவைக்குப் போதுமான தாக அமையவில்லை. எனவே, அண்மையில் - கோயில் முன்றலில், வலப் பக்கமாக யோகர்சுவாமி நினைவு மண்டபம் ஒன்று கட்டடப்பட்டு பூரணப்படுத்தாத நிலையில், பாவனைக்கு வந்தது. பின்னர் இன்றும் புனரமைக்கப்படாத நிலையில் உள்ளது.

தண்ணீர் பந்தற்கூடம், இதுவும் அண்மையிற் கட்டடப்பட்டு கோயில் திருவிழா நாட்களில் நல்லமுறையில் பயன்பட்டு வருகிறது.

### கோளறு திருப்பதிகம்

பண் – பியந்தைக்காந்தாரம்

தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெல் துன்னி<br>
  வளர் செம்பொன் எங்கும் நிகழ<br>
நான்முகன் ஆதியாய பிரமா புரத்து<br>
  மறைஞான ஞான முனிவன்<br>
தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து<br>
  நலியாத வண்ணம் உரை செய்<br>
ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்<br>
அரசாள்வர் ஆணை நமதே.

# அத்தியாயம் – ஏ

## அம்பாளின் திருக்குட நன்னீராட்டு விழாக்களும், ஏனைய திருப்பணிகளும்

**திருக்குடமுழுக்கு விழாக்கள்**

முதலாவது திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றபோது A9 வீதிக்கு கிழக்கே கோயில் வரைக்கும் அடர்ந்த பெருங்காடு காணப்படுகின்றது. மக்கள் நடமாட்டம் கோயில் சூழலில் மிகமிகக் குறைவு. நீர்ப்பாசனப் பணிப்பாளர்கள், அரச அதிகாரிகள் என்போரெல்லாம் ஊர்திகளில் மட்டும் வந்துசெல்லும் முறை காணப்பட்ட சூழலில் இக்குடமுழுக்கு நடைபெற்றது. இதன்போது தலைவராக திரு. ம. ஸ்ரீகாந்த அவர்களும், செயலாளராக திரு. த. நல்லதம்பி அவர்களும், பொருளாளராக திரு. வி. கே. முருகேசு அவர்களும் தொண்டாற்றியிருந்த னர். முதலாவது நன்னீராட்டு நடந்து முடிந்த ஒரு மாத காலத்தில் தலைவர் திரு.ம.ஸ்ரீகாந்த கொழும்புக்கு இடமாற்றம் பெற்றுச் சென்றிருந்தார். பின்னர் திரு. வி.கே. முருகேசு தலைவரானார் திரு. வே. பரமானந்தன் பொருளாளரானார்.

இந்தளவில் திருவையாறு, அம்பாள் நகர் இதர குடியேற்றங்கள் ஆரம்பமாகின. கோயிலுக்கும் மக்கள் செல்லத் தொடங்கி னார். நடமாற்றம் அதிகரித்தது. மக்களுடைய பொருளாதார நிலையும் சிறிது மேம்பாட டைந்தது.

திருக்குட நன்னீராட்டு விழா நடை பெறும் காலங்களில் பெரும்பாலான திருப் பணிகள் நிகழ்ந்திருந்தன. இதில் முதலாவது திருக்குட நன்னீராட்டு விழா இக்கோவிற் சூழலை இரணைமடு கிராமத்தின் இயற்கை புவியியல் அமைப்பை மாற்றிய மாபெரும் பணி என்ற காரணத்தினால் முதலாவது அத்தியாயமான (அ) "இரணைமடுப் பதி"யில் விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஏனைய குடமுழுக்குக்கள் பற்றி விரிவாக்க வேண்டிய தேவை உள்ளது.

முதலாவது திருக்குடமுழுக்கு விழா மனித நடமாட்டமற்ற முற்றிலும் காட்டுச் சூழலில் இடம் பெற்றது. ஆனால் இரண் டாவது திருக்குடமுழுக்கு குடியேற்றங்கள் உருவாக்கப்பட்டு, மக்கள் நடமாட்டம் கோயிற் சூழலில் அதிகரித்திருந்த காலத்தில் இடம்பெற்றிருந்தது. முன்னரை விட இப் போது மக்கள் கோயிலோடு ஈடுபாடுடையவர் களாகவும், திருப்பணி களுக்குச் சிறியளவிலா னாலும் உதவக்கூடியவர் களாகவும் இருந்தனர். இக் காலத்தில் உள்ளூர் மக்களின் ஈடுபாடான நிதியுதவியி னாலும் வெளிநாட்டு அன்பர்கள் தாராள நன் கொடைகளினாலும், மேற் கொள்ளப்பட்ட திருப்பணி யினாலும் கோயில் அமைப்பு முழுமையானது. இரண்டாவது குடமுழுக்கு நன்னீராட்டு விழாவும் தலை வர் தலைமையிலான திருப் பணிச்சபையால் செயற் படுத்தப்பட்டது. இவர்களு டைய முயற்சியால் மகா மண்டபம், பரிவாரக் கோயி ல்களான பிள்ளையார்,

வள்ளி தெய்வானையுடன் உறை முருகன், வைரவர், நவக்கிரகக் கோயில்கள், யாகசாலை, வசந்த மண்டபம், தம்ப மண்டபம் என்பன சிறப்புற அமைக்கப்பட்டு கோயிலமைப்பு முழுமை பெற்றது.

இக்காலத்தில் திரு. வி. கே. முருகேசு தலைவராகவும், திரு. நா. நாகலிங்கம் செயலாளராகவும், திரு. வே. இராசேந்திரம் பொருளாளராகவும் தொண்டாற்றி 22.03.1981 இல் அம்பிகையின் திருவருளுடன் சிவஸ்ரீ ஐ.பரமேஸ்வரக் குருக்கள் தலைமையிலான குழுவினர்களாக மிகவும் சிறப்பாக நிகழ்த்தி, நிறைவடையச் செய்யப்பட்டது.

திரு. வி.கே. முருகேசு இறைபதம் அடைந்ததைத் தொடர்ந்து முன்னர் உபதலைவராக இருந்த திரு. வே. இராசேந்திரம் தலைவரானார். இவர் இரணைமடுக்குள மேற்பார்வையாளராகக் கடமையாற்றியதாலும், கோவிலுக்கு அருகில் வாழ்ந்து வந்ததாலும், கோயிற் பணிகளைச் சிறப்பாக நடாத்த முடிந்தது. தொடர்ந்தும் உடல் நலக் குறைவு ஏற்படவே அப் பொறுப்பை அடுத்துவரும் சபையிடமே ஒப்படைத்தார்.

அடுத்த திருக்குடமுழுக்கு நடாத்த வேண்டிய தேவை ஏற்படவே நாட்டில் நிலவிய அரசியல் சமூக பொருளாதார நிலை சாதகமாக இருக்கவில்லை. கருவூலத்திலும், பரிவாரக் கோயில்களிலும், விமானத்தில் உடைப்பெடுத்து கோயிற் சந்நிதானத்தை கெடுத்துவிடக்கூடிய நிலை காணப்பட்டது. மறுபுறத்தே நாட்டில் கட்டிட நிர்மாணப் பணிகளுக்கு அவசிய தேவையான சீமெந்து, கம்பி, நிந்தைகள் ஏதும் பெற்றுக்கொள்ள முடியாத நிலை இருந்தது. அத்துடன் மக்கள் பங்களிப்பு செவ்வையாக அமையக்கூடிய மனநிலை நிலவிய காலமல்ல. எனினும் கட்டாய தேவையாக திருப்பணியை மேற்கொள்ள சபை தீர்மானித்தது. குறித்த நாளில் பாலஸ்தானம் கூடச் செய்ய முடியவில்லை. கடுமையான காற்றுவீசியதால் சிவாச்சாரியார்கள் கடல்வழியே யாழ்ப்பாணத்திலிருந்து வரமுடியவில்லை. பிறிதொரு நாளில் பாலஸ்தானம் செய்யப்பட்டு திருப்பணிகள் ஆரம்பமாகின. தொடக்கத்தில் மந்த கதியிலே திருப்பணிகள் இடம்பெற்றன. இருந்தாலும், அடுத்த தைமாதம் அம்பாளுடைய அரும்பெரும் பணிகளுக்கு இடையூறு ஏற்படாதவண்ணம் நடைபெறவேண்டும் என்ற நோக்குடனேயே சபையினர் செயற்பட்டனர். 1995ஆம் ஆண்டு நவம்பர் மாதமளவில் தைமாதத்தில் கும்பாபிஷேகம் நடத்தலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது.

இந்நிலையில் திருக்குட நன்னீராட்டு விழா என்ற பெயரிலேயே பிராமணர்களை கடுமையாகப் பயன்படுத்தி வீண் பணச் செலவை ஏற்படுத்த வேண்டாம் என கிளிநொச்சி தமிழ்ச் சங்கத் தலைவர் நெருக்குதல் கொடுத்தார். சபையினர் ஏற்பாடு செய்த தலைமைக் குருக்களினை முன்னர் அறங்காவலர் சபைத் தலைவராக இருந்த திரு.வே. இராசேந்திரம் விரும்பவில்லை. எனினும் நாட்டு சூழ்நிலையும், பொருளாதார நிலையும் இவ் எண்ணங்களை மீள்பரிசீலிக்க இடம் கொடுக்கவில்லை. "எல்லாம் அம்பாளே" என்ற நினைவே இருந்தது. இம் மூன்றாம் குடமுழுக்கு நன்னீராட்டு விழா காலத்தில் திரு. நா. சோதிநாதன் தலைவராகவும், திரு. எஸ். என். செல்வராசா செயலாளராகவும், திரு. த. இராமலிங்கம் பொருளாளராகவும் தொண்டாற்றினர். அன்னையின் திருவருளுடன் திட்டமிட்டபடி 26.01.1996 அன்று சிவஸ்ரீ ராம் கெங்காதரக் குருக்கள் தலைமையில் பணிபுரிந்த அணியினரால் நிறைவாக திருக்குட நன்னீராட்டுவிழா நிறைவேற்றப்பட்டது.

இந்தக் கிரியைகளின் உச்சக் கட்டமாக குருக்கள் மூலஸ்தானங்களில் மேல் ஏறி நன்னீராட்டு விழா நீரை ஊற்றத் தொடங்கிய போது பிள்ளையார் கோயிலின் மீது மேலே மூன்று இராஜ ஜாளிகள் அரைவட்டமாகவும், அம்பாளின் உச்சியில் ஒன்பது இராஜ ஜாலிகள் முழுவட்டமாகவும் பறந்தன. இவை தெய்வங்களின் அங்கீகாரங்களையும், அம்பாளின் ஆசீர்வாதத்தையும் வெளிப்படுத்தின. இந்த அற்புதமான நிகழ்வை பார்த்த சபையினர் நிறைவெய்தினர். அம்பாள் அடியவர்கள் அக மகிழ்வும், மனநிறைவும் அடைந்தனர்.

### நான்காவது திருக்குட நன்னீராட்டு விழா - 2012

இக்கோயில் உருவான காலம் முதல் இக்கோயிலோடு தொடர்புடைய சைவச் சான்றோர்கள் இக்கோயிலில் வன்னிபெரும் நிலப்பரப்பில் உள்ள யாவரும் வந்து வழிபட்டுப் பயன்பெறக்கூடிய கோயிலாக அமைய வேண்டும். என்ற எண்ணத்தோடு பணியாற்றி வந்தனர். யோகர்சுவாமிகளுடைய சிந்தனைகளும், வழிகாட்டலும் தமக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கையும் இவர்களிடம் இருந்தது. இதற்காக நேரகாலத்தோடு பூசைகள், விழாக்கள், பங்குனி மாதங்களில் அம்பாளைக் கிராமங்கள் தோறும் ஊர் உலாக்கொண்டு செல்லுதல், சித்திரைப் பூரணையில் பொங்கல், அம்பாளின் கோயிலுக்கு தினசரி பேருந்து சேவை, ஆண்டுப் பெருவிழா நாட்களிலும், விசேட விழா நாட்களிலும், அறச்சோறு (அன்ன தானம்) வழங்குதல், குறுகிய காலத்தில் அம்பாளுக்கும் பரிவாரமூர்த்திகளுக்கும் மூன்று அழகிய சித்திரத்தேர்கள் இவை யாவற்றையும் மக்கள் தொடர்பு கோவிலோடு அதிகரிக்க வேண்டும் என்ற எண்ணத்துடனேயே செய்யப்பட்டன. இருந்தாலும் சில குறைபாடுகள் இருந்தன. திருமஞ்சனக் கிணறு தோண்டிக் கட்டப்படாமை, இரட்டைப் பஞ்சாங்க மூலஸ்தான விமானம் கட்டாமை, வழிபாட்டை ஊக்குவிக்கக்கூடிய விக்கிரகங்கள், சிற்பங்கள், ஓவியங்கள் அமைக்கப்படாமை, நடேசர் கோயில் உரிய இடத்தில் அமைக்கப்படாமை என்பவற்றைக் குறிப்பிடலாம். சென்ற திருக்குடமுழுக்குக் காலத்தில் இருந்த சமூக பொருளாதார நிலைமை காரணமாக, செய்து முடிக்கப்படாத திருப்பணிகள், இவை யாவற்றையும் உணர்ந்து ஏற்றுச் செயற்பட அறங்காவலர் எண்ணினர். ஆனால் நிலவிய சூழ்நிலை பொருத்தமாக அமையவில்லை.

இடப்பெயர்வுகளுக்குப் பின் மக்கள் மீளகுடியமர 2009ஆம் ஆண்டு முற் பகுதியில் அனுமதிக்கப்பட்டது. எனினும் திருவையாறு, அம்பாள் நகர்ப்பகுதி தொடக்கத்தில் குடியமர அனுமதிக்கப்படவில்லை. பின்னர், அனுமதி கிடைத்த போதும், முன்னர் இருந்தது போல் அனைவரும் குடியிருக்க வரவில்லை. வந்தவர்கள் பழைய துன்ப, துயரங்களை, மறந்து இயல்பு நிலைக்கு வரவில்லை. சொந்தத் தொழில் செய்து வாழ்க்கையை மேம்படுத்தக் கூடியதாக தொழிலும், ஏனைய வசதிகளும், அமையவில்லை. ஆதலால், முன்னர் இருந்த செல்வச் செழிப்பு மக்களிடம் காணப்படவில்லை. இருந்தாலும் இராணுவத் தளபதியின் அழைப்புக்கேற்ப, அறங்காவலர் சபை கோயிலைக் கையேற்றபோதும், வழக்கமான மக்கள் சஞ்சாரம் நிகழவில்லை. கோயிலில் பூசை செய்யஐயர் ஒருவரைத் தேடமுடியாத நிலை. இருந்தாலும் மூத்த சிவாச்சாரியார்களின் அறிவுறுத்தல்களின்படியும், இந்து பண்பாட்டலுவல்கள் திணைக்

மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

களப் பணியாளரின் ஆலோசனைப்படியும்,
வன்னியிலுள்ள மூத்த சிவாச்சாரியார்களின்
அங்கிகாரத்திற்கமையவும், அறங்காவலர்
சபை பாலஸ்தாபனஞ் செய்து திருக்குட
நன்னீராட்டு விழா எடுப்பதெனத் தீர்மானித்
தது.

இத்தீர்மானத்தை அம்பாள் அடியார்
களுக்கும், உபயகாரர்களுக்கும், பொது
மக்களுக்கும் அறியத்தரவென பத்திரிகை
களில் விளம்பரம் செய்து, பொதுக்
கூட்டங்களும் கூட்டப்பட்டன. கோயிலில்
அழிவு சேதாரம் பாரியது ஏதும் இல்லை.
இருந்தாலும், அங்கீகரிக்கப்பட்டவர்களிடம்
இருந்து, சேதவிபரங்களைப்பெற நீண்ட
காலம் எடுத்தது. இத்தருணத்தில், கட்டடத்
திணைக்கள மூத்த அதிகாரி இப்பணியை
செவ்வனே நிறைவேற்ற முன்வந்தார். அவர்,
கோயில் நிர்மாணப் பணிகளிலும், பரா
மரிப்புப் பணிகளிலும், ஈடுபாடுடைய மூத்த
தொழில் வல்லுநரின் உதவியைப் பெற்று
மதிப்பீட்டைச் செய்து தந்தார். அறங்காவலர்
சபையும் உதவிகள் குவியும்
என நம்பினார்கள். "ஆனைப்
பசிக்கு அரிசிப் பொரி"
என்பது போல பாரிய உதவி
கள் ஏதும் கிடைக்கவில்லை.
வழமையாக அம்பாள் பணி
யென்றால் வாரிவழங்கும்
வெளிநாட்டவர்களிடமி
ருந்து எதிர்பார்த்த உதவிகள்
கிடைக்கவில்லை. அப்படி
யாக உதவும் மனம் கொண்
டோர் கூட, தமது குடும்ப
உறுப்பினர்கள், உறவினர்
கள் என்போரைக் கவனிக்க
வேண்டியவர்களாக இருந்த
னர். கோயில் கட்டி 50
வருடங்கள் நிறைவுள்ள
நிலையிலும், அத்திவார
மிட்டவர்களின் பணியைப்
பாராட்டி மூத்த தொழில்
வல்லுநர்களும், சிற்பாசாரி
யர்களும் அத்திவாரம் பல





மாகவுள்ளது. திருத்தல், நிர்மாணப் பணிகளை
வியாழவரியில் இருந்து மேற்கொள்ளலாம்
என்று தெரிவித்தனர். இவ்வாறான கருத்து
களுக்கமைவாக அறங்காவலர் சபையும்
வியாழவரியிலிருந்து திருப்பணிகள் நடை
பெறும் என அறிவித்திருந்தது.

மூலஸ்தான மேல் விமானம், கோயில்
கள் மண்டபங்கள் இடிக்கப்பட்டு, திருப்
பணிகள் உரிய நல்ல நாளிலே தொடங்கின.
சிறிது தாமதமாக இருந்தாலும் நிறைவு எய்திய
திருப்பணிகள்யாவும் உறுதியுடையன
வாகவும், ஆகம முறைப் படியும் நடந்துள்ளன.
கோயில் முழுஅமைப் பையும் பார்க்கும்போது
ஒரு பாரிய மாற்றம் தென்படுகிறது. இந்த
வகையில் பல தசாப்தங்களாக மனதில் இருந்த
மூலஸ்தானக் கோயிலில் உள்ளவற்றை
முதலில் பார்வையிடுவோம். முன்னால்
மூலஸ்தானத்தின் மேல் தளமாக இருந்த
விமானம் இரட்டை பஞ்சாங்க வடிவத்தைப்
பெற்றுள்ளது. மூலஸ்தான இடைத்தள புறச்
சுவர் பகுதியில், மூன்று பக்கமும் அஷ்டலஷ்மி
விக்கிரகங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவை
இப்போது கோயில் வழிபாடு தெய்வவழிபாட்
டோடு ஏற்புடைய தெய்வ வழிபாட்டையும்
தந்து ஆலய வழிபாட்டை நிறைவுடை
யதாகவும் நம்பிக்கையுடையதாகவும் ஆக்கு
கின்றது.

இப்போது இரணைமடுக்குள நீரைப்
பயன் படுத்தி பயிர்ச்செய்கையில் ஈடுபடும்
ஒருவர், வழமையான வழிபாடு தெய்வமான
கனகாம்பிகை அம்பாளையும் வழிபட்டு,
வழிபாடு நிறைவடையத்தக்க தானியலக்ஷ்மி
யையும் மனதில் நிறுத்தி வழிபட, மனநிறை
வும், பயன் நிறைவும் பெறுவர். இது ஓர் முழு
மையான வழிபாட்டுக் கோலத்திற்கு இட்டுச்
செல்லும். எங்கள் குடும்பங்களை வாட்டி
வதைக்கும் ஒரு தொல்லை, மகப் பேற்றுக்
குறைபாடு, இக்குறைபாடுடையோர் வழிபாடு
கடவுளாக கனகாம்பிகை அம்பாளை வழிபட
லாம். அத்துடன் ஏற்புடைய கடவுளாக
சந்தான லஷ்மியை வழிபடவேண்டும்.
இக்குறைபாடுடையோர், நேர்த்தி வைத்து,

நிறைவு செய்யும்போது இந்த ஒழுங்கைக்
கடைப்பிடித்து முழுமையான பலனை,
விரைவாகப் பெறலாம்.

தமிழர்கள் "திரைகடல் ஓடியும்
திரவியந் தேடு" என்ற கோட்பாட்டிற்கு
அமைவாக வாழ்பவர்கள். இதன் காரணமாகத்
தான் 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில்
தமிழ்நாட்டில் இருந்து தமிழர்கள் எமது
மலையகத்திற்கு வந்தனர். யாழ்ப்பாணத்
தமிழர்கள் சிங்கப்பூர், மலேசியா போன்ற
நாடுகளுக்குச் சென்றனர். அதேபோல் 20ஆம்
நூற்றாண்டின் பிற்பகுதியில் யாழ்ப்பாண
இளைஞர்கள், மேற்கு ஐரோப்பிய நாடு
களுக்கும், கனடா, அமெரிக்கா, அவுஸ்
ரேலியா போன்ற நாடுகளுக்கும் சென்றனர்.
திரவியம் என்பது பொருள். இது விவசாயி
களுக்கு நெல்லாக உள்ளது. மீனவர்களுக்கு
மீனாக உள்ளது. உரிய காலத்தில் நெல்லை
யும், மீனையும் சந்தைப்படுத்தினால் நிதிவரும்
நிதியினுடைய பாதுகாப்பான அமைப்பு
தங்கம், தங்கத்தை சிறிய வடிவத்தில் வைத்து
பாதுகாக்கலாம். தேவையான போது காசாக
மாற்றிக் கொள்ளலாம். தங்க நாணயத்தை
தேடி வழிபடத்தக்க வடிவமே கஜலஷ்மி
வடிவம். இது, இக்கோயிலில் மகாமண்ட
பத்தின் வாயில் மேற்குப் புறத்திலும்,
கருவறையின் வெளிப்புறத்தில் தெற்குப்
பகுதியில் இரண்டாவது சிலையாகவும்
உள்ளன. இரண்டு யானைகள், நான்கு கைகள்
உடைய அம்மன் வடிவம் இவற்றில் மகா
மண்டப வாசலில் அமைக்கப்பட்டுள்ள சிலை
கூடிய பொருத்தமுடையதாக அமைக்கப்
பட்டுள்ளது. இது பல அமைப்புகளில்
காணப்படும் சுதை வடிவங்களாகவும் பல
மரங்களில் செதுக்கப்பட்டுள்ள சிலைகளா
கவும், ஓவியங்களாகவும் அமையும், பலரா
லும் வழிபடப்படுவது. எந்தக் காலத்திலும்
வழிபாட்டில் உள்ளது. கோயிலில் இதை
இரண்டு வடிவமாக அமைத்துள்ளனர்.

குழந்தை நித்திரையில் பயந்து அழுதால்
தாய்மார் வழிபடுவது தைரிய லக்ஷிமியை
இவருக்கு வீரலஷ்மி என்றும் பெயர். குழந்தை
சிறிது வளர்ந்த பின், மிருகங்களுக்கும்,
பிசாசுகளுக்கும் பயப் படும்போது வழிபடு
வதும் இவரையே கிவுசை பின்னர் இவ்வழி
பாடு துணிவு கரமானதும்.

"தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன ஆள்ப வர்க்கு" என்பது
நிலத்தைப் பயன்படுத்தி வெள்ளாமை செய்தா
லும், தோட்டம் செய்தாலும், வேறு தொழில்
செய்தாலும் அதில் வெற்றி பெறத்துணிவு
வேண்டும். அதற்குரிய வழிபாடு வீரலஷ்மி
வழிபாடு.

இதேபோன்று முன்னர், யாக மண்டப
நுழைவாயிலின் மேல், பார்வதி பரமேஸ்வரர்
திருமணக்காட்சி, ஓவியமாக இருந்தது.
இப்போது மூலஸ்தான வியாழவரியின் மேல்
தெற்குப் பக்கத்தில் கருவறையைத் தொடர்ந்து
அர்த்த மண்டபம் வரை அக்காட்சி சிலை
வடிவமைக்கப்பட்டுள்ளது. திருமண வயதை
எட்டியோரும், புதிதாக திருமணம் செய்வோ
ரும் இக்கண்கொள்ளாக் கட்சியில் மனம்பதிப்
பர். அவர்களின் மனக்
காட்சி இப்போது புதிய சிந்த
னைகளையும் வழிபாட்டு
முறைகளைப் பற்றியும் கற்
பிக்கும். மேலும் மூலஸ்
தானத்தின் வடக்கேயுள்ள
கோமுகி தரமும், தகை
மையும் உயர்த்தப்பட்டு
சற்று உயர்ந்த இடத்தில்
அமைக்கப்பட்டுள்ளது.
அம்பாளுக்கு நீராட்டும்
போது அபிஷேகம் செய்யும்
போதும், திரளும் இளநீர்,
பால், தயிர் என்பனவும்
வாசனைப் பொருட்களும்
கோமுக வாயிலாக தாமரை
வடிவில் உள்ள நீர் ஏந்தியில்
சேர்க்கப்பட்டு புனிதம்
கெடாமல் எஞ்சிய தீர்த்தம்
குழாய் வழியே பூங்காவை
அடையும். இது மூலமூர்த்தி
யின் திருவட்சக்தியை
அதிகரிக்கும்.

மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

திருமஞ்சக்கிணறு இல்லாமல், முதலில் வெளிவீதியில் வடக்குப் பகுதியில் தோண்டிக் கட்டப்பட்டிருந்த கிணற்றில் இருந்தே. இவ்வளவு காலமும் அம்பாளுடைய தேவை களுக்கு நீர் உபயோகிக்கப்பட்டு வந்தது. இந்த திருக்குட நன்னீராட்டு விழாவில் பெரிய தொரு பதிவாக இதைச் செய்திருக்கின்றார்கள் உரிய இடத்தில் திருமஞ்சனக் கிணறு நிலையம் எடுத்துத் தோண்டிக் கட்டப்பட் டுள்ளது. இது சம்பந்தமாக அம்பாளின் அடி யார்கள் சுட்டிக்காட்டி வந்த குறைபாடு நீக்கப் பட்டுள்ளது. பாரம்பரிய முறைப்படியான நீர்ப்பாவனைக்கு வசதி செய்யப்பட்டுள்ளது.

முன்னர் நடராஜர் சிவகாமசுந்தரியி னுடன் உறை மாணிக்கவாசகர் கோயில் உரிய இடத்தில் அமைக்கப்பட்டிருக்கவில்லை. இப்போது அக்கோயில் உரிய இடத்தில் அமைக்கப்பட்டு, பூசை வழிபாட்டு முறைகள் சீரமைக்கப்பட்டுள்ளன.

முன்னர் இக்கோயிலில் துவார பாலகர்கள்தான் இருந்தார்கள். பின்னர் துவார பாலகிகள் ஓவியம் வரையப்பட்டிருந்தது. இப் போது மகாமண்டப வாச லில் மதுரை மீனாட்சியம் மன் கோயில் துவார பால கிகளை நினைவூட்டுவன போன்ற துவாரபாலகிகள் அமைக்கப்பட்டுள்ளனர். இவை பழமையான பாரம் பரியத்தையும் கலையம் சங்களையும் வெளிப்படுத்து வனவாக உள்ளன.

இதேபோன்று மூலஸ்தானத் தின் சகல பக்கங்களிலும் உள்ள சிற்பங்கள் அம்பாளு டைய வாழ்வில் தொடர்பு டைய பல நிகழ்வுகளை வெளிப்படுத்துவனவாக உள்ளன. இதே போன்று பரிவாரக் கோயில்களில் உள்ள விக்கிரகங்களும் தத்துவ உணர்வையும் கலையுணர்வையும் ஊட்டுவனவாக உள்ளன. சுதை விக்கிரகங்களின் அம்சங்களில் கூறப் பட்ட குறைகள் இப்போது நீக்கப்பட்டுள்ளன.

மகா மண்டப, யாகமண்டப மேற்பகுதி முன்னர் தண்டவாளம் மரம் முதலியன வற்றைப் பயன்படுத்தி செய்யப்பட்டிருந்தன. இப்பணி முன்னரே செய்யப்பட்டிருக்க வேண்டும். அக்காலங்களில் ஏனோ நடை பெறவில்லை. இப்போது முறைப்படியான அழகிய வில் மண்டபங்கள் ஆக்கப்பட் டுள்ளன.

வழிபாட்டாளர்களுக்கும் பொது மக்களுக்கும் ஆண்டு முழுவதும் பயன்பட்டு, இப்போது ஒரு சிறு பணிகூட இடம்பெறாது உள்ள மண்டபம், புதிதாக அமைக்கப்பட்ட அன்னதான மண்டபம். இது "யோகர் சுவாமிகள் நினைவு பல்சேவை மண்டப மாகப்பெரிதும் பயன்பட்டு வந்தது. ஆண்டுப் பெருவிழாவின்போது பெரிதும் வேண்டப் படுவது, அதற்கு முன்னர் அதைப் பயன் படுத்தக்கூடிய பணியை அம்பாள் மேற்கொள் வார் என நம்புகின்றோம்.

இந்தத் திருப்பணிகளோடே செய்து நிறைவேற்றியிருக்க வேண்டிய இரண்டு மண்டபங்கள் உள்ளன. அவையாவன வசந்த மண்டபம், கோயில் அலுவலகம் இவை சாதாரண நாட்களிலும் கட்டப்படலாம். இப்போதைய முன்னுரிமைப் பட்டியலில் இவை இடம்பெறவில்லை. உரியகாலம் அமையும்போது அவையும் நிறைவுறலாம்.

இப்போது நடந்துள்ள திருப்பணி பாரிய திருப்பணி. இப்பணியைத் தலைவரான திரு.S.N. செல்வராசா, செயலாளரான திரு.ந.சிவகுமார், பொருளாளரான திரு.மு. இராமச்சந்திரன் துணைத்தலைவர்கள்,



துணைச்செயலாளர், அறங்காவலர் சபை உறுப்பினர்கள், தனியாகவும், குழுவாகவும், அணியாகவும், கூட்டாகவும் செயற்பட்டு, அரும்பெரும் பணியொன்றை நிறைவு செய்துள்ளனர். இத்திருப்பணியில் பங்கு கொண்ட யாவரும் அம்பாளினுடைய அருள் நிறைவாகக் கிடைக்கப் பிரார்த்திக்கின்றோம்.

திருப்பணிகள் அநேகமாக திருக்குட முழுக் கால திருப்பணிகளுடனேயே நடை பெற்றன. முதலாவதாக நடந்த தனிப்பட்ட குடும்பத் திருப்பணியெனில் மணிக்கூட்டுக் கோபுரத் திருப்பணியைக் கூறலாம். இது நாலாம் வாய்க்காலைச் சேர்ந்த பிரபலமான நெல் உற்பத்தியாளரும் அம்பாள் பணியாள ரான திருமதி சிவபாக்கியம் காசிலிங்கம் அவர்களின் பணியாகும். இவர் இப்பணியை 1961ஆம் ஆண்டு தொடங்கி 1966ஆம் ஆண்டு நிறைவு செய்தார்.

கோயிலில் பல வாகனங்கள் உள்ளன. இவற்றை தனிப்பட்ட குடும்பங்கள், காலத் திற்குக் காலம் செய்து உபகரித்தனர். இவை யாவும், இவர்களால் தேவை ஏற்படுத்தும் போது திருத்தி வர்ணம் தீட்டிச் செப்பனி டப்பட்டுள்ளன. இத்தகைய உபயங்களைச் செய்தவர்களின் குடும்பங்களுக்கு அம்பாள் நிறைவாகக் கருணை காட்ட வேண்டுகிறோம்.

முன்னர் தம்ப மண்டபத்தில் நின்று பார்வையிடும்போது யாக மண்டப மேல் பகுதியில் பார்வதி பரமேஸ்வரன் திருமணக் கோல ஓவியம் இருந்தது. இப்போது அவ்விடத்தில் அம்பாளின் மூலமூர்த்தி வடிவை ஒத்த எழிற் கோலம் மனங்கொள்ளக் கூடிய அமைப்பில் உருவாக்கப்பட்டுள்ளது. திருக்குடமுழுக்குக் காலத்தில் எண்ணெய்க் காப்பின்போது தொட்டு அருகில் நின்று கும்பிட்டால் பின்னர் 12 வருடங்களுக்கு இப்படியான வாய்ப்புக் கிடையாது. அந்த உள்ளங்கவரும் கோல அழகுக் காட்சியை என்றும் கண்டு மனநிறைவு பெற வாய்ப்புக் கிடைத்துள்ளது.

**சித்திரத்தேர்த் திருப்பணி**

அம்பாளுக்கு தொடக்கத்தில், தொடங்கி வைக்கப்பட்டது அம்பாளுடைய சித்திரைப் பொங்கல் அம்பாள் கோயிலும் வளரவளர, அயற்கிராமங்களும் வளர்ச்சி பெற்றன. இப்படியாகப் பெற்ற வளர்ச்சியில் அலங்காரத் திருவிழா ஏற்பாடும் ஒன்று. அப்படியான அலங்காரத் திருவிழாக்கள் 1988இல் நடைபெற்றுக் கொண்டிருந்த வேளை "அம்பாளை, ஏன் சித்திரத்தேர் ஒன்றில் பவனி வரச் செய்யக்கூடாது என்ற எண்ணம்" ஓர் அடியவர் மனதில் உருவானது. விரைவாகப் பலர் மனதில் இடம்பெற்றது. அதன் பேறாக "ஆயிரம் ரூபா தரும் ஆயிரம் பேரை இணைப்போம்" என்ற கருத்து உருவாக்கி, அந்த ஆண்டு தேர்த்திருவிழாவில் பகிரங்க அறிவித்தல் விடப் பட்டது. அன்று மட்டும் 175 அன்பர்கள் ஆயிரம் ரூபா இசைத்து, பெயரைப் பதிவு செய்தனர் அம்பாளுக்குச் சித்திரத் தேர்த்திருப்பணி செய்ய அம்பாள் அடியவர் கள் மனங்கொண் டுள்ளனர் என்ற செய்தி ஊர் உலகம் முழுவதும் பரவியது.

மிகவிரைவாக ஒரு குறிப்பிட்ட நாளில், அம் பாளுடைய சித்திரத் தேர்த்திருப்பணிச் சபைக் கூட்டம் நடைபெற்றது. திரு.அ. பாலசுப்பிரமணியம் தலைவராகத் தெரிவுசெய் யப்பட்டார். திரு. அ. க. செல்வவிநாயகம்

மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

செயலாளராகவும், திரு.வே. பரமநாதன் பொருளாளராகவும் தெரிவுசெய்யப்பட்டனர். அறங்காவலர் சபைத் தலைவர் திரு.வே. இராசேந்திரம், காப்பாளராகத் தெரிவானார்.

விரைவாக ஏற்ற பல அளவுகளில், பல வகை மரங்கள், தேடும்பணி, சிற்பக்கலை வல்லுநர்களைத் தேடும்பணி, நிதியளிக்க மேலும் சம்மதம் தெரிவித்தவர்களின் பட்டியலிடும் பணி, என்பன யாவும் நிகழ்ந்தேறின. எல்லாம் சரிவர ஆயத்தமான நிலையில் 27.06.1988ஆம் ஆண்டில் சித்திரத்தேர்த் திருப்பணி நாள்வேலை ஆரம்பமானது. தேர்த்திருப்பணிச் சபையினர், ஸ்தபதிக்கு வேண்டியவற்றை எல்லாம் உடனுக்குடன் செய்தவண்ணம் இருந்தனர். அம்பாளின் கருணையை அறிந்த வெளி நாடுகளில் வாழும் அன்பர்கள். தாராளமாக வழங்கினர். கொழும்பிலுள்ள வணிகர்களிடம் திரட்டப்பட்ட நிதி தாமதமின்றி வந்து சேர்ந்தன. உள்ளூர் விவசாயிகள், வணிகர்கள், அரச பணியாளர்கள் யாவரும் தம் பங்கைச் செவ்வனவே செய்தனர். தேர், நாள் ஒருவண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்ச்சி பெற்றது.

தேர்த்திருப்பணித் தலைவர் திறம்படத் திட்டமிட்டு, பணிகளைப் பகிர்ந்தளித்திருந்தார். அம்பாள் நகர் கிராம முன்னேற்றச் சங்கம், பிள்ளையார் தேரைப் பொறுப்பேற்க வேண்டும் என்று கோரிக்கையிட்டு, வெற்றி பெற்றிருந்தார், மாதர் அணியையும், தொண்டர் அணியையும் உருவாக்கி, நிதி திரட்ட ஏற்பாடு செய்திருந்தார். இவர்களுடைய பணி உள்ளூர் வாசிகளிடம் ஓர் ஈர்ப்பை உருவாக்கியது. வெளிநாட்டில் பரப்புரையை செவ்வனே செய்து வந்தார். திருப்பணிச் சபை அலுவலர்களையும், நிருவாகசபை உறுப்பினரையும், அடிக்கடி தொடர்புகொண்டு பணியில் இணைத்தார். இராப்பகல் பாராது அரும்பாடு பட்டு தேவையான போதும், பணி நிறைவுறும் போதும் கோயிலில் தங்கிப் பணியை நெறிப்படுத்தினார். சிற்பி குறிப்பிட்டது போல், அவர் ஆரம்பத்தில் போட்ட திட்டம் அமைப்பு எல்லாம் மாறி வேறு வடிவம் பெற்றிருந்தது. இதை அம்பாளே தூண்டிச் செயற்படுத்தியதாக அவர் குறிப்பிட்டுள்ளார். அதே போலவே தேர்த்திருப்பணிச் சபை பொருள் வேண்டிய போது பொருள், நிதி தேடின் நிதி, எல்லாம் கிடைத்தன. எல்லாம் அம்பாளின் அளப்பரிய பேரருளே.

சித்திரத் தேர்த் திருப்பணிச்சபை அம்பாளுக்குத் தேர்கட்டப் புறப்பட்டு, பரிவார கடவுளர்களான பிள்ளையார், வள்ளி தெய்வானையுடன் உறை முருகன் ஆகியோருக்கும் தேர் உருவானது. உருவான தேர், காற்று, மழை, வெயிலால் பாதிக்கப்படாமல், தேர்முட்டியும் கட்டி முடித்தனர். ஸ்தபதியோ தேர் திருப்பணிச் சபையாரோ நினைத்துப் பாராத அற்புதமான வேலைப்பாடுகளுடன் கூடிய விக்கிரகங்கள் அமையப் பெற்றன. யோகர்சுவாமிகளுடன் ராஜயாளியும் அமைந்துள்ள கலைக்கோளமும் இடம்பெற்றது. எண்ணியதைவிட முன்னமே, திருப்பணி நிறைவெய்தியது. சபையினர் இந்தத் தருணத்தில் செய்த பணி மகத்தானது. இதில் விருப்போடு ஈடுபட்ட யாவருக்கும், அம்பாளினுடைய அருள் உரிய உரிய முறையில் சென்றடைய வேண்டுகின்றோம்.



## எழுந்தருளிகளின் தோற்றம்


நடேசருடன் சிவகாமி அம்மையும், மாணிக்கவாசகரும்


வசந்த மண்டபத்தில் எழுந்தருளிகள்


அம்பிகை ஏனைய பரிவாரங்களுடன்


சமயகுரவர் நால்வர்

## கும்பாபிஷேக நிகழ்வுகள்



பிரதான தூபிக் கும்பம்



பிரதான கும்பத்துடன் பரிவார மூர்த்திகளின் கும்பங்கள்



பிரதான தூபிக்கான அபிஷேகம்



தூபிக்கான கிரியை

## பரிவார மூர்த்திகள்



முழுமுதற் கடவுள் பிள்ளையார்



முருகன் - வள்ளி, தெய்வானையுடன்



நவக்கிரகங்கள்



நாகதம்பிரான், வைரவர்

சண்டேஸ்வரி




## அத்தியாயம் – ஐ

# ஆண்டுப் பெருவிழாக்களும் ஏனைய சிறப்பு விழாக்களும்

அம்பாள் கோயில்களில் நடைபெறும் சிறப்பு விழாக்கள் அத்தனையும், இக்கோயிலிலும் நடைபெறுகின்றன. பார்வதியுடன் பரமேஸ்வரன் உறையும் கோயிலும் உருவாகியுள்ளதால், சிவனுக்கே உரித்தான பூசைகள், அபிஷேகங்கள், விழாக்கள் இடம்பெறுகின்றன. அம்பாளுடைய ஆண்டும் பெருவிழாக்கள் சித்திரைப் பூரணையை இறுதியாகக் கொண்டு தீர்மானிக்கப்பட்டுள்ளன. அன்று அன்னை முறையில் இறந்தோருக்குப் பிதிர்க்கடன் செய்ய உகந்த நாள். கோயில் உருவான கையோடு, பொங்கல் நடத்த எண்ணியபோது யோகர் சுவாமிகள் "1000 பானைகள் வைத்து அம்பாளுக்குப் பொங்குங்கள்" என்று சொன்னதும், சித்திரைப் பௌர்ணமி நாளிலேயே. இங்கு மூல மூர்த்தியாக இருப்பது அம்பாள் என்பதால் பூரணை நாளே இறுதிநாள். இன்று கொடியேற்றித் திருவிழாக்கள் நடைபெறும் போது கடைசித் திருவிழா தீர்த்தம், அம்பாள் அன்று கனகராயன் ஆற்றில் உருவான நீர்த்தேக்கமான இரணைமடுக் குளத்தில் நீராடும் நாள். அம்பாளினுடைய தீர்த்தமாடிய நீரினால் பயன்பெறும் விவசாயிகள், நன்றிக்கடனுக்காக அம்பாளுக்குப் பொங்கும் நாளும், முழுநிலவு நாள். அன்று மாலை நடைபெறும், திருவிளக்குப் பூசையில் அம்பாளினுடைய அருளை நிறைவாகப் பெறலாம் எனப் பெண்கள் அதிகம் கூடும் நாளும் அந்நாளே.

அம்பாளினுடைய உபயகாரர்கள், வழிபாட்டாளர்கள், தொலைதூரத்திலுள்ள கிராமங்களில் இருந்து கலந்துகொள்பவர்கள் என்பதாலும், வேறு பல ஊர்களில் உள்ள அன்பர்கள் அம்பாளினுடைய கண்கொள்ளாக் காட்சியை காணவேண்டும் என்பதாலும், குறித்த நேரத்தில் திருவிழாக்கள் நடைபெற வேண்டும். என்ற கட்டுப்பாடு உண்டு. அதே மக்கள் தூர இடங்களுக்குத் திரும்பிச் செல்ல வேண்டும். ஆகவே அவர்கள் உணவுண்டு, கோயில் முன்றலில் ஆறி, அம்பாளைச் சற்றுச் சிந்தித்து இல்லம் ஏக வேண்டும் என்பதால், சிறப்பான அன்ன தானம் தினமும் நிகழ்கிறது. இந்த ஏற்பாடுகளை யாவரும் மதிப்பு மரியாதையுடன் கடைப் பிடிப்பர்.

திருமணங்களில் உள்ள தடை தாமதம், மகப்பேற்றிலுள்ள சிக்கல், சீரற்ற தன்மை, குடும்பங்களில் ஏற்படும் குழப்பம், தடுமாற்றம் போன்றவற்றிற்காக வழிபடுவோரை , அம்பாள் மனக்குறையோடு வாழ விடுவதில்லை. அதே போன்று நெற்செய்கையில் கஷ்டம் கவலை, கால்நடை வளர்ப்பில் நட்டம், நோய் நொடி, பால் உற்பத்தியில் வேதனை விழுக்காடு, தோட்டச் செய்கையில் நட்டம் நோய்த்தொல்லை என்பவற்றிற்காக மனமுருகி அம்பாளை நினைத்தால் துன்பம் நீங்கித் தொழிலில் நலம்பெற

வைப்பார். அம்பாளை வழிபட்டு நன்மை
பெற்றோர் அதிகம். நலம் பெற்றோர்,
மீண்டும், மீண்டும் மேம்பட்ட முறையில்
வழிபாட்டில் ஈடுபடுவார். மாவட்டம்
கடந்தும், நாடு கடந்தும், வழிபாட்டாளர்கள்
உள்ளனர். நிலைமை சீராகி, அமைதியும்,
இயல்பு நிலையும் ஏற்படுமானால் அம்பாளின்
விழாக்களில் பல்லாயிரக் கணக்கானோர்
பங்கு கொண்டு, பயனடைவார்.

ஆண்டுத் திருவிழாக் காலங்களில்,
அறங்காவலர் சபையினரின் தூண்டுதலாலும்,
ஊக்குவிப்பாலும், திருவிழா உபயகாரர்கள்,
அம்பாளின் அடியார்களுக்குச் சமய அறிவை
விதைக்கவும், உபயகாரர்களையும் வழிபாட்
டாளர்களையும் மகிழ்வூட்டவெனவும், ஈர்ப்
பதற்கெனவும், பற்பல கலை, இசை, உரை,
நிகழ்ச்சிகளைக் கோயில் வளாகத்தில் நடத்தி
யுள்ளனர். முன்னர், தெற்கு வீதியில், இதற்காக
ஓர் அரங்கு கட்டப்பட்டிருந் தது. இந்த
வகையில் கம்ப வாருதியின்
பட்டிமன்றம், யாழ்
மாவட்ட, வெளிமாவட்ட,
உள்ளூர் ஆசிரியர்கள்,
அறிஞர்கள் கலந்து கொள்
ளும் விவாத அரங்குகள்,
இலங்கையின் பிரபல
பேச்சாளர்களான ஆத்ம
ஜோதி முத்தையா, கம்ப
வாருதி ஜெயராசா, வித்து
வான் சபாரத்தினம், க.பொ.
இரத்தினம், கலாநிதி தங்
கம்மா அப்பாக்குட்டி ஆகி
யோருடைய சொற் பொழி
வுகள், அருட்கவி வினா
சித்தம்பி போன்றோரின்
பிரசங்கம், திருப்பூங்குடி
ஆறுமுகம் சின்னமணி
போன்றோரின்வில் லிசைக்
கச்சேரி, விற்பனர்கள் பங்கு
கொள்ளும் நாதஸ்வர, தவில் கச்சேரிகள்,
இராவிரவாக நடைபெறும். நாட்டுக்கூத்து,
நாடகங்கள், நட னங்கள், இசைவிழாக்கள்,
பண்ணிசைக் கச்சேரி ஆகியவற்றிற்கு ஏற்பாடு
செய்தார்கள். அறங்கர்வலர் சபையினரும்
அறநெறிப் பாடசாலை மாணவர்களும்,
பாடசாலைகளுக்கும் இடையிலான சமய
அறிவுப் போட்டிகள் பண்ணிசைப் போட்டி
கள் என்பனவற்றையும் நடத்துவர். அதனால்
மக்கள் கூட்டத்திற்கு குறைவிராது.

அறங்காவலர் சபையினர், திருவிழாக்
களை வழங்குமுற்பட்டபோது, கோயிலுடன்
தொடர்புடைய கிராமங்களுக்கு முக்கியத்
துவம் அளித்தனர். நீண்ட காலமாக கோயி
லுடன் தொடர்புகொண்டு பணிகளில்
ஈடுபட்டு வருபவர்கள் உள்ள ஊர்களுக்கு
முன்னுரிமை கொடுத்தனர். இந்த வகையில்
கொடியேற்றத் திருவிழாவை ஒப்படைக்கக்
கூடிய கிராமம் எது என்று பரிசீலிக்கப்
பட்டது. கோயில் திருப்பணி தொடங்கிய
காலத்தில், உடலுழைப்பு நல்கியவர்கள்,
முதலாவது திருக்குட நன்னீராட்டு விழா
நிறைவெய்தியவுடன், கோயிலில் கொண்டு
சென்று காயகதி வழங்கியவர்கள், முதற்
கவிதை பாடிய துன்னாலையைச் சேர்ந்த
கவிஞர், துன்னாலையைச் சேர்ந்த உதவி
அரசாங்க அதிபரிடம் பெற்ற தகவலின்படி
கோயில் உள்ள இடம் கனகபுரம் என்று
குறிக்கப்பட்டுள்ளது என்பதானாலும் புதிய
கொடித் தம்பகம் அமைத்து கோயிலில்
கொண்டு வந்து நிலைநாட்ட வேண்டும் என்று
சபை கோரியபோது சம்மதம் தெரிவித்த
வர்கள், ஆதலாலும் திருவிழா கனகபுரத்
திற்குரியது என்று தீர்மானிக்கப்பட்டது.

கனகபுரம் மக்கள், முதலில் வெள்ளி
முலாம் பூசிய கொடித்தம்பத்தையே,
நிலைநாட்டியிருந்தனர். பின்னர், கனடாவில்
வாழும் கனகபுரம் அன்பர்களின் பாரிய நிதி
உதவியால். செப்பிலான அழகிய கொடித்
தம்பம் அமைத்தும், பராமரித்தும் வருகின்
றனர். கொடியேற்றத் திருவிழா படைத்தல்
தொழிலோடு தொடர்புடையது என்பதால்,
வழிபாட்டாளர் எவருக்கும், படைத்தல்
தொழிலில் துன்பம், துயரம் ஏற்படக்கூடாது
என வேண்டி குங்குமக் காப்பு சாத்தி
வருகின்றனர்.

அடுத்துவரும் இரு திருவிழாக்கள்,
வாய்க்கால் அடிப்படையிலேயே, வழங்கப்
பட்டுள்ளன. அந்த வகையில் இடது கரை
வாய்க்காலின் முதற்திருவிழாவாக, வில்சன்
வீதி, இரண்டாம் வாய்க்கால், மக்களின்
திருவிழாவாக அமைகின்றது. காலை நிகழ்ச்சி
களைத் தொடங்கி வைப்பவர்களாகவும் இவர்
கள் பணிபுரிகின்றனர். இது அம்பாளினுடைய
காத்தல் பணியின் முதலாவது திருவிழா,
வாகனங்களில் ஏறி அம்பாளும் பரிவார
மூர்த்திகளும் பவனி வருவர். கோயிலில்
அம்பாள், பிள்ளையார், வள்ளி தெய்வானை
யுடன் உறையும் முருகன் ஆகியோருக்கும்
பொருத்தமான வாகனங்கள் உள்ளன.
இவற்றைத் தேவைக்கும் நாளுக்கும் ஏற்றவாறு
பயன் படுத்துகிறார்கள்.

மூன்றாம் திருவிழா மூன்றாம் வாய்க்
கால் முரசுமோட்டை, பன்னக்கண்டி,
ஊரியான் பகுதியினருக்குக் கொடுக்கப்
பட்டுள்ளது. இப்பகுதி பாரிய வயல் நிலங்
களைக் கொண்டது. எனவே அங்குள்ள
மக்களோடு தொடர்பு ஏற்படுத்துவது கடினம்.
இருந்தாலும், அம்பாளுடைய பணி தொடர்
கிறது. நான்காம் திருவிழா முன்னர் உருத்திர
புரம் மக்களுடையதாக இருந்தது. பின்னர் அத்
திருவிழாவைத் திருநகர் மக்கள் கையேற்றனர்.
திருநகரில் அப்போது சந்தை இருந்ததால்,
அவர்களும் சேர்ந்து செய்தார்கள். இப்போது
சந்தை பல இடங்கள் மாறிவிட்டது. ஆனால்
சந்தை மக்கள் இப்போதும் அத்திருவிழாவை
விடாமல் சிறப்பாக செய்து வருகின்றனர்.

ஐந்தாம் திருவிழா கிளிநொச்சி வணிகர்
களின் திருவிழா. இவர்கள் அம்பாள் கோயில்
தொடங்கிய நாள் முதல் கிளிநொச்சியில்
ஏற்படும் அனர்த்தங்கள் அனைத்திற்கும்
உதவுவார்கள் இவர்கள் நீண்ட தூரம் செல்லும்
பேருந்துகளுக்கு தடையேற்படாமலும்
யாழ்தேவி, உத்தரதேவி போன்ற தொடருந்து
கள் பரந்தனிலோ, கிளிநொச்சியிலோ நின்
றாலோ, நிறுத்தப்பட்டாலோ உடன் சென்று
உதவுபவர்கள். அழைத்துவந்து கிளிநொச்சி
மத்திய கல்லூரியிலே உணவளித்து உறங்க
வைத்து ஆதரிப்பவர்கள் கிளிநொச்சியில்
உள்ள ஆலயங்களில் திருப்பணி பொதுப்பணி
மன்றங்களின் மக்கள் பணி, விளையாட்டுப்
போட்டிகள், கலைநிகழ்வுகள் அலுவலகங்
களின் தேவைகள் என யாவற்றையும் மனங்
குளிர ஆதரித்து பணிகளை நிறைவுற
உதவுபவர்கள். இவர்கள் அம்பாளினுடைய
திருவிழாவையும் நிறைவுறச் செய்பவர்கள்.
திறமான தவில் நாதஸ்வரக் கச்சேரிகளை
நடாத்தி மக்களின் கலை
யுணர்வு வளர்த்தவர்கள்.
இவர்களுடைய அன்னதான
மும் சிறந்தது.

ஆறாவது திருவிழா
வட்டக்கச்சி மக்களின் திரு
விழா. இது வலது கரை
வாய்க்கால் குடியேற்றங்
களின், முதலாவது திரு விழா.
இந்த உபயகாரர் வட்டக்
கச்சியிலிருந்து ஆசார சீல
ராக, ஊர்வலமாக வருவர்.
இவர்களுடன் ஆட்டக்
காவடி, பாற்காவடி என்ப
னவும், மேளவாத்தியத்து
டன் கோவிலை அடையும்
இவர்களுடைய திருவிழா
வில் நாவுக்கரசர் கோயிற்
கதவு திறக்கத்தேவாரம்



மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

பாடியதும், சம்பந்தர், கதவு அடைக்கத் தேவாரம் பாடிய நிகழ்வு நடைபெறும். அன்று நால்வரும் அம்பாளுடன் உள்வீதி உலா வருவார். அன்று அன்பர்களின் நலன்வேண்டி அம்பாளுக்கு சந்தனக்காப்புச் சாத்தப்படும்.

ஏழாவது திருவிழா, இது இராமநாத புரம் வாழ் மக்களுடைய திருவிழா. இதுவும் வலதுகரை வாய்க்கால் மக்களுடைய திருவிழா மக்கள் யாவருங்கூடி அமைதியான முறையில் நடைபெறும் திருவிழா. வழமை யான அன்னதானம், மேலும் சிறப்பாக நடை பெறும். கூடுதலான மக்களும் கூடுவார்.

இனி எட்டாம் திருவிழா. இதுவே சப்பறத் திருவிழா இது திருவையாறு 2ஆம் பகுதி மக்களின் திருவிழா. ஏற்று நீர்ப்பாச்சல் திட்டத்தைப் பயன்படுத்தியவர்களின் திருவிழா, இது அம்பாளை ஊருக்குள் ஈர்க்கும் திருவிழா. பகற் திருவிழா முடிந்தவுடன் அம்பாள் வேட்டை ஆடற் புறப்பட்டு திருவையாற்றுப் பிள்ளையார் கோயிலுக்கு. ஆரவாரமாகச் செல்வார். அம்பாள் கோவிலை அடைந்ததும் ஐயர் உரிய ஆட்டத்தோடு கன்னி வாழை வெட்டும் நிகழ்வும், அதன் பின் அம்பாள் பிள்ளையார், முருகன் உடன் வீதி உலா வருவார். இரண் டாம் திருவிழாவோடு தொடங்கிய காத்தல் கட மைக்கான திருவிழா இன்று டன் நிறைவு பெறுகிறது.

இக்கோயிலில் அம்பாளுக்குத் தேவையான மாலை, சரம், பூ என்பவற் றைக் கொடுத்து அம்பாளை அழகுபடுத்தும் கலை யைச் சிறப்புறச் செய்து வருகிறார். இவரு டைய நீண்ட நெடுநாள் பணியை யாவரும் பாராட்டும்படியாகச் செய்து வருபவர் ஒருமுறை அழகிய பூக்களைக் கொண்டு சப்பறம் செய்து அனைவரின் பாராட்டைப் பெற்றவர். அப்படியான அம்பாளினுடைய அழகுபடுத்தற் கலைக்குத் தன்னை முழுமையாக அர்ப்பணித்தவர் அவருடைய பணியை இப்போது அவருடைய மகன் செய்து வருகின்றார்.

அம்பாள் வீதி உலாவருவது ஒரு சீராக நடைபெறவேண்டும் என்பதற்காக, அறங் காவலர் சபைத் தொண்டர்களை ஈடுபடுத்தி யுள்ளனர். தொண்டர்கள் திருவிழா உபயகார ரோடு இணைந்து நற்பணியை மேற் கொள்வார்.

அடுத்த திருவிழா தேர்த்திருவிழா. இது அம்பாளை நகர வாழ்மக்களுடைய திருவிழா. வன்னி நிலப்பரப்பில் உள்ள மிக அழகிய மூன்று சித்திரத் தேர்கள் வீதி உலாவரும் காட்சி ஒரு அற்புதக் காட்சி அன்று அம்பாள் அழித்தற் தொழிலை மேற்கொள்ளும் நாள் வசந்த மண்டபத்தில் இருந்து புறப்பட்டு உசார் நடையாக வருவார். உள்வீதியை மண்டபம் பூராவும் பெரிய வாழைக் குலைகளைக் கொண்ட வாழைகள் கட்டி மாவிலை தோரணத்தால் அழகுறச் செய்யப்பட்டிருக்கும். மாவட்டத்திற்கு வெளியில் இருந்தும் மக்கள் வருவார்கள். மக்கள் கூட்டம் அலை மோதும். மிகவும் கூடிய அன்பர்கள் அன்ன தானத்தில் கலந்து கொள்ளுவர். நவசக்தி அர்ச்சனையுடன் பகல் திருவிழா நிறைவடையும். பேருந்து சேவை மேற்கொள்ளப்படும்.

தொடர்ந்து வருவது தீர்த்தத் திருவிழா. இது திருவையாறு 1ம் பகுதி, இரத்தினபுரம் மக்கள் பங்குகொள்ளும் திருவிழா. அத்



அருளல் தொழிலுக்குரிய திருவிழா அம்பாள் இரணைமடுக்குளத்தில் நர்தமாடுதல் நடைபெறும். அன்று வட்டக்கச்சி ஸ்ரீரங்க நாதப் பெருமாள் கோயில், குமார சூரியபுரம் துர்க்கை அம்மன் கோயில், பன்னக்கண்டிப் பிள்ளையார் கோயில்களில் எழுந்தருளித் தெய்வங்கள் வருகை தந்து அம்பாள் தீர்த்தம் ஆடச் செல்லும் போது உடன் சென்று அழகுக் கோலங் காட்டுவார். அன்று மாலை திருவிளக்குப் பூசை நடைபெறும்.

முன்னிரவு திருவூஞ்சல் இடம்பெற்று அதன் பின் பாரம்பரிய ஆண்டுப் பொங்கல் பாரம்பரிய பண்பாட்டுக் கோலங்களுடன் இடம்பெற்று பொங்கல் நடைபெற அம்பாள் பரிவார மூர்த்திகளுடன் திருவூஞ்சல் ஆடி கொடியிறக்க பூசை நடைபெற்று உள்வீதி, வெளிவீதி வலம் வந்து திருவிழா நிறைவு பெறும்.

தொடர்ந்து பூங்காவனத் திருவிழா கனகாம்பிகைக்குளம் பகுதி மக்கள் மேற்கொள்வர். பகல் சங்காபிஷேகம் நடைபெறும். விசேட மகேசுர பூசையும் ஒழுங்கமைக்கப்படும். மாலை அம்பாள் பூந்தண்டிகையில் வீதியூலா வருகின்ற நிகழ்வும், விசேட கலை நிகழ்வும் இடம் பெறும்.

மறுநாள் (பொ.கதிரேசு (காந்தி) வில்சன் வீதி திருவையாறு அவர்களின் உபயமான வைரவர் சாந்தியுடன் மகோற் சவம் இனிதே நிறைவுபெறும்.

**1-அ) நாள் உபயம்**

இதுவரையும் அம்பாளினுடைய திருவிழாக்களைக் கண்ணுற்றோம் இனி அம்பாளுக்கு நடைபெறும் பிற சிறப்பு விழாக்களைப் பார்ப்போம். அந்தவகையில், ஒவ்வொரு மாதமும் நடைபெறும் நாள் ஒன்றில் நிகழ்ந்து, நிறைவுறும் விழாக்கள் என்ற பார்வையில் வெள்ளிக்கிழமை தோறும் நடைபெறும் விழாபற்றியது. வெள்ளிக் கிழமைகள் அம்பாளுக்குச் சிறப்பானவை. சகல மதவழிபாட்டாளர்களுக்கும், வெள்ளிக் கிழமை விசேட நாள். அம்பாள் அடியார் களுக்குக் குறிப்பாகப் பெண்களுக்கு, முக்கிய மான நாள் திருமணமான, திருமணமாகாத, பெண்கள் வீடுகளில் இருந்தாலும், அலுவலகஞ் சென்றாலும், வெள்ளிக்கிழமை அதிகாலை தலைமுழுகிச் சுத்தமாக அசாதாரண முறையில் நாளை ஆரம்பிப்பார். இந்த நாட்களில் இவ்விரதத்திற்கு முன்னதாகச் செய்யக்கூடிய வேலைகளை, முதல்நாள் மாலைவேளையில், முடித்துவைப்பார். இதனால் வீட்டில் உள்ள அனைவரும் புனிதநாளாக வெள்ளிக்கிழமை கடைப் படிப்பார். அம்பாளுடைய வெள்ளிக்கிழமை உபயகாரரும் கடுமையான கட்டுப்பாட்டுடன் உபயம் செய்து முடிப்பார். முன்னர் பேருந்து சேவை இருந்தபோது, காலை வந்து மாலை திரும் புவது சுகமாக இருந்தது. இப்போது வேறு வழிகளில் கோயில் வந்து செல்ல வேண்டிய நிலை. இதனால் செலவும் அதிகம். நேர விரயமும் உண்டு.

முன்னர், அமைதி நிலவிய காலத்தில் ஆண் டொன்றில் உள்ள அத்தனை வெள்ளிக்கும் உபயகாரர் இருந்தனர். இடப்பெயர்வின் பின்னர் சில வெள்ளிக் கிழமைகளுக்கு உபயகாரர் கள் இல்லை. அவர்கள் இருப் பிடங்களை விட்டு வெளி யேறிவிட்டனர். அல்லது அவலம் ஏதும் நடந்திருக்க

லாம். இப்போது எமது தொடர்பு அவர்களு டன் அற்றிருக்கின்றது.

அடுத்து இடம் பெறுவது பங்குனித் திங்கள் இது. அம்பாளுக்கு விசேடமான மாதம் எல்லா அம்பாள் கோவில்களிலும் விசேட அபிஷேகம், பூசை, பொங்கல் என்பன இடம்பெறும். எமது அம்பாளும் ஊர்க் கோயில்களுடைய தொடர்பை உறுதிப் படுத்தவும் அடியார்கள் அன்பர்களுடைய உறவை உறுதி செய்யவும், பங்குனித்திங்கள் நாளில் கிராமங்கள் தோறும் ஊர் உலாச் செல்லும், பாரம்பரிய நிகழ்வில் பங்கு கொள்வார். ஒவ்வொரு பங்குனித் திங்களும் அம்பாளுக்கு விசேட பூசைகள், கவனிப்புகள் இடம்பெறும். அடுத்த பிரதான நாள் ஆடிச்செவ்வாய். திருமணம் தாமதமாகும் பெண்களும், மகப்பேற்றுக் குறைபாடுடைய பெண்களும், குறிப்பாக விரதம் இருந்து, அம்பாளிடம் சென்று, அர்ச்சனைகள் செய்து வழிபாடாற்றும் நாள். இக்கோயில் பெண்களுடைய இக்குறைபாடுகள் நீங்க அம்பாள் கருணை காட்டவேண்டும் என்று கோரி, ஆடி நான்காஞ் செவ்வாய் கோயிலில் விசேட யாகம் நடைபெறுவதுண்டு. பல்லாயிரக் கணக்கானவர்கள் பங்கு கொண்டு பலன் பெற்று வருகின்றனர். இப்பெருவிழாவை அன்பர் யோகராசாவும், அம்பாள் அடியார்களும் இணைந்து பக்தி சிரத்தையுடன் "இந்த யாகத்தை பிரமாண்டமான முறையில் செய்து வருகின்றனர்.

அடுத்த பிரதானமான நாள் புரட்டாதிச் சனி. சனிக்கிழமை விரதமிருப்பவர்கள், மிகவும் அவதானமாக இருந்து, விரதத்தைக் கடைப்பிடிப்பார். அநேகமாக குடும்பத்தில் உள்ள மூக்கிய உறுப்பினர் ஒருவருக்கு சனிதோஷம் இருந்தால், அந்தக் குடும்ப உறுப்பினர் அனைவரும் விரதம் மேற்கொள்வர். குடும்பத்தில் அனைவரும் விரதம் மேற்கொள்வார். குடும்பத்தில் அனைவரும் இவ்விரதத்தில் ஒத்துளைப்பர். காலையில் எல்லோரும் ஒழுங்காக அரப்புத் தேய்த்து தோய்ந்து குளித்துத் தொடங்குவார். பின்னர் சுத்தமாகவும், புனிதமாகவும் சமையல் செய்து தலைவாழை இலையில் ஒரு சுத்தமான இடத்தில், காகத்திற்கு படைப்பர்.

விரதம் உரிய முறையில் கடைப்பிடிக்கப்பட்டால் காகம் படையலை உடன் உண்ணும். காகம் படையலை உண்ணவில்லையானால் தாங்கள் பிடித்த விரதத்தில் ஏதோ குறை இருப்பதாக உணர்வார். அடுத்த சனிக்கிழமை குறைபாட்டை நீக்க முயற்சிப்பார். காகம் சோறு உண்டாலே விரதம் சரியாக நிறைவேறியுள்ளதாக எண்ணுவர்.

அன்று நவக்கிரகக் கோயில் உள்ள கோயில் ஒன்றுக்குச் சென்று எண்ணெய்ச் சிட்டி எரிப்பர். தனியாகச் சனிஸ்வரன், உள்ள கோயிலேயே எண்ணைச் சிட்டி எரிக்க விரும்புவர். எண்ணைச் சிட்டி எரித்த பின் சனீஸ்வரனுக்கு அர்ச்சனைசெய்து, தமது குறைபாடு நீங்க வேண்டும் என்று கோரி, வழிபட்டு விரதத்தை நிறைவு செய்வர்.

**ஆ) குருபூசை**

அடுத்து சற்று விரிவான முறையில் நடைபெறும் நாள் உபயம் நால்வர் குருபூசையாகும். இது சைவசமயப் பிரசார நாளாகவே கொண்டாடப்படுகிறது. இவர்கள் ஒவ்வொருவரும் சைவத்திற்கு ஆற்றியுள்ள அரும்பணிகளைப் பாடசாலை மாணவர்களும் பொதுமக்களும் அறிந்து கொள்ளக் கூடிய வகையில் சமயப் பேச்சுக்கள் மாணவர்களிடையே சமயப்போட்டிகள், தேவாரப் போட்டிகள், பொதுஅறிவுப் போட்டிகள், இடம்பெற்று, இவ்விழாக்கள் முன்னர் நடைபெற்றது. இவற்றை இனிவருங் காலங்களில் மீளமைக்கப்பெற்று அவர்கள் ஆற்றியுள்ள பணிகளில் சிலவற்றையேனும் இளம்பராயத்தினர் கடைப்பிடிக்க வழிசமைக்கப்படவேண்டும். இவ்விழாக்களில் முதலாவதாக வருவது திருநாவுக்கரசர் குருபூசை (சித்திரைச் சதயம்) இந் நாளில் அவர் அன்று, உழவாரப் பணி செய்ததால், இன்று கோயிலில், கோயிற் பூங்காவை, கோயிற் சூழலைச் சுத்தஞ் செய்வது நன்று. அடுத்து வருவது திருஞானசம்பந்தர் குருபூசை (வைகாசி மூலம்). அன்று அவராற்றியுள்ள பணிகளைப் போன்று சைவத்தை வளர்க்கக் கூடிய பணிகளைத் திட்டமிட்டுச் செயற்படுத்தலாம். இவர் ஆற்றிய பணிகளாலேயே பாண்டிய நாட்டில் சைவம் மீட்கப்பட்டது. அதன் பின்னர் வருவது மாணிக்கவாசகர் குருபூசை (ஆனி மகம்) மாணிக்கவாசகர் மன்னனோடு பொருதித் சிவனருளை நிலை நாட்டியவர். ஆண்டில் இறுதியாக வருவது சுந்தரமூர்த்தி நாயனார் குருபூசை (ஆடிச் சுவாதி). இவர் பெரியபுராணத் தொண்டர்களை வெளிப்படுத்தியவர். இவரது குருபூசையில் தொண்டின் மகிமை பற்றிய பெரிய புராணக் கதைகள் வெளிவரச் செய்யலாம்.

**இ) மாதப் பூசை**

தைமாதம் முதல் மார்கழி வரை ஒவ்வொரு மாதத்திலுள்ள நாட்களுக்கு நடக்கும் பூசை இது ஒவ்வொரு மாதப் பூசைக்கும் உபயகாரர்கள் இருக்கிறார்கள் இவர்கள் பூசைக்கு தேவையான பொருட்களைக் கொடுத்து, நாளாந்தம் கொள்வனவு செய்யக்கூடிய ஏனைய பொருட்களுக்கும் நிதியும் கொடுப்பார். சாதாரண நாட்களில் காலைப்பூசை முடிந்து சிறிது நேரத்தில் அபிஷேகம் தொடங்கி நண்பகல் பூசைக்குச் சற்று முன்னதாக நிறைவடையும். இதுவே இங்கு நடைமுறை.

**உ) (அ) கோவிலோடும் அம்பாளோடும் தொடர்புடைய உபயங்கள்.**

இந்த வகையில் முதலாவதாக வருவது தைப்பூசம். இது ஒரு விவசாயப் பிரதேசம். நெல்வேளாண்மை செய்பவர்கள் பலர் உள்ளனர். அவர்கள், புதிய நெல்லில் புதிர் எடுத்து வீட்டிலும், கோயிலிலும் கொண்டாடும் நாள். புதிர் எடுத்த நெல்லை அரிசியாக்கி அமுதுபொங்கி சுவாமிக்குப் படைத்து, பின்பலருடன் கூடி உண்டு மகிழ்ந்து கொண்டாடும் நாள். இதேபோல இந்த அரிசி கொண்டு கோயிலில் பொங்கிப் படைத்துப் பகிர்ந்து உண்பார். தைப்பூச நாளில் குழந்தைகளுக்கு கன்னிமுடி வெட்டுவதும் உண்டு. காதுகுத்திப் புதுநகை அணிவது, குழந்தைகளுக்குச் சோறு தீத்துவது, ஏடு தொடக்குவது எல்லாம் நிகழும். தை பிறந்தால் வழிபிறக்கும். என்ற உணர்வோடு, புதிய வாழ்வு மலரும் என்ற நம்பிக்கையை வளர்க்கும் நாள்.

**ஆ) நட்சத்திரங்களோடு தொடர்புடைய அம்பாளினுடைய பூசைகள்.**

மாசிமகம், பங்குனி உத்தரம், வைகாசி விசாகம், ஆனி உத்தரம், ஆடிப்பூரம், ஆவணி மூலம், கார்த்திகைக் கார்த்திகை, மார்கழி திருவாதிரை என்பன இந்தப் பூசைகளை மேற்கொள்வார். உரிய மதிப்புடனும், மரியாதையோடும் சிறப்பாகச் செய்வார்கள்.



மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

**இ)கார்த்திகை மாத சர்வாலயதீபம்**

இது எல்லாக் கோயில்களிலும் விளக்கேற்றி வழிபடும் நாள். விளக்கிலே இருந்து மேல்நோக்கி எரியும் தீபத்திலே இறைவனைக் கண்டு வழிபடும் வழிபாடு. சைவர்களுடைய ஆதி வழிபாடு இது. இந்த நாளில் திருவண்ணா மலையுச்சியில் தீபம் ஏற்றிக் கொண்டாடு வார். பல நாட்கள் மலை உச்சியில் விளக் கெரித்து ஒளிபரப்பும் பலமைல் தூரம் இவ்வெளிச்சம் தெரியும் வழிபாடு தொடரும்.

**ஈ) திருவிளக்குப்பூசை:** இது மாதந்தோறும் பூரணை நாட்களில் பல கோயில் களில் நூறு, ஆயிரம் எனப் பெண்கள் கலந்து கொள்ளும் பூசை. எமது கோயிலில் சித்திரைப் பூரணையின் போது மூத்த சிவாச்சாரியார்கள், ஆண்டுப் பெருவிழாவிற்காக வந்தவர்கள் இருப்பதால் சிறப்பாக நடைபெறும். பெண்கள் இப்பூசையின் போது தாங்களே பூப்போட்டு விளக்குக்காட்டி வழிபடுதலா லும், மந்திரங்கள், மனங் கொள்ளத்தக்கதாக இருப்ப தாலும், விருமபும் பூசை இக்கோயிலில் பல வருடங் களாக ஏற்ற வழிபாட்டாளர் களை, வழிகாட்டக்கூடிய சிவாச்சாரியர்கள் அமை யாததால் பலவருடங்களில் பல மாதங்களில் இப்பூசை நடைபெறவில்லை. பெண் கள் இப்பூசையின் போது குடும்ப அன்னியோன்யம், குடும்பமேம்பாடு, ஏற்ற திருமணம் என்பன வேண்டி வழிபட்டு நிரம்பிய மன அமைதியைப் பெறுவார்.





**3) (அ) தொடர் வழிபாடுகள்**

அம்பாளுடைய தொடர்வழிபாட்டு நாட்களில் முதலாவதாக வருவது, புரட்டாதி மாதம் நவராத்திரியாகும். இதுவும் புரட்டாதி மாதம் அமாவாசை நாளைத் தொடர்ந்து வரும் நாள் தொடங்குகிறது. தொடர்ந்து ஒன்பது நாட்கள் வழிபாடு தொடரும். கல்வி, வித்தை, பொருள் முதலியவற்றில் நாட்ட முள்ளோர் ஈடுபடும் வழிபாடு. இது முதல் மூன்று நாள், துர்க்கைக்குரியது. வித்தைகள் கற்போர் மனஒருமைப்பாடு, துணிவு வேண்டு வோர் ஆண், பெண் அனைவரும் வழிபாட்டை மேற்கொள்வார். அடுத்துவரும் மூன்று நாட்கள் இலக்குமிக்கு ஒதுக்கப்பட் டுள்ள நாட்கள். கடைசி மூன்று நாட்கள் சரஸ்வதிக்கு உள்ளவை கல்விவேண்டுவோர். யாவரும், வித்தைகள் கற்போரும் இந்நாட் களில் வழிபாட்டில் ஈடுபடும் காலம் கடைசி நாள் விஜயதசமி அன்று பாடசாலையில் ஏடு தொடக்குதல் முதல் வித்தைகள் கற்கத் தொடங்கும் நாள். கோயில்களிலும் இந்நாட் கள் கொலுவைத்தலோடு தொடங்கும். மற்றைய இடங்கள் போல் வழிபாடு இடம்பெறும். பத்தாம் நாள் மாலை பெரிய விழாக்கள் கோயில்களில் இடம்பெறும்.

**(ஆ) கேதார கௌரி விரதம்**

இது ஐப்பசி மாதம் அமாவாசைக்கு அடுத்தநாள் தொடங்கி 21நாள் பூசை வழிபாட்டுடன் நடைபெறும். இக்கோயிலில் 1000க்கு மேற்பட்ட பெண்கள் பங்கு கொள்ளும் பூசை. இது ஆண்களும் கலந்து கொள்ளலாம். ஆண்கள் இங்கு கலந்து கொள்வது குறைவு இந்த நாட்களில் இக்கோயில் விழாக்கோலம் கொள்ளும் 20 நாளும் விரதமிருப்போர் அவரவர் வகுத்துக் கொண்டபடி விரதமிருப்பர். கோயில் குருக்கள் ஒவ்வொருநாளும் மந்திரஞ் சொல்லி முடிச்சிடுவார். மந்திரம்சொல்லி பூசையும் செய்வார். இறுதி நாள் விரதம் அனுட்டிப் போர் விரதம் இருந்து, கோடிகட்டகோயில் சென்று பூசையில் இருந்து கலந்து நூலைக் குருக்களிடம் பெறுவர். அடுத்தநாள் பாறணை சிலருக்கு அன்னதானம் கொடுத்து விரதம் முடிப்பார். அடுத்த ஆண்டுவரை காலையும் மாலையும் இறைவழிபாட்டு வேளைகளில் விரதம் இருந்த நோக்கை நினைத்து இறைவியை வேண்டி திருநீறும், பூவும், நூல் முடிச்சுக்கு இட்டு வழிபடுவர். அடுத்த ஆண்டு இவ்விரதம் வரை இந்நூலை வழிபாட்டோடு காப்பர். குடும்ப அன்னியோன்யம் வளரவும் குடும்ப மேம்பாட்டையும் ஏனைய குடும்ப நன்மைகள் கருதியும் ஆண், பெண் அனை வரும் இவ்விரதம் இருப்பர்.

**இ. சித்திரைப் புத்தாண்டு**

இது அம்பாள் கோவிலில் கொண்டா டப்படும் அம்பாளுடன் தொடர்பு இல்லாத, ஆனால் சமுகத்தோடு தொடர்புடைய விழா சித்திரை மாதப் பிறப்பன்று கொண்டாடப் படுவது மக்கள் புத்தாடை உடுத்து, புதுப் பானையில் பொங்கி பகிர்ந்துண்டு மகிழ்வர். இது கோயிலில் முக்கியமான ஒரு நிகழ்வு. சிவச்சாரியார்களுக்கும் ஏனைய பணியாளர் களுக்கும் புத்தாடை கொடுத்து, கைவிசேஷம் கொடுத்து மகிழ்ந்து கொண்டாடப்படுவது. தைப்பொங்கல் போன்று இ றும் குடும்ப உறுப்பினர்களுடன் கோயில் சென்று வழிபட்டு பூசை முதலியன செய்து திரும்புவர்.

**4) (அ) நடேசர் அபிஷேகம்**

இப்போது சிவனும் சக்தியும் இணைந் திருக்கும் நிலையில் சிவனுக்கு நடைபெறும் அபிஷேகம் பூசை விழாக்களில் நாட்டம் செலுத்துவோம். சிவனை அபிஷேகப் பிரியன் என்று சொல்லுவர். இந்த வகையில் சித்திரைத் திருவோணம் ஆனி உத்திரம் மார்கழித் திருவாதிரை நட்சத்திரங்கள் தோன்றும் நாட்களிலும், மாசி, ஆவணி, புரட்டாதி மாதங்களில் பூர்வபக்கச் சதுர்த்தி திதிகளிலும் சிவனுக்குச் சிறப்பான அபிஷேகங்கள் நடைபெறுகின்றன.

**(ஆ) சிவராத்திரி விழா**

இந்நாளில் சிவனுக்கு இரவு காலத்தில் நான்கு பூசை வேளைகளிலும் உரிய விசேட அபிஷேகங்களோடு, பூசை வழிபாடு என்பன வும் இடம்பெறுகின்றன. அம்பாள் பெருங் கோயில் அறநெறிப் பாடசாலையினரால் முன்னிரவு கூட்டு வழிபாடு நடைபெறுகிறது. பின்னர் மாணவர்களிடையே பொது அறிவுப்போட்டி, பெரியார்களின் பட்டி மன்றம் என்பனவும் இடம்பெறும். பள்ளி மாணவர்களும், குடும்ப உறுப்பினர்களும் விரதமிருந்து, நித்திரை விழிக்கச்செய்து வழிபாட்டுப் பயனைப்பெற வழிவகுக்கப் படுகின்றது.

**(இ) திருவெம்பாவை**

திருவெம்பாவைக் காலம் மிகுந்த குளிர்காலம். இருந்தாலும் சமய ஈடுபாடு கூடிய காலம். குடும்பப் பெண்களும், இளம் பெண்களும் அதிகாலையில் எழுந்து நீராடித், தோய்த்து உலர்ந்த ஆடை உடுத்து, வீட்டு வாசலில் மெழுகி அழகிய கோலம் இட்டு, பிள்ளையார் பிடித்து வைத்து வணங்குவர். அதேபோன்று அதிகாலை எழுந்து குளித்து, ஆண்டாள் திருப்பாவை 30 நாளும் பாடுவார். இந்தவகையில் திருவெம்பாவை நடை பெறும். மார்கழி மாதம், மரமும் கிடுகிடுக்கும் குளிர் காலம். ஆனால் சமய வழிபாட்டிற்கு உகந்த காலம்.

இந்த மார்கழி மாதத்தில் இளம் பெண்கள் அதிகாலை துயில் எழுந்து நீராடி ஆசார சீலர்களாக

திருவெம்பாவை பாடுவார்கள். வீதி வீதியாகப் பெண்கள் திருவெம்பாவை பாடி, வயது குறைந்த பெண்களை எழுப்புவார். ஏனைய மக்களையும் உறக்கம் கலைய வைத்து இறைவனைச் சிந்திக்க வைப்பார். கோயில்களில் முதல் திருப்பள்ளி பாடி பின்னர் திருவெம்பாவை பாடுவர். நடைபஜனை மேற்கொள்ளவோடும் திருப்பள்ளி எழுச்சி பாடிய பின்னர் திருவெம்பாவை பாடுவர்.

இக்கோயிலில் எல்லா உபயகாரரும் அதிகாலை கோயிலுக்கு வந்து திருப்பள்ளி எழுச்சி திருவெம்பாவை பாடக் கேட்டபடி, அபிஷேகம் பூசை வழிபாட்டில் ஈடுபடுவார். இக்காலம் கோயில் போன்று ஊரும். சுற்றாடல் கிராமங்களும் சமய ஒழுக்கம் பேணி இம்மையில் ஆன்மீக ஈடுபாடுடைய வாழ்க்கைக்கும். மறுமையில் வீடுபேறு அடையவும் கடும் முயற்சியில் உழைப்பர். ஊர் உலகம் யாவும் திருவெம்பாவை பாடியும், பாடக்கேட்டும் பக்தி மேலீட்டோடு பேரின்பப் பெருவாழ்வு வாழ வழி தேடுவர்.

**5. கந்தசஷ்டி**

இது முருகன் கோயில் யாவற்றிலும் மிகுந்த சிறப்புடன் கொண்டாடப்படும். ஆண், பெண் இருபாலாரும் வயது வேறுபாடின்றி கந்தசஷ்டி விரதமிருப்பர். இது ஆறுநாள் விரதம். விரதமிருப்போர் கடுமையான விரத ஒழுங்கைக் கடைப்பிடிப்பர். எமது பண்பாடு கந்தபுராணம் தழுவியது என்பதை யாவரும் ஏற்பர். இப்படியான இந்த சமயப்பண்பாடு தாய்வழிபாடு எமக்கு வந்தது. நாவலர் கிறிஸ்தவ சமய போதனைகளை, எதிர்கொள்ள எல்லா கோயில்களிலும், கந்தபுராணப் படிப்பை மேற்கொள்ளச் செய்தார். அந்தக் காலத்தில் ஆண்கள் கோயிற் பக்கமே போக அஞ்சினர். ஆனால் பெண்கள் கோயிலுக்குச் சென்று கந்தபுராணப் படிப்பைக் கேட்டு வாழ்க்கை மேம்படக் கந்த புராணத் தத்துவங்களை மேற்கொண்டனர். அத்தகைய துணிகரமான செய்கைகளால் நாம் சைவசமயத்தைச் சேர்ந்தவர்கள் என்று பெருமை கொள்ள வைத்தனர். இவற்றை இன்றைய சூழலில் மீட்டுப் பார்த்து கரிசனையோடு இவ்வாலயத்தில் இதைக் கடைப்பிடிக்கின்றனர். இப்பூசைக்கான ஆறு நாளும் தனித்தனி உபயகாரர்கள் உள்ளனர். பக்தியோடு இவ்விரதத்தைக் கைக்கொள்கின்றனர்.

## அம்பாளின் மக்கள் நலப்பணிகள்

அம்பாள் கோயில் சமயப் பணிகளோடும், கோயிற் பணிகளோடும் மட்டும் கட்டுப்பட்டதல்ல, நீண்ட காலமாக, மக்கள் நலப்பணிகளிலும், ஈடுபாடு காட்டி வருகின்றது. இந்தவகையில் கல்விப்பணி, பொதுச் சுகாதார வைத்தியப்பணி, ஊருடனான நலப்பணிகள் என்பவற்றைக் குறிப்பிடலாம். கல்விப்பணியில் அறநெறிப்பாடசாலை ஒன்றை நீண்டகாலமாக நடத்தி வருகின்றது. இது இந்து பண்பாட்டு அலுவல்கள் திணைக்களத்தில் பதிவு செய்யப்பட்டது. அவர்களின் உதவிகளைப் பெற்று நடந்து வருகிறது. ஆண்டு ஒன்று முதல், ஆண்டு ஆறு வரை நூறு மாணவர்கள் வரை கல்வி கற்று வருகின்றார்கள். வகுப்புகள், ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 8.30 மணி தொடக்கம் 11.00 மணி வரை நடைபெறுகிறது. வகுப்புகளில் கோயில் வழிபாடு, கூட்டு வழிபாடு, பண்ணிசை, தொண்டு என்பவற்றில் நடைமுறைப் பயிற்சிகள் வழங்கப்பட்டு வருகின்றன. இந்துசமயப் பண்பாட்டலுவல்கள் திணைக்களத்தில் பெறப்பட்ட நூல்கள் மாணவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. அவர்கள் திணைக்கள பரீட்சைக்கு ஆயத்தப்படுத்துகின்றனர்.

இப்பாடசாலையில் மூன்று ஆசிரியர்கள் கற்பித்து வருகின்றார்கள். இவர்கள் சமயப் பண்பாட்டலுவல்கள் திணைக்களப் பயிற்சியையும், அறிவுறுத்தல்களையும், பெற்றுள்ளனர். இவர்களுக்கு கோயில் உதவித்தொகை ஒன்றை வழங்கி வருகின்றது. அறங்காவல் சபையினர் இவ்வாசிரியர்களை நெறிப்படுத்துகின்றனர். மேலும் பல அயலில் உள்ள மக்களுக்கு நீரைச் சபை வழங்கி வருகின்றது. பல குடும்பங்கள் இச்சேவையாற் பயனைப் பெறுகின்றது. பொதுவைத்திய சேவையில் தாய் சேய் நலன், கற்பிணித் தாய்மார்களுக்கான வைத்தியசேவை என்பனவும் இங்கு நடைபெறுகின்றன. ஆடற்கலை மாணவர்களின் அரங்கேற்றம், நாட்டுக்கூத்து அரங்கேற்றம், பண்ணிசைக் கச்சேரி என்பனவும் இடம்பெற உதவுகின்றது. ஏழை மாணவர்களின் கல்விக்கும் சபை உதவிவருகின்றது.

## கோயிலை வழிப்படுத்திய சான்றோர்கள்

**அரசாங்க அதிபர்**

அறங்காவலர் சபையின் முதற் தலைவராக இருந்த உயர் திரு. ம. சிறிகாந்தா, அரசாங்க அதிபராக இருந்தவர். அவர் ஒரு மாமனிதர். கிளிநொச்சியில் இருந்த பயனுள்ள காடுகளை ஏதோ ஒரு திட்டத்தில் உள் வாங்கி, உற்பத்தியைப் பெருகச் செய்தவர். விவசாயிகளும், அரச அதிபர்களுக்கு நிகரான வாழ்க்கை வாழ வேண்டுமென, எண்ணிச் செயற்பட்டவர். கிளி நொச்சியில் உருவாக்கப்பட்ட குடியேற்றத் திட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் நேரடியாகச் சென்று குறைபாடுகளைக் கேட்டறிந்து இயன்ற வரையில் போக்குபவர். இதற்காக நாள் தவறாமல் செவ்வாயும், வெள்ளியும் கிளிநொச்சிக்கு வருவார். இவரின் பின்னர் அரசாங்க அதிபர் வந்த திரு. நெவில் ஜயவீராவிடம் இப்படிச் சொல்லி கேட்டபோது அவர் மறுத்து விட்டார்.

பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டும் என்றால் தனிமாவட்டம் கேளுங்கள் என்றார். சிறிகாந்தாவோடு, திணைக்களத் தலைவர்கள் யாவரும் ஒத்துழைத்து ஓர் அணியாகச் செயற்பட்டனர். இதனால் இவர் பல சாதனைகளைச் செய்யக்கூடியதாக இருந்தது. அத்தகைய திறமைகள் உள்ளவர் என்பதால், கோயிற் திருப்பணிகளையுஞ் செவ்வையாகச் செய்யத்தக்கதாக இருந்தது. சேர். பொன். இராமநாதன் தான் உருவாக்கிய கல்வி நிலையங்களாக இராமநாதன் கல்லூரி, பரமேஸ்வராக் கல்லூரி விடுதி, மாணவர்களுக்கு உணவளிப்பதற்காக கிளிநொச்சியில் வசதியான இடத்தில் 1000 ஏக்கரை ஒதுக்கி, அதற்குத் தானியக் களஞ்சியம், எனப்பெயரிட்டார். அவரது சிந்தனையை மனதில் நிறுத்திச் செயற்பட்ட அரச அதிபர் சிறிகாந்தா, கிளிநொச்சி மாவட்டத்தைத் தானியக்களஞ்சியமாக உருவாக்கினார்.

பின்னர் கிளிநொச்சி மாவட்டம் உருவாக்கப்பட்டது. இங்கு பலர் கடமையாற்றினார். அவர்களுள் அரச அதிபர் திரு.க. தேவசிகாமணி அவர்கள் தேர்த் திருப்பணிச் சபையின்



மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

திருவெம்பாவை பாடுவார்கள். வீதி வீதியாகப் பெண்கள் திருவெம்பாவை பாடி, வயது குறைந்த பெண்களை எழுப்புவார். ஏனைய மக்களையும் உறக்கம் கலைய வைத்து இறை வனைச் சிந்திக்க வைப்பார். கோயில்களில் முதல் திருப்பள்ளி பாடி பின்னர் திருவெம் பாவை பாடுவர். நடைபஜனை மேற்கொள்ள லோடும் திருப்பள்ளி எழுச்சி பாடிய பின்னர் திருவெம்பாவை பாடுவர்.

இக்கோயிலில் எல்லா உபயகாரரும் அதிகாலை கோயிலுக்கு வந்து திருப்பள்ளி எழுச்சி திருவெம்பாவை பாடக் கேட்டபடி, அபிஷேகம் பூசை வழிபாட்டில் ஈடுபடுவார். இக்காலம் கோயில் போன்று ஊரும். சுற்றாடல் கிராமங்களும் சமய ஒழுக்கம் பேணி இம்மையில் ஆன்மீக ஈடுபாடுடைய வாழ்க்கைக்கும், மறுமையில் வீடுபேறு அடையவும் கடும் முயற்சியில் உழைப்பர். ஊர் உலகம் யாவும் திருவெம்பாவை பாடியும், பாடக்கேட்டும் பக்தி மேலீட்டோடு பேரின்பப் பெருவாழ்வு வாழ வழி தேடுவர்.

**5. கந்தசஷ்டி**

இது முருகன் கோயில் யாவற்றிலும் மிகுந்த சிறப்புடன் கொண்டாடப்படும். ஆண், பெண் இருபாலாரும் வயது வேறுபாடின்றி கந்தசஷ்டி விரதமிருப்பர். இது ஆறுநாள் விரதம். விரதமிருப்போர் கடுமை யான விரத ஒழுங்கைக் கடைப்பிடிப்பர். எமது பண்பாடு கந்தபுராணம் தழுவியது என்பதை யாவரும் ஏற்பர். இப்படியான இந்த சமயப்பண்பாடு தாய்வழிபாடு எமக்கு வந்தது. நாவலர் கிறிஸ்தவ சமய போதனைகளை, எதிர்கொள்ள எல்லா கோயில்களிலும், கந்தபுராணப் படிப்பை மேற்கொள்ளச் செய்தார். அந்தக் காலத்தில் ஆண்கள் கோயிற் பக்கமே போக அஞ்சினர். ஆனால் பெண்கள் கோயிலுக்குச் சென்று கந்தபுராணப் படிப் பைக் கேட்டு வாழ்க்கை மேம்படக் கந்த புராணத் தத்துவங்களை மேற்கொண்டனர். அத்தகைய துணிகரமான செய்கைகளால் நாம் சைவசமயத்தைச் சேர்ந்தவர்கள் என்று பெருமை கொள்ள வைத்தனர். இவற்றை இன்றைய சூழலில் மீட்டுப் பார்த்து கரிசனை யோடு இவ்வாலயத்தில் இதைக் கடைப் பிடிக்கின்றனர். இப்பூசைக்கான ஆறு நாளும் தனித்தனி உபயகாரர்கள் உள்ளனர். பக்தி யோடு இவ்விரதத்தைக் கைக்கொள்கின்றனர்.

## அம்பாளின் மக்கள் நலப்பணிகள்

அம்பாள் கோயில் சமயப் பணிகளோடும், கோயிற் பணிகளோடும் மட்டும் கட்டுப்பட்டதல்ல, நீண்ட காலமாக, மக்கள் நலப்பணி களிலும், ஈடுபாடு காட்டி வருகின்றது. இந்தவகையில் கல்விப்பணி, பொதுச் சுகாதார வைத்தியப்பணி, ஊருடனான நலப்பணிகள் என்பவற்றைக் குறிப்பிட லாம். கல்விப்பணியில் அற நெறிப்பாடசாலை ஒன்றை நீண்டகாலமாக நடத்தி வருகின்றது. இது இந்து பண்பாட்டு அலுவல்கள் திணைக்களத்தில் பதிவு செய்யப்பட்டது. அவர்களின் உதவிகளைப் பெற்று நடந்து வருகிறது. ஆண்டு ஒன்று முதல், ஆண்டு ஆறு வரை நூறு மாணவர்கள் வரை கல்வி கற்று வருகின்றார்கள். வகுப்புகள், ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 8.30 மணி தொடக்கம் 11.00 மணி வரை நடைபெறு கிறது. வகுப்புகளில் கோயில் வழிபாடு, கூட்டு வழிபாடு, பண்ணிசை, தொண்டு என்பவற்றில் நடைமுறைப் பயிற்சிகள் வழங்கப்பட்டு வருகின்றன. இந்துசமயப் பண்பாட்ட லுவல்கள் திணைக்களத்தில் பெறப்பட்ட நூல்கள் மாணவர்களுக்கு வழங்கப்பட்டுள் ளன. அவர்கள் திணைக்கள பரீட்சைக்கு ஆயத்தப்படுத்துகின்றனர்.

இப்பாடசாலையில் மூன்று ஆசிரியர் கள் கற்பித்து வருகின்றார்கள். இவர்கள் சமயப் பண்பாட்டலுவல்கள் திணைக்களப் பயிற்சி யையும், அறிவுறுத்தல்களையும், பெற்றுள் ளனர். இவர்களுக்கு கோயில் உதவித்தொகை ஒன்றை வழங்கி வருகின்றது. அறங்காவல் சபையினர் இவ்வாசிரியர்களை நெறிப்படுத்து கின்றனர். மேலும் பல அயலில் உள்ள மக்களுக்கு நீரைச் சபை வழங்கி வருகின்றது. பல குடும்பங்கள் இச்சேவையாற் பயனைப் பெறுகின்றது. பொதுவைத்திய சேவையில் தாய் சேய் நலன், கற்பிணித் தாய்மார் களுக்கான வைத்தியசேவை என்பனவும் இங்கு நடைபெறுகின்றன. ஆடற்கலை மாணவர் களின் அரங்கேற்றம், நாட்டுக்கூத்து அரங் கேற்றம், பண்ணிசைக் கச்சேரி என்பனவும் இடம்பெற உதவுகின்றது. ஏழை மாணவர் களின் கல்விக்கும் சபை உதவிவருகின்றது.

## கோயிலை வழிப்படுத்திய சான்றோர்கள்

**அரசாங்க அதிபர்**

அறங்காவலர் சபையின் முதற் தலைவ ராக இருந்த உயர் திரு. ம. சிறிகாந்தா, அரசாங்க அதிபராக இருந்தவர். அவர் ஒரு மாமனிதர். கிளிநொச்சியில் இருந்த பயனுள்ள காடுகளை ஏதோ ஒரு திட்டத்தில் உள் வாங்கி, உற்பத்தியைப் பெருகச் செய்தவர். விவசாயி களும், அரச அதிபர்களுக்கு நிகரான வாழ்க்கை வாழ வேண்டுமென, எண்ணிச் செயற்பட்டவர். கிளி நொச்சியில் உருவாக்கப் பட்ட குடியேற்றத் திட்டங்கள் ஒவ்வொன் றுக்கும் நேரடியாகச் சென்று குறைபாடு களைக் கேட்டறிந்து இயன்ற வரையில் போக்குபவர். இதற்காக நாள் தவறாமல் செவ்வாயும், வெள்ளியும் கிளிநொச்சிக்கு வரு வார். இவரின் பின்னர் அரசாங்க அதிபர் வந்த திரு. நெவில் ஜயவீராவிடம் இப்படிச் சொல்லி கேட்டபோது அவர் மறுத்து விட்டார்.

பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டும் என்றால் தனிமாவட்டம் கேளுங் கள் என்றார். சிறிகாந்தாவோடு, திணைக்களத் தலைவர்கள் யாவரும் ஒத்துழைத்து ஒர் அணியாகச் செயற்பட்டனர். இதனால் இவர் பல சாதனைகளைச் செய்யக்கூடியதாக இருந்தது. அத்தகைய திறமைகள் உள்ளவர் என்பதால், கோயிற் திருப்பணிகளையுஞ் செவ்வையாகச் செய்யத்தக்கதாக இருந்தது. சேர். பொன். இராமநாதன் தான் உருவாக்கிய கல்வி நிலையங்களாக இராமநாதன் கல்லூரி, பரமேஸ்வராக் கல்லூரி விடுதி, மாணவர்களுக்கு உணவளிப்பதற்காக கிளி நொச்சியில் வசதியான இடத்தில் 1000 ஏக்கரை ஒதுக்கி, அதற்குத் தானியக் களஞ்சியம், எனப்பெயரிட் டார். அவரது சிந்தனையை மனதில் நிறுத்திச் செயற் பட்ட அரச அதிபர் சிறி காந்தா, கிளிநொச்சி மாவட் டத்தைத் தானியக்களஞ்சி யமாக உருவாக்கினார்.

பின்னர் கிளிநொச்சி மாவட்டம் உருவாக்கப் பட்டது. இங்கு பலர் கடமை யாற்றினார். அவர்களுள் அரச அதிபர் திரு.க. தேவ சிகாமணி அவர்கள் தேர்த் திருப்பணிச் சபையின்





மஹாகும்பாபிஷேக சிறப்பு மலர்

காப்பாளராக கடமையாற்றியவர். தன்னால் செய்யக் கூடியவற்றை எல்லாம் சரியாகச் செய்து உதவியவர். திரு. சி.தில்லைநடராசா மூன்றாவது திருக்குட முழுக்கு நாட்கள் அரச அதிபராக இருந்து உதவியவர். அரசாங்க அதிபர்களாகக் கடமையாற்றிய திருவாளர் கள் பொன்னம்பலமும், இராசநாயகமும் முக்கியமானவர்கள். இவர்கள் இரணைமடுக் குளநீர்ப் பங்குகள் ஒதுக்கப்படும்போது ஒரு தொகைப் பங்குகளைக் கோயிலுக்கு ஒதுக்கி, கோயில் வளர்ச்சிக்கு உதவியவர்கள். கோயில் நிர்வாகத்தினரிடையே முரண்பாடுகள் தோன்றிய போதெல்லாம் நேரடியாகக் கோயி லுக்கு வந்து கூட்டத்திற்கு தலைமைதாங்கி, இடர்பாடுகளை நீக்கிவைத்தார்கள். இதை விட முன்னர் உள்ள குறைபாடுகளுக்குக் கூட நிவாரண நடவடிக்கைகள் மேற்கொண்ட வர்கள். கோயில் வழிபாட்டில் ஈடுபடுபவர் கள் கோயில் தொடர்பாக உயரதிகாரி களோடும், சகபாடிகளோடும் உரிய முறையிற் பேசி, மாவட்டத்தில் உள்ள பெரிய கோயில் என்பதை உணர்த்தி, கோயிலின் நிலையை நிலை பெறச் செய்தவர்கள்.

**பிரதேச செயலகம்.**

தொடக்க காலம் முதல் இன்றுவரை, இவ் அலுவல கம் கோயிலுக்கு காத்திர மான பணிகளை, ஆற்றி வரு கிறது. கடந்த 50 ஆண்டுக் காலத்தில், யார் தலை வராகப் பணி புரிந்தாலும், கோயிலுக்குத் தேவையான கருமங்களில் தொடர்பு கொண்டு உதவி வழங்கும் கைங்கரியத்தைத் தொடர் ந்து செய்து வருகின்றது.

**நீர்ப்பாசனத் திணைக்களம்**

கோயில் உருவாகும் காலத்தில் உடல் உழைப்பை நல்கியவர்கள், இன்று வரை தொடர்கிறார்கள். இவர்களுடைய உடலு ழைப்பு மாத்திரம் அல்ல, ஊதியத்தில் ஒருபகுதியைத் தாராளமாக வழங்குபவர்கள், பொருட்களும் கொடுத்து கோயிற்பணி களை, மேற்கொண்டவர்கள் இத் திணைக்களத்தைச் சேர்ந்த பல்வேறு மட்டப் பணியாளர்களும் தாமாக முன்வந்து பணிபுரிகின்றனர்.

**பிரதேச சபை**

கோயில் ஆண்டுப் பெருவிழாவின் போதும், ஏனைய சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும். சுத்தஞ் செய்தல், தற்காலிக கழிப்பறை போடுதல், மேலதிக மின்சாரம் போன்ற தேவைகளுக்குத் தொடர்பு கொள்ளும்போது தலைவரானாலும் சரி, ஆணையாளரானாலும் சரி, கோயிற் பணி களை நன்கே அணுகியவர்கள், கோயிலுக்குத் தேவையான காலத்தில் தேவைக்கு ஏற்ப காலம்பிந்தாமல் பணி செய்து நிறைவேற்று வார்கள்.

**போக்குவரத்துச் சபை**

முதற்பொங்கல் நாள் முதல், விசேட சேவையை நடாத்திய இச்சபை, பின்னர் அம்பாள் நகர் சேவையை நடாத்தியது. இவற்றால் மக்கள், அம்பாளினுடைய பொங்கல், மற்றுந் திருவிழாக்களுக்குக் குறைந்த செலவில் உரிய காலத்திற்கு போக வரமுடிந்தது. முன்னர் இருந்த வீதியில் இப்போது பாலங்களும், தெருக்களும், மேம்படுத்தப்பட்டுள்ளதால் ஏற்ற போக்கு வரத்து சேவையை நடத்த முடியும். இப்போது பெருமளவு மக்கள் மீள்குடியமர்த்தப் பட்டுள்ளதால் ஏற்றபோக்குவரத்து சேவையை நடத்த முடியும். இப்போது பெருமளவு மக்கள் மீள் குடியமர்த்தப்பட்டுள்ளதால் இச்சேவை நாளாந்தம் மக்களுக்குப் பயன்படும்.





**காவற்றுறை**

இலங்கை காவற்றுறையினர் முன்னர் திருவிழா நாட்களில் அருமையான பணியை ஆற்றியுள்ளனர். காவற்றுறையினர் வருகை இருந்தால் கள்ளர் நடமாட்டம் கட்டுப் பாட்டிலிருக்கும். மக்கள் அமைதியாக வழிபாட்டில் ஈடுபட முடியும். சென்ற சித்திரைப் பொங்கல் விழா, வழமைபோல நடைபெறவில்லை. இருந்தாலும் காவற்றுறை அதிபர், ஓர் அணியை அனுப்பி, சிறந்த பணி செய்ய வைத்துள்ளார்.

**சாரணர்கள்**

சாரணர்கள் சீருடையில் தோன்று வதிலேயே அதற்கு ஒரு மதிப்பு உண்டு. அவர்கள் சிறியவர்கள், மாணவர்கள் என்ப தால் அவர்களின் மேல் அன்பும், ஆதரவும் உண்டு. இவர்கள் திருவிழா நாட்களில், பாதணிகள் பாதுகாப்பு, மக்கள் நெருக்கடி ஏற்படும் இடத்தில் சீராக்கல் களவு நடவடிக்கை களைக் கண்காணித்தல், சுத்தஞ் செய்தலில் உதவுதல் போன்ற பணிகளில் ஈடுபட்டு அரும் பணியாற்றியுள்ளனர்.

**மகாதேவா ஆச்சிரமம்**

ஜெயந்தி நகரில் உள்ள மகாதேவா ஆச்சிரமம் கோயிலோடு நெருங்கிய தொடர் புடையது. ஆண்டுப் பெருவிழாக்கள் ஏனைய விழாக்களோடு தொடர்புடையது. முன்னர் வடிவேற்சுவாமிகள் ஆச்சிரம முதல்வராக இருந்தபோதும், இப்போது கணேசானந்த மகாதேவா சுவாமிகள் உள்ளபோதும் கோயிற் கூட்டங்கள் விழாக்கள் திருக்குட நன்னீராட்டு விழாகள் எல்லாவற்றிலும் கலந்து எம்மை வழிநடத்தியுள்ளனர். மக்களின் ஆன்மிக ஈடேற்றத்திற்கு நெறிப் படுத்தியுள்ளனர்.

**திருநெறிக்கழகம்**

திருநெறிக்கழகம் கோயிற் கூட்டு வழிபாடுகளையும் பிற கோவில்களில் இருந்து அம்பாள் கோவிலை நோக்கிய நடை பஜனை களையும் தலைமை தாங்கி சிறப்பாக நடைபெற உதவி யுள்ளது. திருநெறிக்கழகம் சிவராத்திரி காலங்களில் சமய அறிவுப் போட்டிகளான உதவிகளையும் விழாக்காலங் களில் சமயக் கருத்துக்களை விதைக்கும் பணிகளையும் மேற்கொள்வது குறிப்பிடத் தக்கது.

இதில் பல தனிப்பட்ட சான்றோர் களை விபரித்துள்ளோம். இவர்கள் தமது காலத்தில் ஆற்றிய அம்பாள் பணிகளை மனதில் நிறுத்தி இப்போது உள்ளவர்கள் பணிகளைத் தொடர வேண்டும் என்பதற்காக இந்தவகையில் தனிப்பட்ட முறையில் ஆரம்பகாலத்தில் தாராளமாகக் கொடுத்த கொடைவள்ளல்கள் வீ.கே.வீரவாகு, கிளிநொச்சி கொடைவள்ளலும் சமாதான நீதிபதியுமாகிய ஆசி முருகேசு ஆர். அன். கோ.சின்னத்துரை போன்றவர்களின் நிதியுதவி போற்றுதற்குரியது.

மேலும் பாராளுமன்ற உறுப்பினர் களில் திரு. அ.சிவசுந்தரம் ஆரம்பகாலக் கணக்காய்வாளராகவும் கடமையாற்றித் தென் யாழ்ப்பாணப் பல நோக்குக் கூட்டுறவுச் சங்கத் தலைவரா கவும் இருந்து பல பணி களைப் புரிந்துள்ளார். திரு. க. பொ.இரத்தினம் பல முறை ஆலயத்தில் சமயச் சொற் பொழிவு நிகழ்த்தி உதவியுள்ளார். திரு. வீ. ஆனந்தசங்கரி இரண்டு ஆண்டுகள் தலைவராக இருந்து அரும்பணியாற்றி யுள்ளார். (முன்னாள் பாரா ளுமன்ற உறுப்பினர் திரு.மு. சிவசிதம்பரம் கோயிலின் பணிகளுக்கு பல வழிகளில் உதவி செய்துள்ளார்.

உதவி அரசாங்க அதிபர்களாக இருந்த திரு. து தெட்சணாமூர்த்தி, திரு. தி.



மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

முருகேசபிள்ளை, திரு. க.யோகானந்தன், செல்வி இந்துமதி ஆகியோர் அருந்தொண்டாற்றியுள்ளனர். இராமசேவையாளராக இருந்த திரு. க. தர்மலிங்கம், திரு. க. யோகநாதன், திருமதி சுலோஜினி குகன், திரு கோ. நாகேஸ்வரன், திரு.பொன.நித்தியானந்தன், திருமதி. சுப்பிரமணியம், திரு. சிவபுண்ணியம், திரு.செல்வரட்ணம் போன்றோர் நற்பணிகள் பல ஆற்றியுள்ளனர்.

சபையின் செயலாளர்களாக திரு.க. நாகலிங்கம், திரு.வி. சந்திரதாஸ், திரு.ந.நல்லதம்பி, திரு.நா. சோதிநாதன், திரு.சி.கு.இராசையா, திரு.மு.இராமச்சந்திரன், திரு.எஸ்.என்.செல்வராசா ஆகியோர் தமது கடமைக் காலங்களில் பணிகளைச் செவ்வனவே செய்துள்ளனர். செயலக உறுப்பினர்களாக சி. கனகசபை, மு.இராமலிங்கம், சி. மகேசன், நா.அப்புத்துரை, ந. பசுபதி, க.வ.கந்தையினார், சி. சிவக்கொழுந்து, வே. அப்புத்துரை, சி. பரமேஸ்வரன், மு. யோகலிங்கம், எஸ்.கனகலிங்கம், சி. கோபாலராசா, சி.காங்கேசு, வே. நாகேஸ் வரன், அ. சோமசுந்தரம், ந. விநாயகமூர்த்தி, ப. தணிகாசலம், நா. வில்வராசா, நி. திருக்கேதீஸ்வரன், வி.கே.பரஞ்சோதி, இ. நாகேந்திரம், செ.தில்லை நடராசா, ஆகியோர் சிறப்பான பணிசெய்துள்ளனர்.

ஒருமுறை ஆண்டுப் பொதுக் கூட்டத்தில், நிதி நிலைமை தொடர்பாகப் பிரச்சினைகள் எழுப்பட்டன. கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய அரசாங்க அதிபர், திரு. இராசநாயகம், ஒரு விசாரணைச் சபையை நியமித்து, அறிக்கை சமர்ப் பிக்கும்படி பணித்தார். அச்சபைத் தலைவர் விசாரணை நடத்தத் தொடங்கியபோது, கோவில் நிதி அறிக்கைகளைப் பார்வை யிட்டார். 25 ஆண்டுகளின் ஆய்வு செய்யப் பட்ட நிதி அறிக்கைகள் கோவையிடப்பட்டி ருப்பதைக் கண்டு பாராட்டினார். அந்த வகையில் திரு. இராசேந்திரம் வே. பரமநாதன், மு.இராமலிங்கம், மு.குணராசா என்பவர்கள் பொருளாளராகக் கடமையாற்றிப் பாராட்டும்படியான பணிகளைச் செய்துள்ளனர்.

அம்பாளுக்கு நேர்த்தி வைத்து, இப்பொட்டுத் தாலிகளையும் கட்டிக்காத்து, கிளிநொச்சியிலிருந்து முள்ளிவாய்க்கால் வரை சென்று, பாதுகாத்துப் பின்னர் வவுனியா சென்றதும் வங்கி ஒன்றில் பாதுகாப்புப் பொட்டகத்தைக் கோரிப் பெற்று, அவற்றைப் பாதுகாத்தவரான இன்றைய பொருளாளர் திரு.மு. இராமச்சந்திரனும் பாராட்டுக்குரியவர்.

மேலும் 25ஆண்டுக் காலம் செயலாளராக இருந்து, பின்னர் துணைத் தலைவராக இருந்து, இப்போது தலைவராக உள்ள திரு.எஸ்.என். செல்வராசாவும் பாராட்டுக்குரியவர். பேராசிரியர்கள் சிங்களத் தமிழ் அரசியற் தலைவர்கள் திணைக்களத் தலைவர்கள் எனப் பல கனவான்கள் வந்து அம்பாளின் அருட் கடாட்சத்தைப் பெற்றுச் செல்கின்றனர். மேலும் பல்கலைக்கழக மாணவர்கள் பலர் அம்பாளின் கோயில் பற்றி ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இவர்கள் யாவருக்கும் அம்பாளினுடைய பேரருளை வேண்டிப் பிரார்த்திக்கின்றோம்.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்"
தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி"
சுபம்
ஓம் சக்தி



## சைவச்சிறார்களின் பதிவுகள்


சிவாச்சார்யாரால் தீட்சை போதிக்கப்படல்


பரீட்சைக்குத் தோற்றிய மாணவர்கள்


அறநெறிப்பாடசாலை மாணவர்கள் தீட்சை கேட்டல்


சைவச் சிறார்கள் எண்ணெய்க்காப்புக்குக் காத்திருத்தல்

## அறநெறிப்பாடசாலை மாணவர்களின் நிகழ்வுகள்



மாணவர்களின் கலைநிகழ்வில்



அறநெறிப்பாடசாலை மாணவர்கள் ஆசிரியர்களுடன்



பரிசளிப்பு நிகழ்வில்



போட்டி முடிவுகளைப் பரீட்சித்தல்

உ
சிவமயம்

# அபிராமிப் பதிகம்

## காப்பு

திருச்சிற்றம்பலம்

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணியி லாத உடலும்
கலியாத மனமும் அன் பகலாத மனைவியும்
தவறாத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உதவிப் பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அரிதுயிலு மாயனது தங்கையே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதசீர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

திருச்சிற்றம்பலம்

# கிளிநொச்சி மாவட்டத்தின் வரலாற்றுத் தொன்மை வெளிச்சத்திற்கு வராத சில உண்மைகள்.

பண்டுதொட்டு அநுராதபுரத்திற்கு வடக்கில் அமைந்த பிரதேசம் (வடஇலங்கை) பாளி மொழியில் நாகதீப(ம்) எனவும், தமிழில், நாகநாடு எனவும் தனித்து அடையாளப் படுத்தப்பட்டு வந்துள்ளதைக் காணலாம். கி.மு. 6ஆம் நூற்றாண்டில் நாகதீப(ம்) என மஹாவம்ஸத்தில் அழைக்கப்பட்ட இப் பிராந்தியம் கி.பி. 1ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கிரேக்க நாட்டு யாத்திரிகரான தொலமியின் குறிப்பில் "நாகடிப" எனவும், யாழ்ப்பாணத்தில் வல்லிபுரத்தில் கிடைத்த கி.பி. 3ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பொற்சாசனத்தில் "நகதிவ" எனவும் அழைக்கப்படுகிறது. சற்றுப் பிற்பட்ட காலத்தில் தமிழகத்தில் தோன்றிய இருபெரும் காப்பியங்களில் ஒன்றான மணிமேகலை தமிழகத்திற்கு அப்பால் கடல்கடந்து செல்லவேண்டிய இடங்களில் ஒன்றாக இந்த நாகநாடு என்ற பிரதேசத்தைக் குறிப்பிடுகிறது. ஏறத்தாழ இதன் சமகாலத்திற்குரிய தமிழக வேலூர்ப் பாளையச் செப்பேட்டில் பல்லவ மன்னன் ஒருவன் தழிகத்திற்கு அப்பால் சென்று நாககுல பெண்ணொருத்தியை மணந்த செய்தி சொல்லப்படுகிறது. சோழர் காலத்திற்குரிய கலிங்கத்துப்பரணியில் சோழவம்சத்து கிள்ளிவளவன் நாகநாட்டு இளவரிசி ஒருத்தியை மணந்தான் எனக் குறிப்பிடப்படுகிறது. மேற்கூறப்பட்ட ஆதாரங்களையும், அவற்றோடு தொடர்புடைய வரலாற்றுச் சம்பவங்களையும் ஒப்பு நோக்கி ஆய்வு செய்த அறிஞர்கள் இவற்றில் சுட்டிக்காட்டப்படும் நாகதீபம், நாகநாடு ஆகிய இடப்பெயர்கள் அக்காலத்தில் அநுராதபுரத்திற்கு வடக்காக அமைந்த தற்கால வடஇலங்கையையே குறித்ததாக அடையாளப்படுத்தியுள்ளனர். இவ்வாறு வரலாற்று ஆவணங்களில் வட இலங்கை தனித்து அடையாளப்படுத்திக் கூறியிருப்பதற்கு அதன் சமகால அநுராதபுர, பொலநறுவை நாகரிக வட்டத்தில் இருந்து வடஇலங்கை வேறுபட்டு இருந்தமை காரணம் எனக் கருத இடமளிக்கிறது. இக்கூற்றை உறுதிப்படுத்தும் வகையில் வட இலங்கையில் மேற்கொள்ளப்பட்டு வரும் சமீபகாலத் தொல்லியல் ஆய்வுகளும் அமைந்துள்ளன. அதில் கிளிநொச்சி மாவட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வுகளையும், தொல்லியல் கண்டுபிடிப்புக்களையும் வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதே இக்கட்டுரையின் கருப்பொருளாகும்.

**இரணைமடு அகழ்வாய்வும் இலங்கையின் பூர்வீக மக்களும்**

ஆபிரிக்கா, பிரான்ஸ், ஜேர்மன், சீனா, ஜாவா என உலகில் சில நாடுகளில் மனித பரிணாமம் நிகழ்ந்ததற்கான சான்றுகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இருண்ட கண்டம் என அழைக்கப்படும் ஆபிரிக்காவில் இதன் தோற்ற காலம் இற்றைக்கு 15 இலட்சம் ஆண்டுகளுக்கு முற்





பட்டதென நம்பப்படுகிறது. ஆனால் இலங்கையில் மனிதபரிணாமம் நிகழ்ந்ததற்கான சான்றுகள் எவையும் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை. இதனால் இலங்கைக்குரிய பூர்வீக மக்கள் இன்னொரு நாட்டிலிருந்தே புலம்பெயர்ந்திருக்கவேண்டும் என நம்பப்படுகிறது. இந்த மக்கள் யார்? எங்கிருந்து வந்தார்கள்? எப்போது வந்தார்கள்? என்பன போன்ற கேள்விகளுக்கான பதில்கள் நீண்ட காலமாக வாதப்பிரதி வாதங்களுக்குரியதாகவே இருந்து வந்துள்ளன. பாளி இலக்கியங்கள் இற்றைக்கு 2600 ஆண்டளவில் வட இந்தியாவில் இருந்து வந்த மக்களே இலங்கையின் பூர்வீக மக்கள் எனவும், அவர்களே இலங்கையில் நாகரிக சமூகம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தனர் எனவும் கூறுகின்றன. ஆயினும் விஞ்ஞானபூர்வமான சமீபகாலத் தொல்லியற் கண்டு பிடிப்புக்கள் பாளி இலக்கியம் கூறும் சில கருத்துக்களை மீளாய்வு செய்யத்தூண்டியுள்ளன. அதில் ஒன்றே இலங்கையின் பூர்வீக மக்கள் பற்றிய பாரம்பரியக் கருத்தாகும். 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் வடஇலங்கையில் உள்ள மாங்குளம், முருங்கன், கிளிநொச்சி (இரணை மடு) முதலான இடங்களில் தொல்லியல் ஆய்வில் ஈடுபட்ட சரசின், செலிக்மன், வேலண்ட, போல், பர்சனர் காட்லே முதலானோர் இங்கெல்லாம் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கற்கால மக்கள் வாழ்ந்துள்ளனர் என்ற கருத்தை முன் வைத்துள்ளனர். ஆயினும் நீண்ட காலமாக இக்கருத்துக்களுக்கு இலங்கை வரலாறு பற்றிய ஆய்வில் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. இந்நிலையில் 1970களின் பின்னர் இலங்கைத் தொல்லியற் திணைக் களம் குறிப்பாக இலங்கையின் முதன்மைத் தொல்லியலாளரில் ஒருவரான கலாநிதி சிரான்தெரணியகல கிளிநொச்சி மாவட்டத்தில் உள்ள இரணைமடுப் பகுதியில் மேற்கொண்ட ஆய்வுகள் இக்கருத்துக்களுக்குப் புதுவெளிச்சத்தை ஏற்படுத்தியதெனக் கூறலாம். அவர் இங்கு மேற்கொண்ட ஆய்வுகளின் போது கிடைத்த ஆதாரங்களில் இருந்து இற்றைக்கு 125000 ஆண்டுகளுக்கு முன்னரே இப்பிராந்தியத்தில் கற்கால மக்கள் (மேலைப் பழங்கற்கால மக்கள், (Uper Palaeolithic People) வாழ்ந்துள்ளனர் என்பது தெரிய வந்துள்ளது. இம்மக்கள் நாடோடிகளாக மிருகங்களை வேட்டையாடியும், இயற்கையாகக் கிடைத்த பழங்களையும், கிழங்கு வகைகளையும், காய்கனிகளையும் உண்டு வாழ்ந்து வந்தனர் என்பதை இங்கு கிடைத்த கல்லாயுதங்கள் உறுதிசெய்கின்றன. இவ்வாதாரங்கள் இலங்கையின் முதலாவது மனித குடியிருப்பின் தொடக்கப் புள்ளியாக இரணைமுவை அடையாளப் படுத்தியதன் மூலம் கிளிநொச்சியின் வரலாற்றுத் தொன்மை வெளிச்சத்திற்கு வந்தது.

இரணைமடுவில் கற்கால மக்கள் வாழ்ந்ததற்கான சான்றுகள் கண்டு பிடிக்கப் பட்டதைத் தொடர்ந்து

தென்னிலங்கையில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளின் போது முந்துல, இரத்தினபுர ஆகிய இடங்களிலும் இதை யொத்த கற்கால மக்கள் வாழ்ந்துள்ளனர் என்பது தெரிய வந்துள்ளது. இரத்தினபுரி மாவட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ் வாய்வின் போது கற்கருவிகளுடன் மனித எலும்பின் சில பாகங்களும் கிடைத்துள்ளன. இவை கோமோ சேப்பியன் (homo Sapiens) இனவகையைச் சேர்ந்த தற்கால மனித வடிவத்தின் தொடக்க காலமாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. (Deraniyagala 2004: 4) இக்கண்டுபிடிப்புக்கள் இலங்கை பற்றிய எதிர்கால ஆய்வுகளில் கற்கால மக்களுக்கும் பிற்காலத்தில் மொழியடிப்படையில் இரு இனங்களாகத் தோன்றிய தமிழ் சிங்கள மக்களுக்கும் இடையிலான உறவுகளைத் தெரிந்துகொள்ள உதவும் என்பதில் ஐயமில்லை.



கற்கால மக்களைத் தொடர்ந்து கி.மு 37000ஆண்டளவில் தென்னிந்தியாவில் இருந்து புலம்பெயர்ந்த நுண்கற்கால (Mesolithic or MiddleStone Age) மக்கள் வாழ்ந்ததற்கான சான்றுகள் கிளிநொச்சி மாவட்டத்திலும் இலங்கையில் ஏனைய இடங்களிலும் ஏறத்தாழ 75 மையங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த மக்கள் தமிழகத்தின் தென்பகுதியில் இருந்து முதலில் வட இலங்கையில் குடியேறி இங்கிருந்தே இலங்கையின் ஏனைய பகுதிகளுக்குப் புலம்பெயர்ந்தனர் என நம்பப்படுகிறது. கிளிநொச்சியில் (பூநகரியில்) மண்டக்கல் மற்றும் மண்ணியாற்றுப் பகுதியில் 1982,1993 காலப்பகுதியில் மேற் கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வில் இப்பண்பாட்டு மக்கள் பயன்படுத்திய பலதரப்பட்ட கற்கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அண்மையில் இக்கட்டுரை ஆசிரியர் தொல்லியல் மாணவர்களுடன் இணைந்து பூநகரி கல்முனைப்பகுதியில் மேற்கொண்ட அகழ் வாய்வில் இப்பண்பாட்டு மக்கள் பயன்படுத்திய குவாட்ஸ், சேட் வகையைச் சார்ந்த கற்கருவிகளைக் கண்டுபிடிக்க முடிந்தது. இக்கருவிகள் முன்னர் இரணைமடுப் பகுதியில் வாழ்ந்த கற்கால மக்கள் பயன்படுத்திய கருவிகளைவிடக் கூடிய தொழில் நுட்பமும், கலைநயமும் பொருந்தியதுடன் ஓரளவு நாகரிகமுடைய மக்களாகவும் இங்கு இருந்துள்ளனர் என்பதையும் எடுத்துக் காட்டுகின்றன. தென்னிலங்கையில் இப்பண்பாடு பற்றி மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளில் இருந்து இவர்களிடத்தில் இறந்தவர்களை அடக்கம் செய்யும் மரபு, தானியங்களைச் சேகரிக்கும் முறை, மட்பாண்டத்தின் பயன்பாடு, குகைகள், பாறைகள் சமவெளிகள் என்பவற்றில் ஓவியங்கள், சிற்பங்கள் என்பவற்றைப் படைக்கும் முறை, நெருப்பின் பயன்பாடு என்பனவற்றை அறிந்திருந்தனர் என்பது தெரியவந்துள்ளது. இப்பண்பாட்டு வழிவந்த மக்களே தற்கால வேட இனத்தவர் எனவும் அடையாளம் காணப்பட்டுள்ளது. வட இலங்கையிலும் குறிப்பாக இம்மக்கள் வாழ்ந்த கிளிநொச்சி மாவட்டத்திலும் இதுபோன்ற விரிவான ஆய்வுகள் மேற்கொள்ளப்படுமா





னால் இப்பிரதேசத்தின் பூர்வீக மக்கள், அவர்களது பண்பாட்டு வரலாறு என்பன வெளிச்சத்திற்கு வரும் என்பதில் ஐயமில்லை.

மானிடவியல் அறிஞர்கள் இலங்கையிலும், தென்னிந்தியாவிலும் வாழ்ந்த இந்நுண்கற்கால, மக்கள் ஒரே இனவர்க்கதைச் சேர்ந்தவர்கள் எனக் குறிப்பிடுகின்றனர். தொல்லியலாளர் இலங்கையில் பயன்படுத்தப்பட்ட நுண்கற்காலக் கருவிகளுக்கும் கர்நாடகம் உட்பட தென்னிந்தியாவில் பயன்படுத்தப்பட்ட கருவிகளுக்கும் இடையே நெருங்கிய ஒற்றுமை இருப்பதாகச் சுட்டிக்காட்டுகின்றனர். அதிலும் இலங்கையில் பயன்படுத்தப்பட்ட இரு பக்க அலகுடைய நுண்கற்காலக் கல்லாயுதங்கள் தமிழகத்தில் பாம்பன் கடற்கரைக்கு அண்மையில் உள்ள தேரிக் கலாசாரத்துடன் ஒரே பிராந்தியம் எனக் கருதும் அளவிற்கு ஒற்றுமை கொண்டுள்ளதாக அல்ஜின் குறிப்பிடுகிறார். மொழியியலாளர் மொழி அடிப்படையில் இலங்கை தென்னிந்திய நுண்கற்கால மக்களிடையே நெருக்கிய ஒற்றுமை இருப்பதாகச் சுட்டிக் காட்டுகின்றனர். இவ்வொற்றுமைகளில் அடிப்படையில் இலங்கையில் வாழ்ந்த நுண்கற்கால மக்கள் தென்னிந்தியா அதிலும் குறிப்பாகத் தமிழகத்தில் உள்ள தேரி மணற்குன்றுப் பகுதியிலிருந்து புலம்பெயர்ந்து வந்தனர் எனக் கூறப்படுகிறது. கலாநிதி இந்திரபாலா வடஇலங்கை அதிலும் குறிப்பாக யாழ்ப்பாணக் குடாநாடு தமிழகத்தின் தொடக்க வாயிலாக இருப்பதால் தமிழகத்தில் இருந்து புலம் பெயர்ந்த இம்மக்கள் முதலில் யாழ்ப்பாணத் தீபகற்பத்திலேயே குடியேறியிருக்க வேண்டும் எனக் கருதுகிறார்.

இந்நுண்கற்கால மக்களைத் தொடர்ந்து கி.மு. 1000 அளவில் இலங்கை நாகரீகத்திற்கு வித்திட்ட பெருங்கற்கால திராவிட மக்கள் இலங்கையில் குடியேறி வாழ்ந்தமைக்கான




ஆதாரங்கள் ஏறத்தாள 50க்கும் மேற்பட்ட தொல்லியல் மையங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் தென்னிலங்கையில் அநுராதபுரமும், வடஇலங்கையில் கிளிநொச்சி மாவட்டத்தில் உள்ள பூநகரி மற்றும் கந்தரோடை என்பன மிகப்பெரிய பெருங்கற்காலக் குடியிருப்பு மையங்களாக அடையாளம் காணப்பட்டுள்ளன. இம்மக்கள் இறந்தவர்களுக்கு மறுபிறப்பு உண்டு என்ற நம்பிக்கையில் அவர்களுக்கு மிகப்பெரிய கற்களைப் பயன்படுத்தி ஈமச்சின்னங்களை அமைத்ததினால் இப்பண்பாடு பெருங்கற் காலப் பண்பாடு என அழைக்கப்பட்டது. ஆனால் பெரிய கற்கள் காணப்படாத இடங்களில் மிகப் பெரிய தாழிகளை அமைத்து அதற்குள் இறந்தவர்களின் உடலை அடக்கம் செய்யும் மரபு காணப்பட்டது. வடஇலங்கையில் இந்த இருவகை ஈமச்சின்னங்களும் இருந்ததற்கு ஆதாரங்கள் கிடைத்துள்ளன. இப்பெருங்கற்கால ஈமச்சின்னங்களிலும், அவர்களது குடியிருப்

புப் பகுதிகளில் கிடைத்த ஆதாரங்களின் அடிப்படையில் இப்பண்பாட்டுடன் தான் தென்னிந்தியாவைப் போல் இலங்கையிலும் நிலையான குடியிருப்புக்கள், நீர்ப்பாசன விவசாயம், இரும்பின் உபயோகம், கறுப்பு - சிவப்புநிற மட்பாண்டங்களின் (Black and Red Wares) பயன்பாடு, மந்தை வளர்ப்பு, சிறு தொழில் நுட்ப வளர்ச்சி அரசதோற்றம், நகரமயமாக் கம், சமூக உருவாக்கம் என்பன தோன்றியமை தெரியவந்துள்ளது. இதன் மூலம் இதுவரை காலமும் இலங்கையின் மனித வரலாறும், நாகரீக உருவாக்கமும் வடஇந்தியாவில் இருந்து கி.மு. 6ஆம் நூற்றாண்டில் விஜயன் தலைமையில் எற்பட்ட குடியேற்றத்துடன் தோன்றியதென்ற பாரம்பரிய கருத்து மீள்வாசிப்பிற்கு உட்படுத் தப்பட்டுள்ளது.

கிளிநொச்சி மாவட்டத்தைப் பொறுத் தவரை அங்கு நுண்கற்காலப் பண்பாட்டைத் தொடர்ந்து இப்பெருங்கற் கால மக்கள் வாழ்ந்ததற்கான பலவகைப்பட்ட சான்றுகள் இரணைமடு, வெற்றிலைக் கேணி, குஞ்சுப் பரந்தன், பூநகரி போன்ற இடங்களில் பரவலாக கிடைத்துள்ளன. அதில் இரணைமடு முக்கிய பெருங்கற்காலக் குடியிருப்பு மையமாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில் அங்கு இதுவரை முழுமையான அகழ்வாய்வு மேற்கொள் ளப்படாத நிலையிலும் இரணைமடுக் குளத்திற்குக் கிழக்காக உள்ள மேட்டு நிலப் பகுதியில் இருந்து இப்பண்பாட்டு மக்கள் வாழ்ந்ததை உறுதி செய்யும் தாழிகளின் உடைந்த பாகங்கள், கறுப்புச் சிவப்பு நிற மட்பாண்ட ஓடுகள், கழி



விரும்புகள், கல் மணிகள், சுடுமண் உருவங்கள் என்பன கிடைத்துள்ளன. இங்கு விரிவான அகழ்வாய்வுகள் நடத்தப்படுமானால் இங்கு வாழ்ந்த பெருங்கற்கால மக்களது பண் பாட்டின் பல சிறப்புக்கள் வெளிவரும் என லாம்.

இலங்கையில் பெருங்கற்கால ஈமத்தாழி சின்ன முறை காணப்பட்ட இடங்களில்



பெருங்கற்கால ஈமத்தாழி

ஒன்றாகக் கிளிநொச்சி மாவட்டத்தில் உள்ள குஞ்சுப்பரந்தன் காணப்படுகிறது. இங்குள்ள





டி 8 என்ற குடியேற்றத்திட்டத்தில் உள்ள காணி 1990 அளவில் பயிர்ச்செய்கைக்காகத் திருத்தப்பட்ட போது எதிர்பாராத வகையில் முழுமையான தாழியும் தாழியின் உடைந்த பாகங்களும் வெளிவந்தன. இது பற்றிய செய்தி அப்போதைய உதவி அரசாங்க அதிபராக இருந்த கலாநிதி. க. குணராசா அவர்களுக்குத் தெரியப்படுத்திய போது அவர் நேரில் சென்று அவற்றைப் பார்வையிட்டதுடன் அத்தாழிகள் பற்றியும் விரிவான கட்டுரையை எழுதியி ருந்தார். வடஇலங்கையில் கண்டுபிடிக் கப்பட்ட முதலாவது முழுமையான பெருங்கற் கால ஈமத்தாழி என்ற வகையில் இதற்குத் தனி முக்கியத்துவம் உண்டு. நான்கடி உயரமும், எட்டடி சுற்றுவட்டமும் கொண்ட இத்தாழி யின் விளிம்பு ஓரங்குலத் தடிப்புடையது. தாழியின் வெளிப்புறத்தில் சில அலங்காரக் கோடுகள் காணப்படுகின்றன. தாழிக்குள் மனித எலும்புக் கூட்டின் சில பாகங்களும், சாம்பல் போன்ற கரியபொருள், இரு மட் கலங்கள் என்பன காணப்பட்டன. இப் பொருட்கள் தற்போது யாழ்ப்பாணத்தில் உள்ள அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இத்தாழி காணப்பட்ட வயற்பரப்பின் ஓரங்களில் காணப்படும் உடைந்த தாழிகளையும், பலவகைப்பட்ட மட்பாண்டங்களையும் நோக்கும் போது இங்கு பொம்பரிப்புப் போன்ற பெருங்கற்கால ஈமத்தாழி மையம் இருந்திருக்கலாம் என்பது தெரிகிறது.



கிளிநொச்சி மாவட்டத்தில் பரந்த அள வில் பெருங்கற்கால குடியிருப்புக்கள் இருந்த



பிராந்தியமாகப் பூநகரி காணப்படுகிறது. 1980 களில் கலாநிதி இரகுபதியும், 1990-94, 2004-2005 காலப்பகுதியில் இக்கட்டுரை ஆசிரி யரும் இங்கு மேற்கொண்ட தொல்லியல் ஆய்வுகளின் போது கல்முனை தொட்டு நாச்சிக்குடா வரையுள்ள கடற்கரை சார்ந்த பிரதேசத்தில் நுண்கற்காலம் தொட்டு தற் காலம் வரை வாழ்ந்து வரும் மக்களது பலதரப் பட்ட பண்பாட்டுச் சான்றுகளைக் கண்டு பிடிக்க முடிந்தது. அவற்றுள் பெருங் கற்காலக் குடியிருப்புக்கள், ஈமச் சின்னங்கள் தொடர் பாகக் கிடைத்த சான்றுகள் தொடர்பாகக் கிடைத்த சான்றுகள் சிறப்பாகக் குறிப் பிடத்தக்கன. இச்சான்றுகள் இற்றைக்கு 50 ஆண்டுக ளுக்கு முன்னர் விமலாபேக் கிலே என்ற அறிஞர் கந்த ரோடை தொட்டு புத்தளத் தில் உள்ள பொம்பரிப்பு வரை தென்னிந்தியா குறிப் பாகத் தமிழகத்தை ஒத்த பெருங்கற்காலத் திராவிட



மஹாகும்பாபிஷேக சிறப்பு மலர்

மக்கள் வாழ்ந்திருக்கலாம் எனக் கூறிய கருத்தை உறுதி செய்வதாக உள்ளது.

மேற்கூறப்பட்ட கற்கால, நுண்கற்கால, பெருங்கற்காலப் பண்பாடு தொடர்பான



இரணைமடு, பூநகரி, ஈழவூர் ஆகிய இடங்களில் கிடைத்த 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட பிராமி எழுத்து

சான்றுகள் கி. மு. 6ஆம் நூற்றாண்டு வட இந்தியாவில் இருந்து மக்கள் புலம்பெயர்வு ஏற்பட முன்னரே தென்னிந்தியாவின் தென்பகுதியில் இருந்து புலம்பெயர்ந்த மக்கள் கிளிநொச்சியிலும், இலங்கையின் ஏனைய பிராந்தியங்கள் பலவற்றிலும் வாழ்ந்துள்ளனர் என்பதைக் கோடிட்டுக்காட்டுகின்றன. அந்த மக்களே கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து மொழியடிப்படையில் தமிழ் சிங்கள மக்களாக இன அடிப்படையில் வேறுபட்டனர். அதை இரணைமடுவிலும், பூநகரியிலும் கிடைத்துள்ள தொடக்க கால எழுத்துக்கள், சாசனங்கள் உறுதி செய்கின்றன. தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாட்டின் முதிர்ச்சி நிலையில் தமிழ் மொழி தோன்றியதை அப்பண்பாட்டு மட்பாண்டங்களில் பொறிக் கப்பட்டுள்ள 2300 ஆண்டுகளுக்கு முந்திய பிராமி எழுத்துக்கள் உறுதி செய்கின்றன. இதனால்தான் திராவிட மொழிகளில் முதலில் தமிழில் வளமான சங்க இலக்கியம் தோன்றக் காரணமாகும். இலங்கையிலும் இப்பண் பாட்டின் முதிர்ச்சி நிலையில் தமிழ் மொழி புழக்கத்திற்கு வந்ததை அநுராதபுரம், அம்பாந்தோட்டை, கந்தரோடை முதலான இடங்களில் கிடைத்த பிராமி எழுத்துப் பொறித்த மட்பாண்டங்கள் உறுதி செய்கின்றன. இருப்பினும் அதிக அளவில் இவ்வெழுத்துப் பொறித்த மட்பாண்டங்கள் கண்டுபிடிக் கப்பட்ட இடங்களாக இரணைமடு, பூநகரி, ஈழவூர் முதலான இடங்கள் இருப்பது இங்கு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இரணைமடுவில் மெற்கொள்ளப்பட்ட தொல்லியல் மேலாய்வின் போது குளத்தின் மேற்குக் கரைப் பகுதியில் சிதறுண்டு காணப்பட்ட மட்பாண்டங்களிடையே கி.மு. 3-2 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்துக்கள் பல கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவ்வெழுத்துக்கள் தமிழுக்கும், பிராகிருத மொழிக்கும் உரியனவாகக் காணப்படுகின்றன. இவற்றின் அடிப்படையில் இனத்தால் ஒரே இனவர்க்கத்தைச் சேர்ந்த தமிழ் சிங்கள மக்கள் மொழி வேறுபாட்டால் இரு வேறுபட்ட பண்பாடு கொண்ட இனக் குழுக்களாகத் தோன்றி வளர்ந்தனர் என்பது தெரிகிறது.

### அயல்நாட்டு உறவுகள்

கிளிநொச்சி மாவட்டத்தில் மேற் கொள்ளப்பட்ட தொல்லியல் ஆய்வில்



கிளிநொச்சி மாவட்டத்தில் கிடைத்த சங்ககால நாணயங்கள்





கிடைத்த உரோம, வட இந்திய, தென்னிந்திய, சுதேச நாணயங்கள், இந்திய, உரோம, ஐரோப்பிய, மட்பாண்டங்கள், கல்மணிகள் என்பன கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து இப்பிராந்தியம் மேற்குறிப்பிட்ட நாடுகளுடன் நெருங்கிய வணிக கலாசார உறவுகளைக் கொண்டிருந்ததை உறுதிசெய்கின்றன. அதிலும் பூநகரி வட்டாரத்தில் கிடைத்த சங்ககால சேர, சோழ, பாண்டிய நாணயங்கள் பாளி இலக்கியங்கள் கூறுவது போல் அக்காலத்தில் வட இலங்கை தமிழகத்துடன் நெருங்கிய வணிக கலாசார உறவுகளைக் கொண்டிருந்தமைக்குச் சான்றாக அமைகின்றன.

### இரணைமடுவில் இந்துப் பண்பாட்டின் தொன்மை

தமிழகத்தைப் போல் இலங்கையிலும் இந்துக் கோவில்களைக் கற்களால் அமைக்கும் மரபு கி.பி. 6ஆம் நூற்றாண்டின் பின்னரே தோற்றம் பெற்றன. இதற்கு முற்பட்ட காலத்தில் மண், மரம், சுதை கொண்டு அமைக் கப்பட்டதை கல்வெட்டுக்களும், இலக்கியங்களும் உறுதிசெய்கின்றன. இதன் தொடக்ககால ஆதாரமாக பெருங் கற்கால குடியிருப்புக்கள், ஈமச்சின்னங்



களில் கண்டுபிடிக்கப்பட்ட உருவங்கள், மட்பாண்டக் குறியீடுகள் உறுதிசெய்கின்றன. கிளிநொச்சியில் பெருமளவான சுடு மண்ணாலான ஆண் பெண் உருவங்கள், சிலைகள், சிற்பங்கள், மிருக, தாவர உருவங்கள் கிடைத்துள்ளன. இவை அக்கால வழிபாட்டுச் சின்னங்களாக நோக்கப்படுகின்றன. இரணை மடு, உருத்திரபுரம், பூநகரி முதலான இடங்களில் ஆண் பெண் உருவங் களுடன் இலிங்க வடிவில் அமைந்த பல சுடுமண் உருவங்கள் கிடைத் துள்ளன. இவற்



றை ஆய்வுசெய்த கலாநிதி சிரான்தெரணியகலா அவர்கள் இலங்கையில் தாய்த்தெய்வ வழிபாடுதொன்மை என்பதற்கு இவை சான்றாக அமைகிறது எனக்குறிப்பிடுகிறார். இங்கு கிடைத்த இலிங்க உருவங்களும், சூலம் பொறித்த மட்பாண்டங்களும் இற்றைக்கு 2300 ஆண்டுகளுக்கு முன்னரே சிவ வழிபாடு இருந்ததற்குச் சான்றாகும், இலங்கையின் வரலாறு கூறும் மகாவம்சம் இற்றைக்கு 2400 ஆண்டுகளுக்கு முன்னர் பண்டுகாபயன் காலத்தில் அநுராத புரத்தில் இருந்த இரு இந்து ஆலயங்கள் பற்றிக் கூறுகின்றது. அச்சான்றை ஆராய்ந்த பேராசிரியர் பரணவிதான அவற்றில் ஒன்று சிவன் ஆலயம் எனவும், மற்றையது பிராமணர் வாழ்ந்த இடம் எனவும் கூறியிருப்பது இங்கு நோக்கத்தக்கது.

கிளிநொச்சி மாவட்டத்தில் பொதுவாக இலங்கையில் இற்றைக்கு 2500இற்கு முன் பிருந்தே இந்துப் பண்பாடு இருந்ததற்கான சான்றுகள் காணப்

கும்பாபிஷேக சிறப்பு மலர்



பட்டாலும் ஐரோப்பியர் ஆட்சிக்கு முந்திய (கி.பி. 16க்கு முந்திய) ஆலயங்கள் பற்றி சான்றுகள் அதிகம் காணப்படவில்லை. இதற்கு போத்துக்கேயர், ஒல்லாந்தர் இந்து மதத்திற்கு எதிராகக் கடைப்பிடித்த கலை யழிவுக் கொள்கையே காரகணமாகும். ஆயினும் ஐரோப்பியர் ஆட்சிக்கு முந்திய கால ஆயுதங்கள் பற்றிய தகவல்கள் கல்வெட்டுக் கள், நாயன்மார் பாடல்கள், இலக்கியங்களில் பல ஆதாரங்கள் உண்டு. ஏன் போர்த்துக்கேய ஆசிரியரான குவைரோஸ் சுவாமிகள் கூட தனது நூலில் யாழ்ப்பாணத்தில் இருந்த 500க்கு மேற்பட்ட இந்து ஆலயங்களைக் கட்டிய தாகக் கூறு கிறார். அதை யாழ்ப்பாணக் கோட்டையில் மேற்கொள்ளப்பட்டு வரும் அகழ்வாய்வுகளும் உறுதி செய்கின்றன. ஆயினும் போர்த்துக் கேயர், ஒல்லாந்தர் ஆட்சி கிளிநொச்சி போன்ற வன்னிப் பிராந்தியத்தில் அதிக ஆதிக்கம் ஏற்படாததால் அங்கெல்லாம் புராதன ஆலயங்கள் பல இருக்க இடமுண்டு. அவற்றின் வரலாற்றை ஆராய்ந்தால் பல உண்மைகள் வெளிவரும் என்பதற்கு இக் கட்டுரை ஆசிரியர் பூநகரியில் மேற்கொண்ட ஆய்வுகள் சிறந்த உதாரணமாகும். இக்கட் டுரை ஆசிரியர் 1990-93 காலப் பகுதியில் பூநகரி மண்ணித்தலை வட்டாரத்தில் மேற் கொண்ட கள ஆய்வின் போது மண்ணில் புதையுண்ட நிலையில் அழிவடைந்த ஆலயத்தின் சிதைவுகளை அடையாளம் காணமுடிந் தது.

கோறக்கல், சுதை, சுண்ணாம்பு, செங்கட்டி கொண்டு அமைக்கப்பட்ட இவ்வாலயம் ஐந்து அடி நீள அகலத்தில் கர்ப்பக்கிரகம், அந்தராளத்தைக் கொண்டுள்ளது. மூன்று



Mannithalai (Punakari)

தளத்தில் அமைந்த இதன் விமானம் 13 அடி உயரம் கொண்டது. இதன் தேவகோட்டம், சாலை, கர்ணக்கூடு என்பன கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழக்கலைமரபிற்குரிய தென்பது தமிழ் நாட்டுக் கலை வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும்.





அண்மையில் மண்ணித்தலை ஆலயத்திற்குத் தெற்கே கௌதாரிமுனை என்ற இடத்தில் கைவிடப்பட்ட நிலையில் ஒரு ஆலயத்தின் அழிபாடுகளை அடையாளம் காணமுடிந்தது. சிறிய பற்றைக்காடுகளாலும், பனை மரங்களாலும் ஆலயத்தின் அமைப்பை



அடையாளம் காணமுடியாத நிலையில் இதை அடையாளப்படுத்திய போது ஆலயத்தை மூடிய நிலையில் பாம்புப் புற்றுகளும் ஆலயத்திற்கு உள்ளேயும், வெளியே ஆலமரங்களும், பனைமரங்களும் வளர்ந்து காணப்பட்டன. மிகுந்த பயத்துடன் இவ் வாலயத்தைத் துப்பரவு செய்து பார்த்த போது ஏறத்தாள 70 அடி நீளத்திலும், 30 அடி அகலத்திலும் அமைந்த இவ்வாலயம் கர்ப் பக்கிரகம், அந்தராளம், முன்மண்டபம், கொடித்தம்பம், துணைக்கோவில் கொண்ட ஆலயம் என்பது தெரியவந்தது. கோறக்கல், சுதை, சுண்ணாம்பு, செங்கட்டி கொண்டு அமைக்கப்பட்ட இவ்வாலயம் மண்ணித்தலைச் சிவாலயத்தை விடக் காலத்தால் பிற்பட்ட தென்பது தெரிகிறது. ஆனால் சுற்றாடலில் பல நூறு ஆண்டுகளாக மக்கள் வாழ்ந்ததற்கான சான்றுகள் காணப்பட்டபோதும் அந்த இடத்தில் பழமை வாய்ந்த ஒரு ஆலயம் கைவிடப்பட்ட நிலையிலும் அதன் தோற்றம் திராவிடக் கலைமரபுடன் காட்சியளிப்பது இவ்வாலயமும் ஐரோப்பியர் ஆட்சிக்கு முன்னர் கட்டப் பட்டிருக்கலாம் என்பதைக் கட்டியம் கூறுவ தாகஉள்ளது.

கிளிநொச்சியின் தொன்மை பற்றிய மேற் கூறப்பட்ட சான்றுகள் அப்பிராந்தியத்தின் எதிர்கால ஆய்விற்கான ஒரு தொடக்கப் புள்ளியாகும். எதிர்கால ஆய்வுகள் மேலும் பல உண்மைகளை வெளிச்சத் திற்குக் கொண்டு வரும் என நம்புகிறேன்.

பேராசிரியர் ப. புஷ்பரட்ணம்
தலைவர் - வரலாற்றுத்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

# வித்தகர் ஆக்குவாள்

அன்னைகன காம்பிகை அம்மன் அடி தொழுவார்
இன்னல் முழுதும் இயல் பழியும் - நன்மை
நிறையும் நினைப்பனவும் கைகூடும் வாழ்வில்
உறையும் அருள்சேர் ஒளி.

அன்னையின் கோயில் நண்ணி
அன்புடன் தொண்டு செய்வார்
உன்னிய எண்ணம் யாவும்
ஒருசிறு குறையும் இன்றி
கன்னலும் பாலும் தேனும்
கலந்தென இனிமை விஞ்சி
நண்ணிட நாளும் இன்பம்
நலம் பல மலிய வாழ்வார்

அம்மை பொற்பாதம் அன்புடன் ஏத்தினால்
இம்மை மறுமைகள் இரண்டினும் இன்பமே
செம்மை யாகச் செறிவுற வாழ்விலே
மும்மலம் நீங்கிட முத்தி அடைவரே.

அன்னை கனகாம்பிகையின் அருளைப் பெற்றார்
அவலங்கள் அத்தனையும் அற்றுப் போகும்
முன்னை வினைமூளாது, முதுமை மீறி
மூர்க்கமுடன் மோதாது இடை முறித்தும்
இன்னல் ஏதும் அணுகாது அனைத்தும் நன்மை
எல்லோரும் பெற்றின்பம் இனிது மேவ
என்றென்றும் ஆனந்தம் இசைய வாழ்வர்
இணையில்லா பெருமைகளும் உயர்வும் சேர்வர்.

யோகர் சுவாமிக்கு அருள்புரிந்த நாயகி
பாகமாகி இருந்து அறம் மேம்பட
தாகம் தீர்க்கின்ற தாயவள் எங்களின்
வேகம் போக்கிநல் வித்தகர் ஆக்குவாள்.

ஆக்கம்: கல்வயல் வே. குமாரசாமி



உ

# அம்பாள் வழிபாடு

ஜகன் மாதாவாகிய ஆதிபராசக்தியை முன்னைய காலத்தில் அம்பாள் என்று நாமம் இட்டு அழைத்தனர். ஆன்மாவின் இருள் அகல அம்பாள் வழிபாடு அவசியமானது. ஒளி பொருந்திய அம்பாளின் ஞானப்பார்வை நம்மேற்பட்டதும் இருள் அகன்றுவிடும். அம்பாளே லோகமாதா. அவள் முன் நாம் அனைவரும் குழந்தைகள். நமக்கு பல நன்மை களைத் தரும் பெரும் உள்ளம் அவளுக்குண்டு. தவறு செய்யும் பிள்ளையையும் மன்னித்து அவர்களைத் திருத்தி அன்புகாட்டும் தாயல்லவா. வேண்டுவார் வேண்டுவதை அளிக்கும் அன்னை அண்டிவருவோர்க்கு அருள்புரிய ஆயத்தமாக இருக்கிறாள்.

அம்பாளுக்கு மீன்களைப் போல கண்களையுடையவள் மீனாட்சி. அங்கயற் கண்ணி அவளின் பார்வையினால் எல்லா ஜீவராசிகளும் வளம் பெறுகின்றன. இறைவனின் மகாசக்தியான அம்பாளை "அழகின் கடல்" என ஆதிசங்கரர் போற்றுகின்றார். அழகே உருவான அருட்கடலான அன்னையை சௌந்தர்யவல்லி, ஆனந்த அலங்கார பூஷணி, கருணை மயமானவள் என்றெல்லாம் போற்றுவார்கள்.

அன்னை அம்பாளின் திருவடிகளைச் சரணடைந்தவர்களுக்கு அவர்கள் கேட்ட வரங்களைவிட மிக அதிகமாகவே கொடுத்துவிடுகிறாளாம். "முத்திரூபிணி" என லலிதா சகஸ்ர நாமத்தில் போற்றப்படுகிறாள். முத்திநாயகியான அம்பிகையை வழிபடும் அடியவர்கள் மரணம் பிறவி இரண்டினையும் எய்துவதில்லை. மாணிக்க மணிபோன்றும் மாதுளை மலர் போன்றும் திகழ்பவள். அம்பாள் தாய்த்தன்மை கொண்டவள் எனவேதான் சக்தியின் மந்திரங்களுள் "ஓம் ஸ்ரீ மாதா" என்னும் மந்திரம் முதன்மையாக உள்ளது. அந்த சக்தியானவள் இருக்கும் இடங்களைப் பாருங்கள். பிரம்மா தமது சக்தியை நாவிலே வைத்திருக்கிறார். திருமால் தமது சக்தியை மார்பிலே வைத்திருக்கிறார். ஆதி சிவனோ தனது சக்தியை சரிபாதி உடம்பிலேயே வைத்திருக்கிறார். இத்தகைய சக்தி எழுந்தருளும் இடங்களிலும் முதன்மை பெறுகின்றாள்.

சக்தி வழிபாடு மிகவும் தொன்மை வாய்ந்தது. வேத காலத்துக்கு முற்பட்ட சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய பண்டைய நகரங்களான மொகஞ்சதாரோ, ஹரப்பா முதலிய இடங்களில் இவ்வழிபாடு நிலவிய தென்பதற்கு அங்கு நிகழ்ந்த புதை பொருள் ஆராய்ச்சி சான்று பகர்கிறது. அம்பாள் ஒன்றே. ஆனால் அவளின் நாமங்கள் பலவாகும். மகேஸ்வரி, மனோன்மணி, பார்வதவர்த்தனி, தையல்நாயகி, இராஜராஜேஸ்வரி, வாலாம்பிகை, உமாதேவி, சிவகாம சுந்தரி, விசாலாட்சி, காளி, விஜயலட்சுமி, காயத்திரி, சாவித்திரி, சாமுண்டி இவை போன்று இன்னும் பல திருநாமங்களைப் பெற்று திருவருள் பாலிப்பாள்-

"எங்கெங்கும் காணினுஞ் சக்தியடா ஏழுகடல் அவள் வண்ணமடா" என்றும் கவிஞன் ஒருவன்

தன்னையே மறந்து பாடியுள்ளாள். உலகனைத்தையும் படைத்து உலகத்தில் ஒவ்வொரு அணுவிலும் உறைகின்ற அந்த மாபெரும் சக்தி காஞ்சியில் காமாட்சியாகவும், காசியில் விசாலாட்சியாகவும், மதுரையில் மீனாட்சியாகவும், கன்னியாகுமரியில் பகவதியாகவும் ஏன் தஞ்சையில் முத்துமாரியாகவும், திருக்கடவூரில் அபிராமியாகவும், சமயபுரத்தில் கருமாரியாகவும், முன்னேஸ்வரத்தில் வடிவாம்பிகையாகவும் நயினாதீவில் நாகபூஷணியாகவும் தெல்லிப்பழையில் துர்க்கையாகவும், கேதீச்சரத்தில் கௌரிநாயகியாகவும், கோணேச்சரத்தில் மாதுமை ாளாகவும் வீற்றிருந்து அடியார்களின் குறைகளைப் போக்கி அருள்பாலிப்பதை நாம் நன்கறிவோம்.

சக்திக்கு இரு அம்சங்கள் உள்ளன. ஒன்று வித்தியை என்னும் சிற்சக்தி மற்றது அவித்தையை என்னும் மாயாசக்தி சிற்சக்தி ஒளிமயமானது, அறிவு மயமானது. மாயாசக்தி தன்னை மறைத்து உலகை வெளிக்காட்டுவது. அதுவே எல்லாவற்றையும் உண்டாக்கும் சக்தி. உண்மையில் கடவுள் ஆணுமல்லர், பெண்ணுமல்லர் என்று தாந்திரக நூல் கூறுகின்றது. மகான சம்ஹிதை பின்வருமாறு கூறுவதைக் காணலாம். நீ சின்னப் பெண்ணுமில்லை மங்கையுமில்லை முதியவருமில்லை உண்மையில் நீ பெண்ணுமில்லை, ஆணுமில்லை, அலியுமல்ல. உன்னைக் கற்பனை செய்ய இயலாது, நீ அளவிட முடியாத ஆற்றல் இருக்கின்ற எல்லாப் பொருட்களுள்ளும் இருக்கும் மூலப்பொருள் என்கிறார்கள்.





அம்பாளின் அருள் வண்ணத்தை எவ்வாறு இயம்புவேன் சீர்காழியிலே தீர்த்தக் கேணியில் நீராடச் சென்ற தந்தையைக் காணாது அம்மையே அப்பா என்று அழுத திருஞானசம்பந்தர் என்ற குழந்தைக்கு ஞானப் பாலை அருந்தக் கொடுத்தவள்.

அம்பிகை அருள்பெற்ற வாய்பேச முடியாத மூகர் என்பவர் ஸ்ரீ பஞ்சமுக துதி என்ற நூலை இயற்றி அம்பிகையைத் துதித்தார்.

சுயஅறிவே அற்ற மூடனான காளிதாசன் என்பவனுக்கு அருள்காட்சி கொடுத்து, அகர முதல எழுத்தெல்லாம் அறிய வைத்து தன்மீது சியாமளா சாத்திரம் என்ற அரிய நூலைப் பாடவைத்தவள்.

ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் கல்கத்தாவிலுள்ள தட்சிணேஸ்வரர் கோயிலிலுள்ள பவதாரணியை தஞ்சமென்று அடைந்து, அவள் அருளில் திளைத்தார்.

வாய்பேச முடியாது இருந்த குமரகுருபர சுவாமிகளுக்கு சிறுமியாக வந்து காட்சி கொடுத்து பேசவைத்து அவர் மூலம் சகலகலா வல்லிமாலை பாடவைத்தவரும் அம்பாளே.

திருக்கடவூரில் வாழ்ந்த பட்டர் அம்பிகையைச் சரணடைந்து அமாவாசைத் தினத்தை பௌர்ணமி என்று கூறியமையால் அந்தாதி பாடி அம்பிகையின் அருள் பெற்றவர். "விழிக்கே அருளுண்டு" என்று பாடக் கேட்ட அம்பாள் தன் இடக்காது தோட்டினை வலக்கையால் வாங்கி வான வீதியில் வீசினார். இதனாலேயே அம்பிகைக்கு அபிராமிப்பட்டர் அந்தாதி மாலையைச் சூடினார்.

கும்பகர்ணனைத் தெரியாதோர் இல்லை. அதிகவரம் பெற்று நித்திரை செய்பவர். நித்தியவரம் கேட்கும் கும்ப கர்ணனின் நாவில் இருந்து நித்திரை வரமாகக் கேட்கவைத்தவரும் சக்தியேதான்.

மார்க்கண்டேயரின் வரலாற்றில் காலனுக்கு காலால் உதைத்தவர் சிவன். ஆனால், சிவன் இடக்காலால் உதைத்தே காலனுக்கே காலன் ஆனவர். இடப்பாகம் சக்தியின் பாகம் என்பது உய்த்துணரமுடியும்.

கம்பம் கொல்லையைக் காவல் காத்த கம்பனைக் கவிச்சக்கரவர்த்தியாக மாற்றியது சக்தி.

காளமேகப்புலவருக்கு சிம்மாசனம் கொடாதபோது அந்த சிம்மாசனத்தையே வளரச் செய்தது சக்தி.

சிவகாமி யாண்டாரைப் பட்டத்து யானை மூலம் மாலையிட்டு நாட்டுக்கே அதிபதியாக்கியது சக்தி.

உயிர் பிரிந்த சத்தியாவானின் உயிரை சாவித்திரி பெற்றது சக்தி வழிபாட்டினால்.

பிரிந்த நளன் தமயந்தியை மீண்டும் ஒன்று கூடவைத்தது சக்தியே. இவ்வாறு சக்தியின் அருள் வண்ணத்தை சொல்ல முடியுமா.

சாக்த தரிசனத்தில் பெண்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. பெண்களை இம்சிப்பதையும், பெண்கள் உடன்கட்டை ஏறும் வழக்கத்தையும் தடை செய்கிறது. மகா நிர்வாண தந்திரம் தனது மனைவியைக் கொடூரமாகப் பேசுபவனும், திருமணத்திற்கு முன் பெண்களது கல்வியைக் கட்டுப்படுத்துபவனும் ஒரு நாள் முழுவதும் உண்ணா நோன்பு இருக்க வேண்டுமெனக் கூறுகிறது. வேள்விகளில் பெண் மிருகங்கள் கொல்லப்படக்கூடாதென்று சாக்த தரிசனத்திற் கூறப்படுகிறது. "சிவமின்றி சக்தியில்லை, சக்தியின்றிச் சிவமில்லை" என்ற கோட்பாட்டிற்கிணங்க இந்துப் பெண்களை ஆன்களுடன் இணைத்தே போற்றி வந்தனர். சிவனை கலியாணசுந்தரமூர்த்தியாகவும் இன்னொரு படி உயர்ந்து குடும்பநிலையில் சோமஸ்கந்த மூர்த்தியாகவும் காணவிரும்பினர். இந்துமதத்தின் சகல பிரிவுகளும் ஒன்றாக மாறின. இவ்விதத்தில் சக்தி சமயமும் சைவசமயமும் இணைந்து கொண்டன. எனினும் சக்திக்கென்றே தனியான கோயில்கள் அமைக்கப்பட்டு வழிபடும் சிறப்பையும் நாம் காணமுடிகின்றது.

அம்பாள் வழிபாடு பற்றி "அருளது சக்தி ஆகும் அரன் தனக்கு" என்கிறது. சிவஞான சித்தியார் இறைவன் பார்வைபடுமுன் உமையவள் பார்வைபடுதல் வேண்டும். அதற்கு சக்தி நிபாதம் என்று பெயர். திருவருள் பதிவு என்று பொருள். சப்த கன்னிமார் வடிவச்சக்தி வழிபாடு மிகப் பழமையானது. இந்திர போகத்தை அருள்பவள் இந்திராணி, வீரத்தைத் தந்து பகைவர்களை அழிப்பவள் வராகி, இம்மை மறுமைப் பயன் களைத் தருபவள் மகேஸ்வரி, காப்பவர் வைஷ்ணவி, ஒடுக்குபவள் காளி வீரத்தைத் தருபவள் துர்க்கை. கல்வியைத் தருபவள் பிராமி. இவர்களே பழைய சக்தி வழிபாட்டின் எச்சங்கள் எனலாம்.

அம்பாள் வழிபாடு பற்றிக் கூறும்போது நவராத்திரியைக் கூறாவிட்டால் கறிக்கு உப்புப் போடாத மாதிரி அமைந்துவிடும் எனவே நவராத்திரி பற்றி சிறிதளவு சிந்திப்போம்.

சிவனுக்கே சிவராத்திரி ஒரு நாள் தான் கொண்டாடப்படுகிறது. ஆனால் சக்திக்கோ ஒன்பது நாள்கள் கொண்டாடுகிறது. இதில் பாவைக் கொலுவைப் பற்றி இன்றைய சமூகம் மறந்துவிடுகின்றது. எனவே அதனைப் பற்றி உங்களோடு சிந்திக்கின்றேன் ஒன்பது படிகள் மாதிரி உருவமைத்து உருவாக்கவேண்டும். இதன் அந்தம் மனிதன் படிப்படியாக உயர்ந்து தெய்வீக வழியை அடைய வேண்டும் என்பதைக் காட்டுகிறது.

1.ஆம் படி ஓரறிவு உயிரினம்: செடி, கொடி, புல்
2.ஆம் படி ஈரறிவு உயிரினம்: நத்தை, சங்கு
3.ஆம் படி மூவறிவு உயிரினம்: கறையான், எறும்பு
4.ஆம் படி நாவறிவு உயிரினம்; நண்டு, வண்டு
5.ஆம் படி ஐவறிவு உயிரினம்; மிருகம், பறவை
6.ஆம் படி ஆறறிவு உயிரினம்: மனிதன்
7.ஆம் படி மனிதனிலிருந்து உயர்நிலை: சித்தர்கள், ரிசிகள்
8.ஆம் படி தெய்வீக நிலை: தேவர்கள், அட்டதிக்குப் பாலகர்
9.ஆம் படி தெய்வங்கள்: பிரம்மா, விஷ்ணு, சிவன், தேவி
என்ற பொம்மைகளாக வைத்து வழிபட வேண்டும்.

இதேபோல நவராத்திரி ஒன்பது நாளும் அம்பாளுக்கு ஒவ்வொரு நைவேத்தியம் வைத்து ஒவ்வொரு அம்சமாக வழிபடவேண்டும்.

1ஆம் நாள் சாமுண்டி (கோபக்காளி) சக்கரைப்பொங்கல்
2ஆம் நாள் வராஹி (செய்வினை சூனியகாளி) தயிர்சாதம்
3ஆம் நாள் இந்திராணி (இந்திராணி சக்தி) வெண்பொங்கல்
4ஆம் நாள் வைஷ்ணவி (சங்கு சக்கரத்துடன்) எலுமிச்சை சாதம்
5ஆம் நாள் மகேஸ்வரி (மங்களமானவள்) புளியோதரை
6ஆம் நாள் கௌமாரி (ஓங்காரமானவள்) தேங்காய் சாதம்
7ஆம் நாள் மகாலட்சுமி (விஷ்ணு பத்தினி) கற்கண்டு சாதம்
8ஆம் நாள் நரசிம்ஹி (மனித வடிவம் சிந்தனை) சர்க்கரை சாதம்
9ஆம் நாள் ப்ராஷ்மி (அன்ன வாகனத்தில் இருப்பவள்) அக்கரவடசல்

இவ்வாறு நவராத்திரி காலங்களில் அம்பாள் வழிபாடு பரிணமித்து மகிடசங்காரம் செய்து வாழவைக்கும் தெய்வமாகக் காணுகின்றோம்.

எனவே "நம்பினார் கெடுவதில்லை" நான்கு மறைத் தீர்ப்பு.
அம்பிகையைச் சரணடைந்தால் அதிக வரங்கள் பெற்று வாழலாம் என்று கூறி விடை பெறுகின்றேன்.

**வைசப்புலவர் சித்தாந்த பண்டிதர் திரு.எஸ். நவரத்தினம்,**
Sp.Hindu.Tr.Ba. Dip.in..Edu., M.A
சேவைக்கால ஆலோசகர் (இந்துநாகரிகம்),
வலயக்கல்வி அலுவலம், வடமராட்சி.




# இரணைமடு திருவருள்மிகு கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில் குடமுழுக்கு அன்று

## பாடப்பெற்ற திருமுழுக்காடற்பா

நீர்வளம் சேர் மருதநிலம் நிறைந்து வாழும்
காராளர் களனியிலே செந்நெல் வாழும்
பேராறாம் இரணைமடு ; இரத்தம் காணும்
அருளாட்சி கனகாம்பிகையாள் மூர்த்தியாகும்
கார்மேகம் தனிற் கருடன் தலமும் காட்ட
கண்டோர்கள் கருணைவெள்ளக் கடலில் மூழ்க
வானோங்கு மூர்த்தி தலம் தீர்த்தமாக
வந்தமர்ந்த கனகாம்பிகைத் தாயே இரங்கிக்
கருணைபொழி குடமுழுக்கு ஆடீர் அம்மா.

வான் நின்ற பெருங்கருணை ஒளியாய் ஓங்கி
பரவிவரும் காற்றூடு ஒலியாய் வந்து
பண்ணொன்றத் தீயூடு பரவி நீரில்
பக்குவமாய்த் திருக்குடத்தில்பாங்குபெற்று
மண்ஒன்றி மூலத்தில் கர்ப்பம் எய்த
மந்திரமாய் தந்திரத்து யந்திரமாய்மகிமை சேர்த்து
கண் ஒத்த இரணைமடுப்பதியமர்ந்த
கனகாம்பிகைத் தாயே
அருள்சுரக்க குடமுழுக்கு ஆடீர் அம்மா.

உலகாண்டு சக்தியினைத் தேக்கி ஆண்டு
உருவாண்டு தண்ணளியும் தவிசும் ஆண்டு
அருளாண்டநாயகியாய் அனபர்க்காண்டு
கர ஆண்டு பல்லுயிர்கள் பாலித்தாண்டு
நாலாண்டு குடமுழுக்கு நலமாய்க் கண்டு
நாடுமடியார் குறைகள் போக்கி ஆண்டு
நலமான இரணைமடு அமர்ந்ததாயே
நவதீர்த்த குடமுழுக்கு ஆடீர் அம்மா.

அருளாட்சி காணநிற்கும் அடியார்கூட்டம்
அணையதனில் நிறைந்து நிற்கும் நீரின் தேக்கம்
தலைவாயில் கோபுரத்தின் முன்னே கூடி
தம்வசத்தை இழந்து நின்று தாயேஎன்று

நிலையாய உன் உருவம் நினைந்து உள்ளம்
நெக்குருக நின்றிருக்கும் தெய்வக்காட்சி
உமையவளே இரணைமடு பதியமர்ந்த
உத்தமியே உலகுய்யக்குடமுழுக்கு ஆடீர் அம்மா.

பெருகு வெள்ளம் கனகராயன் ஆறாய் பொங்க
கருவறையில் கனகாம்பிகைஉன் கருணைபொங்க
வான் தவத்தோன் யோகர்நெறி இனிதுபொங்க
வரும் அடியார் மனைகளிலே வளங்கள் பொங்க
சித்திரையில் உன்அருளால் அடியார் பொங்க
திருவிளக்கு நாயகி உன் திருவும் பொங்க
தற்பரையே சிவகாம சுந்தரியே உமையே அம்மா
கற்பகமே பேறுதர கருணைபொழி
குடமுழுக்கு ஆடீர் அம்மா.

உந்தனது மைந்தர்எல்லாம் உனையே போற்றி
உற்றதுணைப் பற்றுவரத் தாயே அம்மா
கற்றோரும் மற்றோரும் கனிந்து போற்றும்
கருணைப் பரிவாகமதாய் பாரிசாதம்
பரத கர மாமணியே உமையே அம்மா
மானிலத்து மாந்தர் உய்ய அபயம் நல்கும்
கிளி யேந்து நாயகியே தாயே அம்மா
கீர்த்தி பெறக் குடமுழுக்கு ஆடீர் அம்மா.

அபிராமிப்பட்டருக்கு அல்லல்தீர்க்க
அருள்மாரி பொழிந்தங்கு நிலவாய் நின்றாய்
மேவிவரும் அடியார்க்கு அமுதந்தந்து
மென்மேலும் பெருங்கருணை வெள்ளம்தந்து
போனகமாம் செந்நெல்விளை நீரும்தந்து
பேரின்பமுத்திபெற வைத்து இன்பம்
கோடி தரும் இரணைமடுகோமளமே
குடமுழுக்கு ஆடீர் அம்மா.

ஆவினமும் மேதிகமும் சூழ்ந்துவாழும்
அன்னை கனகாம்பிகைஉன் அருளேயாகும்
தேன்கவையின் மாபலா வாழைச்சோலை
சூழநெடுந் தெங்குநிறை செந்நெல் நாடு





வானுறையும் தேவர்களும் வந்து துன்னி
வரமருள இரணைமடுப் பதியமர்ந்து
கரம் குவிப்பார் இடர்களையும் களைந்தேநின்று
களிகூரக் குடமுழுக்கு ஆடீர் அம்மா.

குஞ்சரரும் குழந்தையரும் ஆட ஆடீர்
சகல தேவதேவியரும் ஆட ஆடீர்
காப்பவராம் நவகோள்கள் ஆட ஆடீர்
காவலுறு கணங்கள் எல்லாம் ஆட ஆடீர்
சீலமுடன் சிவனாரும் ஆட ஆடீர்
திருக்கோபுரத்தின் கலசங்கள் ஆட ஆடீர்
ஆத்தயரே அருள்மாரி பொழியும் தாயே
அருட்குடத்தால் குடமுழுக்கு ஆடீர் அம்மா.

பின்னிய எம்பாவவினைப் பயனால் நாங்கள்
பிரளயத்துள் சிக்குண்டு பிளைத்துவந்தோம்
அன்னையரே அலைகடலில் துரும்பே ஆனோம்
அவதியுறு சாகரத்துக்கிரையேயானோம்
துன்பதுயர் அத்தனையும் தோய்த்துவந்தோம்
தூயவளே இனங்களையும் சனங்களையும்
காயமுடன் இழந்துவந்தோம் கலக்கமுற்றோம்
இனியவளே இனிநாங்கள் இழப்பதற்கு ஏதும் இல்லை
இனி ஒருநாள் இவ்வாறு வாராவண்ணம்
இரங்கி இன்ப குடமுழுக்கு ஆடீர் அம்மா.

சீர்வாழி சிவசமயம் வாழி திருநீறும்
சீர்பெருகு பஞ்சாட் சரமும் வாழி
பார் வாழி மதிதொறும்மும் மாரி வாழி
ஆவாழி அருட்குடமுழுக்கு ஆட்டுவித்த
அந்தணரும் வாழி அருளாளர் வாழி
சீரான உன்னடியார் சிறப்பு மிகப் பெற்று வாழி
திருமுழுக்குக் கண்டோர்கள் சீர்பெற்று வாழி
காராளர்களனியொடு நீர் இரணை மடுவும் வாழி
உளமாரபணிசெய் அறங்காவலரும் வாழி
உன்னருளால் உலகனைத்தும் உயர்ந்துவாழி வாழி
சாந்தி சாந்தி சாந்தி

ஆக்கம்: திருவையூர்பிள்ளை

# தவத்திரு யோகர்சுவாமிகள்



1950 ஆம் ஆண்டுக்குப் பிற்பட்ட காலப் பகுதியில் கிளிநொச்சியிற் பல குடியேற்றங்கள் அமைக்கப்பட்டன. அக்காலப் பகுதியில் கிளிநொச்சியிற் பல கிராமங்கள் தோன்றின. கிராமங்களிற் குடியேறியவர்கள் பல கோயில்களை அமைத்துவந்தனர். அந்த வகையில் அக்காலப் பகுதியில் வாழ்ந்த ஈழத்து ஞானியான தவத்திரு யோகர்சுவாமிகளின் அருள்வாக்கினாலும், ஆலோசனையினாலும், வழிகாட்டுதலினாலும், அக்காலப் பகுதியில் வாழ்ந்த பெரியோர்கள் பலரது முயற்சியாலும், அம்பாளுக்கு இரணைமடுக்குளத்தின் இடதுகரையில் ஒரு பாலை மரத்தின்கீழ் சிறுகுடிசையால் கோயில் அமைக்கப்பட்டது. அக்கோயிலே இன்று மூர்த்தி, தலம், தீர்த்தம், விருட்சம் ஒருங்கே அமையப்பெற்ற திருவருள் மிகு இரணைமடு கனகாம்பிகை அம்பாள் பெருங்கோயில் எனப் பரிணமித்துள்ளது.

எமது அம்பாளின் கோயிலைத் தனது இறைசிந்தனையில் உருவாகக் காரணகர்த்தாவாக இருந்த தவத்திரு யோகர்சுவாமிகள் தொடர்பாக சுவாரசியமான விடயங்கள் பல உள்ளன. ஈழத்தில் ஆன்மிக சாதனைகளில் சிறந்து விளங்கிய ஞானிகளில் ஒருவரே தவத்திரு யோகர்சுவாமிகள் ஆவார்.

இலங்கையின் வடபுல யாழ்ப்பாணத்தில், மாவிட்டபுரம் எனும் விவசாயக் கிராமத்தில், அம்பலவாணருக்கும் சின்னாச்சியம்மாவுக்கும் மே மாதம் 29ஆம் திகதி 1872ஆம் ஆண்டு (தமிழ் நாட்காட்டியின்படி - ஆங்கீரச ஆண்டு வைகாசி மாதம் 18ஆம் நாள் புதன்கிழமை காலை அவிட்ட நட்சத்திரக் கடைக்கூறு நாலாம் பாதத்தில்) ஓர் சாதாரண விவசாய குடும்பத்தில் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. இக்குழந்தைக்குச் சதாசிவம் எனப் பெயரிட்டனர். சதாசிவம் 10 வயதாக இருக்கும்போது தாயார் சின்னாச்சியம்மா இறந்துவிட, தாயாரின் சகோதரி முத்துப்பிள்ளை அம்மையாரின் அரவணைப்பில் வளர்ந்து வந்தார். சிறுவயதிலேயே படிப்பிற் கெட்டிக்காரனான சதாசிவத்தின் பிரதான பொழுதுபோக்கு உயரமான மரக்கொப்புகளில் ஏறித் தனிமையில் இருப்பதுதான்.

கொழும்புத்துறையில் அந்நாளில் இருந்த கத்தோலிக்க பாதிரிமாரின் கல்வி நிறுவனமொன்றில் ஆரம்பக் கல்வியையும், பின்னர் யாழ்ப்பாணம் சம்பத்தரிசியார் கல்லூரியில் ஆங்கிலமும், தமிழும் படித்தார்.

பள்ளிப் படிப்பை முடித்ததும் இலங்கை நீர்ப்பாசனத் திணைக்களத்திற் களஞ்சியக் காப்பாளராக அரசாங்க உத்தியோகத்திற் சேர்ந்து, கிளிநொச்சி இரணைமடுக் குளத் திட்டத்திற் பணிபுரிந்தார். தம்முடைய அலுவலகக் கடமைகள் தவிர்ந்த வேளைகளில் கனிதரும் மரங்களை நட்டுக் கவனமாகப் பராமரித்து வந்தார். இவ்வாறு அவர் நட்டுப் பராமரித்த மாமரம் ஒன்று 'சுவாமிகள் மரம்' என்னும் பெயரில் இன்றும் இரணைமடு கனகாம்பிகை அம்பாள் கோயிற் சூழலில் உள்ளது. சுவாமிகள் மரமுள்ள காணியும் மற்றும் சுவாமிகள் மரமும் சிவதொண்டன் சபைக்கு உரித்தானது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 1879ஆம் ஆண்டு சுவாமி விவேகானந்தர் அவர்கள் இலங்கைக் குப் பயணமாகியிருந்தபோது அவரது இறையருட் கூட்டத்தில் மிகவும் ஆர்வமாகப் பங்கு கொண்டார். இறையருட் கூட்டத்திற் சுவாமி விவேகானந்தர் உரையாற்றியதை மிகவும் பக்தியுடனும், இறையன்புடனும் அவதானித்தார். சுவாமி விவேகானந்தர் அருளிய 'விடயம் பெரிது, நேரமோ சிறிது' என்ற வாக்கியத்தை மிகவும் இரசித்தார்.

1905ஆம் ஆண்டு நல்லூர்க் கந்தசுவாமி கோயில் தேரடியிற் செல்லப்பா சுவாமிகளைக் கண்ட மறுகணமே சதாசிவம் வாழ்க்கை திசைமாறியது. சதாசிவத்தைக் கண்டதும் செல்லப்பா சுவாமிகள் 'யாரடா நீ?' என உலுக்கி 'ஒரு பொல்லாப்பும் இல்லை' என உறுமினார். செல்லப்பா சுவாமியின் குரலிலும், பார்வைக் கூர்மையிலும் கட்டுப்பட்ட சதாசிவம், அக்கணமே வேலையை உதறி விட்டு சுவாமிகளிடம் சரணடைந்தார். செல்லப்பா சுவாமிகளின் அருட்பார்வை அவரைக் கவர்ந்திழுக்க, சதாசிவம்; செல்லப்பா சுவாமிகளின் சீடரானார்.



செல்லப்பா சுவாமிகள் மிகுந்த கண்டிப்பானவர், அவருடைய போதனை முறைகள் புதுமையானவை. ஒருமுறை தவத்திரு யோகர் சுவாமியையும் வேறொரு சீடரையும் தேரடியில் இருத்தி, தேரைக் காட்டி, 'தேரடா' (உன்னை அறிந்து கொள்) என உறுமிவிட்டு, ஊர் சுற்றக் கிளம்பி விட்டார். செல்லப்பா சுவாமி திரும்பிவந்து பார்த்த போது தவத்திரு யோகர்சுவாமி மட்டும் இன்னமும் தியானத்தில் நிலைப்பட்டு அதேயிடத்தைவிட்டு அசையாமல் இருந்தார் எனவும், 40 நாட்கள் தொடர்ந்து சுவாமிகள் இப்படி இருந்தார் எனவும் குறிப்பிடப்படுகிறது. தவத்திரு யோகர்சுவாமிக்கு ஞானம் கிட்டிய பின்பு இனிதான் உணர்த்துவதற்கு ஏதும் இல்லை எனத் தெரிந்துகொண்ட செல்லப்பா சுவாமிகள் 'ஒரு கொட்டாரத்திலே இரண்டு யானை கட்டிப் பராமரிக்க முடியாது' என்று கூறிவிட்டார். (நீ உன் வழி போ என்பதாக அர்த்தம்)

குருதீட்சை பெற்றுக் கொண்டு செல்லப்பா சுவாமியின் மிதியடிகளை வாங்கிக்கொண்டு அவரின் ஆசிர்வாதத்துடன் கொழும்புத்துறைக்குச் சென்றார். அங்கேயோர் இலுப்பை மரத்தடியில் அமர்ந்தி

ருப்பது சுவாமிகளின் வழமை. அத்துடன் யோகருக்குக் குருவைப் போன்று ஊர்சுற்றுவது பிடித்த காரியம். யோகர்சுவாமிகளின் கால்படாத தெருக்களே யாழ்ப்பாணத்தில் இல்லை என்றும் கூறலாம். வேட்டி சண்டிக் கட்டு, தோளிலே ஒரு துண்டு, எங்கும் நடைதான்.

ஞானகுரு செல்லப்பா சுவாமிகள் 1911ஆம் ஆண்டு மகாசமாதி அடைந்ததைத் தொடர்ந்து ஞானகுருவின் பரிவாரங்கள் தவத்திரு யோகர்சுவாமிகளையே நாடினார். கொழும்புத்துறையில் இவருடைய ஆதரவாளர்கள் சிறுகுடில் அமைத்துக் கொடுத்தார்கள். பின் அவ்விடத்திலேயே இருப்புக் கொண்டார். யாழ்ப்பாணத்தை விடவும் இலங்கையின் மற்றைய பகுதிகளுக்கும் சென்று அறிவொளி ஊட்டிவந்தார். வாழ்க்கையின் அனைத்து மட்டங்களிலும் இவருக்குத் தொண்டர்கள் இருந்தார்கள். ஒரு முறை இலங்கையின் மிகப் புகழ்பெற்ற அறுவை மருத்துவர் Dr. அந்தனீஸ் யாழ்ப்பாணம் பெரிய ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தார். அங்குள்ள வைத்தியர்களிடம் யோகர் சுவாமிகள் பற்றிக் கேட்டிருக்கின்றார், இவர்களும் 'அந்த சாத்திரியாரா? கொழும்புத்துறையில் ஒரு குடிசையில் இருப்பார்' என வழிகாட்டியிருக்கிறார்கள். சுவாமியை தரிசித்த பின்னர் தனது சகாக்களைச் சாடியதுடன், 'பிரபஞ்சத்துடன் நேரடி ஊடகத் தொடர்புகொண்ட ஒரு சக்தி உங்களுக்கு மத்தியில் இருந்தும் சாத்திரியார் என்று சொல்கிறீர்களே' என வருத்தப்பட்டிருக்கிறார். இவ்வைத்தியர் ஒரு சிங்களக் கத்தோலிக்கர். இந்துக்கள் மட்டுமல்லாது பௌத்த, கிறிஸ்தவ, முஸ்லீம் மத மக்களிடமும் இவருக்கு மரியாதை இருந்தது. இலங்கையிற்கார் சாதாரண பாவனைக்கு வந்த பின்னர் பல அன்பர்கள் சுவாமிகளை இலங்கை முழுவதும் அழைத்துச் சென்றனர். ஒருமுறை கண்டி பேராதனை பூங்காவுக்கு அழைத்துக்கொண்டு சென்றிருந்தார்கள். அப்போது பேராதனை பல்கலைக்கழகம் ஆரம்பிப்பது பற்றி யாரும் கனவுகூடக் காண்டிருக்கவில்லை. வெறும் மேடுபள்ளமான அவ்விடத்தில் காரை விட்டிறங்கிய யோகர்சுவாமி சொன்னாராம் 'இவ்விடத்திலை ஒரு பெரிய கல்வி நிலையம் வரப்போகுது' என்பதாக. இவ்விடத்திலேயே இப்போது இலங்கையின் முதல்தரப் பல்கலைக் கழகமான பேராதனை பல்கலைக் கழகம் அமைந்துள்ளது.

தவத்திரு யோகர்சுவாமிகளின் இயக்கம் பற்றி குறிப்பிடுவதானால் 'காற்றைப் போன்றது' - 'யாதும் சுவடுபடாமல்' என; திரு. குமாரபாரதி தனது 'யாழ்ப்பாணத்து யோகர் சுவாமிகள் சில குறிப்புக்கள்' எனும் நூலிற் குறிப்பிட்டுள்ளார். 'எப்படி வந்தார்? எங்கே போகின்றார்'- என்ற கேள்விகளுக்கு 'உனக்கேன் அது? ஒரு பூராயமும் இல்லை' என்பார், மேலும் வற்புறுத்தினால் வசை விழும்.



1934ஆம் ஆண்டு சிவ தொண்டன் என்ற பெயரில் ஒரு மாதாந்த சஞ்சிகையை ஆரம்பித்து நடாத்தினார். 1940ஆம் ஆண்டு யோகர்சுவாமி தலயாத்திரையாக இந்தியா சென்றார். காசி, சிதம்பரம் என்று பல இடங்களுக்குச் சென்றவர் ரமண மகாரிஷியை அவரது அருணாசல ஆச்சிரமத்திற் சந்தித்தார்.

மார்ச் 1964ஆம் ஆண்டு மாலை 3.30 மணியளவில் தவத்திரு யோகர்சுவாமிகள் தனது 91ஆவது வயதில் யாழ்ப்பாணம் சிவதொண்டன் நிலையத்தில் இறைதிருவடி கலந்தார்.

ஞானகுரு செல்லப்பா சுவாமிகள் ஞானம் போதிக்கும்போது அருளிய வார்த்தைகளைத் தவத்திரு யோகர்சுவாமிகள் தன் பக்தர்களுக்குத் திரும்பத் திரும்ப வலியுறுத்தினார்.

1) எப்பவோ முடிந்த காரியம்
2) நாம் அறியோம்
3) ஒரு பொல்லாப்பும் இல்லை
4) முழுதும் உண்மை

தவத்திரு யோகர்சுவாமிகள் தன்னை நாடிவந்த பக்தர்களின் மனக்குறையை நீக்கும் பொருட்டு அவர்களுக்குத் தன்னிடம் சுரந்த ஞானபானத்தைக் கீர்த்தனைகளாகவும், கவிதைகளாகவும் அவரவர் பக்குவத்துக்கு ஏற்றவாறு பாடியருளினார். இவற்றை அவரது சீடர்கள் நற்சிந்தனை எனும் நூலாக வெளியிட்டுள்ளனர்.

யோகர் சுவாமிகள் அருளிய நற்சிந்தனைகளைச் சாந்த சுவாமிகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து 'The words of our Master' எனும் தலைப்பிற் சிவதொண்டன் சபையினூடாக வெளியிட்டுள்ளனர். பின்னர் செல்லத்துரை சுவாமிகள் இதனை 'எங்கள் ஆசான் அருள் மொழிகள்' எனும் தலைப்பில் தமிழில் வெளியிட்டுள்ளார்.

தவத்திரு யோகர்சுவாமிகள் இந் நிலவுலகில் உலவிய காலத்திற் பல்லாயிரக் கணக்கான பல்சமய, பல்மொழி அடியவர்கள் அவரை அணுகத் தொடங்கினர். ஆனால் அவர்களில் சுவாமிகளின் வழியை நேர்நிலையாகப் பின்பற்றித் துறவுச்சீடராகப் பரிணமித்தவர் மூவரே எனக் குறிப்பிடப்படுகின்றது.

1) மார்கண்டு சுவாமிகள் - இவர் யாழ்ப்பாணம் கைதடியில் தென்னோலைக் கொட்டில் ஒன்றில் வாழ்ந்தவர். 29.05.1984 ஆம் திகதி சமாதியடைந்தவர்.
2) சாந்த சுவாமிகள் (James Ramsbotham) - இவர் இலங்கையின் கடைசித் தேசாதிபதி சோல்பரி பிரபுவின் மகன்.
3) செல்லத்துரை சுவாமிகள் - இவர் சுவாமிகளின் பணிப்பிற்கிணங்க சுமார் அரை நூற்றாண்டு காலம் யாழ்ப்பாணம், மட்டக்களப்பு சிவதொண்டன் நிலையங்களில் இருந்து தொண்டாற்றி 2006ஆம் ஆண்டு சமாதியானவர்.

நிறைய வார்த்தைகளை அழகாகப் பேசுவது ஆன்மீகமாகாது. அதற்காக ஞானிகளின் வாக்குகளில் கவிதை மிளிராது என்பதாகாது. வார்த்தைகளையும் மீறி மனிதனின் மனதை நேரடியாக அவனுக்கே அறியாத ஆழத்தில் தொடக்கூடியவர்கள் ஞானிகள். இவர்கள் என்ன சொன்னார்கள் என்பதை விடவும் இவர்களின் தோற்றங்களால் சமுதாயத்தில் ஏற்படும் குறுங்கால, நீண்டகால பயன்கள் முக்கியமானவை.

உசாத்துணைக்கு நன்றிகள்.

1) எங்கள் ஆசான் அருள்மொழிகள் -அ. செல்லத்துரை
2) யாழ்ப்பாணத்து யோகர் சுவாமிகள் சில குறிப்புக்கள்-சி. குமாரபாரதி
3) யோகசுவாமி மகாவாக்கிய பொருள்- நா. செல்லப்பா
4) WWW. Sivathondan.org

திரு. க. சிவகுமார், HNDA
முகாமைத்துவ உதவியாளர்,
வலயக் கல்வி அலுவலகம், கிளிநொச்சி.

உ
சிவமயம்

## இரணைமடு
## அருள்மிகு ஸ்ரீ கனகாம்பிகை அம்மன்
# வரலாற்றுப் புராணம்

**விநாயகர் துதி**

**வெண்பா**

முன்னைத் திருப்பதமே முருகண்டி மேயவனே
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளா - அன்னை
கனகாம் பிகையின் வரலாற்றுக் கோலம்
தனையே வரமாய் அருள்.

**முருகன் துதி**

வள்ளல் எனும் முருகா வள்ளி மணவாளா
பிள்ளைமதி உடையேன் பேசலுற்றேன் - அள்ளி
அருளாரமிர்தம் அகம் குளிர்ந்து சீராகத்
தருவாய்நீ என்றேன் தாழ்ந்து.

**கலைவாணி துதி**

**வேறு**

கனக மாமணிக் கன்னியின் பேரிலே
வினய மாய்க்கவி கூறிடும் ஏழையேன்
பாலன் ஆகலின் பார் தந்த தேவி நீ
சால நின்றருள் செய்வது சாலுமே.

**நூல்**

1. இசைவள்ளல் என்றுபோற்றும் இராவணேஸ் வரனுடனே
திசைஎலாம் செங்கை நீட்டும் குபேரனும் ஆண்ட நாடு
வசை படாப் புகழினோடு வண்மை அன்பு அறமே மேவி
அசைவிலாத் திருவேவைகும் அழகொளிர் இலங்கை நாடே.

2. அலைவளைத் தோடிவந்து அன்பினால் ஆரமோர
மலைவளைத் தாறுபாய மண்ணெலாம் தண்மை மேவ
சிலைவளைத் தண்டமெல்லாம் செருச்செய்யும் வீரர்தானை
தலைவளைத் தமரர் தாழும் தகவுடை இலங்கைநாடே.





3. மின்னும்இந் நாட்டின்கண்ணே மேவிடு வடகீழ்ப் பாலாய
தன் உயிர் தமிழேயாகச் சைவமும் அறமும் காத்து
பன்னரும் கீர்த்தி பொங்கப் பாரெலாம் புகழே ஓட
வன்ன மென் குணத்ததான வண்டமிழ் ஈழம் வாழும்

4. செந்நெலுடன் கன்னலும் தெங்குமா கதலிபலா
இன்னநறுங் கனிகளுடன் ஏற்றமுறு பயிரனைத்தும்
தன்னகத்தே உளதாகித் தகவுடனே பால் தேனாறு
வன்னமுடன் பாய்ந்தோடும் வானாடித் தேன்பதியே.

5. இப்பதியின் இருதயமாம் எழில் திகழும் வன்னிமண்ணின்
பொற்பதனை உரைப்பதற்குப் புலவர்யார் பிறந்திடுவார்
அற்புதமே! அற்புதமே அங்குளஓர் வளமிகுந்த
நற்பதியாம் கிளிநொச்சி நகர் மாண்பு சாற்றலாமோ.

6. மங்கையர் வயலில் நாற்றுப் பறிப்பதும் நடுவதாகப்
பங்கயத் தேனைஉண்டு வண்டுகள் வெறி கொண்டோடும்
அங்கெதிர் வரம்புதன்னில் அணிமயிற் குழாங்களாட
தெங்குகள் தோறும் பாய்ந்து மந்திகள் குதிகொண்டோடும்.

7. நொச்சியிற் கிளிக்கூட்டம் கச்சித மாயமர்ந்து
பச்சிலை கோதுகின்ற பள்ளியில் மேயதான
அச்சன் ஆகாச னோடு அமரரும் ஈண்ட வந்தே
பிச்சன் அங்காடுகின்ற பெருநடம் காண்பார் யாரே.

8. மேதிகள் சேற்றிலாட விண்ணவர் காற்றிலாட
ஆதிகண் டமைந்த சான்றோர் அருளினில் மூழ்கியாட
பாதியு முற்றுமாய பராரை தம்முளத்திலாட
வேதியர் வேள்வியாடும் வியன்பதி கிளிநொச்சிமேவி.

9. ஏற்றமும் வளமும் பொங்க எழிலெலாம் ஈந்து வாழ்வின்
ஊற்றெனப் பாயா நிற்கும் ஒப்பருங் கனகராயன்
ஆற்றினைக் கண்டார்யாரும் ஆயிரங்கோடி அண்டப்
பேற்றினைப் பெறுவார் என்னிற் பெருமையார் சாற்றபாலார்.

10. ஆவினம் ஈந்தபாலும் அந்தணர் இட்ட சந்தும்
காவிடைத் தருக்கள்சிந்து கனிதரு தேறலோடு
பூவின முகுத்ததேனும் பொந்திடை வந்த தேனும்
மேவிட வெறி கொண்டார்த்து விரையுமாம் பேரியாறே.

11. வண்ணமும் வடிவும் மாறும் மலர்க்குவை சேர்தலாலே
கண்ணமும் பொடியும் சேரச் சுவையது மாறிற்றேனும்
எண்ணமும் திசையுமாறா திரணை மடுவெனும் வாவிதன்னை
பண்ணுற வந்து தாழும் பரனருட் கங்கையேபோல்.

12. இந்நதி இருமருங்கும் இன்புற மக்கள் கூட்டம்
செந்நெலும் வளனும் தேங்கத் தேறலும் கள்ளுமாந்தி
இன்னருங் கனிகளுண்டு எங்கணும் இரியலுற்று
தன்னிலை மறந்தாராகித் தாயில்லாச் சேயதொத்தார்.

13. ஆண்டது ஐம்பத்தேழில் ஆய துன்முகி வருஷம் தன்னில்
பூண்டது கனகராயன் போர்க்கோலம் பொங்கிஆர்த்து
வாண்மனை இடங்கள் தோறும் வானமும் பூமி ஒன்றாய்
ஈண்டது குளத்தின் கட்டை இடறியே பெயர்ந்து மீறி

14. சோர்ந்தனர் மக்களெல்லாம் துன்பமே சூழ்ந்த தென்று
வேர்த்தனர் மீண்டுவந்து மிகு குளக் கட்டை நண்ணி
நேர்ந்தனர் அன்னை தாழை நேர்ந்துடன் நிமிர்ந்து நோக்கிப்
பார்த்த கண்மூடா முன்னம் பாய்ந்தொரு முனிவர் வந்தார்.

15. அன்னவர் தவத்திற்கேதோ அனர்த்தம் வந்துற்றதென்ன
பின்னவர் கோபத்தீயால் பெரும்பழி கூடலாமோ
இன்னதென் றறியாராகி ஏங்கிடு வாரைநோக்கி
மின்னல்பாய் சடைமுனிவர் மொழிந்தனர் வந்தவாறே.

16. சிவயோக சாமிதன்னைச் சேர்ந்தவர் சொல்லுகின்ற
உபதேச மொழியைக்கேட்டு உய்மின்கள் என்றுரைத்து
தவயோகி மறைந்துபோகச் சார்ந்துடன் மக்கள்இந்த
நவயோக செய்திதன்னை நவிலுவோம் என்றேஉன்னி

17. அரசாங்க அதிகரான அறமணி ஸ்ரீ காந்தாவாம்
பெருமகன் தன்னைச்சார்ந்து பேசிடும் வேளை அன்னார்
அருமைசேர் யோகர்சாமி அடி மலர்ப்போது நாடி
கருமமி தறியச்சொல்லி வேண்டினார் பணிகொண்டேக.

18. சாமியார் புன்னகையே செய்து தமருடன் குளத்துமேட்டின்
மேவிய கரை அடைந்து வியன்பதம் ஒன்று காணத்
தேவியை நினைந்தே அன்பு திக்கெலாம் பாயச்செய்ய
ஆவியை உருக்கும் அன்னை கருடனாய் வானில்வந்தே.

19. பறந்தனள் தொடர்ந்துசென்ற பக்தர்கள் காணவாங்கோர்
விறன்மிகு தருவிற்சென்று வீற்றிருந் ததனை நோக்கி
அறமகள் தனக்கு நேர்ந்த ஆலயம் கண்டோமென்று
திறன்மிகக் கொண்டே செப்பி நின்றனர் பக்தரானோர்.

20. என்றனர் எழுந்து துள்ளி ஓடினர் ஆற்றை நோக்கி
சென்றனர் நீரிலாடித் திருவடி மனதிலுன்னி
கன்றினை அணைக்கும் ஆப்போல் கனகாம்பிகா என்று கூறி
நின்றனர் நிலைமை பார்த்து நேர்ந்தனர் நிலையம்மாதோ

21. குறித்த அவ்விடத்தில் முன்பே கோயில் கொண்டருளி அம்பாள்
பொறித்திடு தடயம் கண்டு புதுமை ஈதென்று நெஞ்சைப்
பறித்திடு அழகுக் கோவில் பண்ணுற அமையுமாற்றல்
அறிந்திடு நிர்வாகம் ஒன்றை ஆக்கினர் அங்கண்ணாக

22. பவக்கரை நீந்தியாரும் பதம் பெற்றுய்வான் மிக்க
தவக்கரை மீதிலன்னை  தனிப்பெரும் கோவில் கொண்டாள்
அவக்கரை யாவும்விட்டு அன்னையின் பாதம் பற்றி
நவக்கரை கண்டார் வாழ்வர் நாநிலம் போற்ற மாதோ.

23. விகாரியாம் வருஷம் தன்னில் மேவிய ஆயிரத்து தொழாயிரத்தறுபதில்
சுகாரியாம் தேவி கோவில் துலங்கவே அத்திபாரம்
பகாரியே பணிமுனைந்து பாரெலாம் வியக்கும் வண்ணம்
மகாரியாம் அன்னை கோவில் வளர்ந்தது நாளும் நாளும்.

24. இருஅணை சேர்தலாலே இரணைமடு வென நாமம்கொண்ட
பெருவணை கோலிவைத்த பிதாமகன் பொன் இராமநாதன்
அருமனப் பாங்கு தானே அன்னையின் கருணையாலே
விருவிருவென வெழுந்ததம்மா விண் தொட நிமிர்ந்தகோவில்

25. மூல நாயகியாள் வைகும் முதற் கருவறையினோடு
சால மாமண்டபங்கள் தாங்கு நற்பிரகாரங்கள்
கோலமாமணிக் கோபுரம் இவற்றினோடு
சூலமா வைரவற்கோர் சுந்தரநிலையம் தேர்ந்து

26. ஐங்கரன் கந்தன் வாழ அணிமிகு ஆலயங்கள்
பொங்காரத் தம்பிராற்கோர் புதுமைசேர் சின்னக்கோவில்
பங்கரிலமைத்துப் பின்னும் பலிபீடம் நந்தி தம்பம்
தங்கெழில் பொங்கும் வண்ணம் படைத்தனர் நிர்வாகத்தோரே.

27. அரும்கலை விதியின் வண்ணம் அமைந்தபொற் கோவிலுக்கு
திருமறை விதியின் வண்ணம் குடமுழுக்காட்ட வேண்டி
பெருமறை அந்தணாளர் கூட்டத்தைக் கூட்டி அன்னார்
தருமுறைப்படியே செல்வக் குடமுழுக் காட்டினார்கள்.

28. மும்முறை குடமுழுக்கு முறையாகக் கண்டாள் அன்னை
அம்முறை தோறும் வானில் பறந்தொரு கருடன் வந்தே
எம்முறவான அன்னை இலங்குபொற் கோபுரத்தே
தம்சிற கனைத்துத் தாழ்ந்து பணிந்துடன் செல்லுமன்றே.

29. சித்திரைத் திங்கள் தன்னில் திருப்பொங்கல் கொண்ட தாய்க்கு
சித்திரத்தேர்கள் மூன்று ஆக்கினர் பக்தரானோர்
சித்திரத் திருத்தேரேறித் திருவுலாக் கொள்ளுமன்னை
சித்திரம் காணவன்றே பிறவியும் கூடிற்றிங்கே.

30. சித்திரைப் பருவநாளில் தீர்த்தமதாடி நோற்கும்
பக்தர்தம் பாதம் பட்டால் பழவினை ஓடிப்போகும்
முத்தியும் கையே கூடும் மும்மலம் ஒழிந்து போகும்
எத்திசை யோரும் வாழ்த்த இனியநல் வாழ்வு கிட்டும்.

31. நாளது ஒண்ணாம் தேதி நவின்றிடு சித்திரை வருஷம் தன்னில்
சூழவே வந்து மக்கள் ஆயிரம் பானை வைத்துக்
கோளது தொலையவேண்டிப் பொங்குங்கள் அன்னை முன்னே என்று
ஈழத்துச் சித்தர் சொன்னார் இதுவுமோர் புதுமை அன்றோ.

**வாழ்த்து**

வாழ்க அம்பிகை திருநாமம்
வாழ்க இரணைமடு நகர்தான்
வாழ்க பக்தர்கள் கூட்டமெலாம்
வாழ்க இந்தமா நிலமே

**முற்றும்**

**ஆக்கம்:- இதிகாசமணி சு. சோமசுந்தரம்,**
126/2, திருவையாறு.





# சக்தி வழிபாட்டின் வாழ்வியல் தத்துவம்

வாக்காலும், சிந்தனையாலும், செயலாலும், நடைமுறை வாழ்க்கையாலும், நாம் கடைப்பிடிக்க வேண்டிய வாழ்க்கை முறையை, விரிவாக விளக்கி நிற்பதே சக்தி வாழிபாடு, இதனை ஒத்த கருத்தை திருவள்ளுவரும் தம் குறளில்

"மன்உயிர் ஓம்பி அருள்ஆள்வார்க்(கு) இல்என்ப
தன்உயிர் அஞ்சும் வினை"

எனக் காண்பிக்கின்றார்.

மேலும் மனித மனத்திலுள்ள அஞ்ஞானத்தை அழித்து ஞானம் மேலோங்கச் செய்பவள் பராசக்தி இதனைப் பாரதியாரும்

"நெஞ்சிற் கவலை நிகழும் பயிராக்கி
அஞ்சி உயிர் வாழ்தல் அறியாமை - தஞ்சமென்றே
வையமெலாங் காக்கும் மகா சக்தி நல்லருளை
ஐயமறப் பற்றல் அறிவு"

எனக் கூறியுள்ளார்.

மெய்ப்பொருள் ஒன்று, சான்றோர் அதற்குப் பல பெயர்களையிட்டு அழைக்கின்றனர், என வேதம் இயம்புகின்றது. கடவுள் ஒருவர் அவர் பிரபஞ்சத்தைக் கடந்தும் இருக்கிறார். பிரபஞ்சமயமாகப் பிரபஞ்சத்தின் உள்ளும் கடவுள் இருக்கின்றார். கடந்தும் உள்ளும் இருக்கின்றமையால் கடவுள் என்று ஆகிறது. மேலும் பிரபஞ்ச சொரூபமாவும் அதற்கு அப்பாற்பட்டதாகவும் பரம்பொருள் திகழ்கிறது. அத்தகைய கடவுள், எக்காலத்தும் அழியாத சக்தியாக விளங்குவதால் அதனை மெய்ப்பொருள் எனப் பெயரிட்டு அழைக்கப்படுகிறது. மெய்ப்பொருள் எப்போதும் அறிவு சொரூபமாக விளங்குகிறது. அதனிடத்திருந்தே உலகு உயிர்கள் யாவும் உணர்வைப் பெறுகின்றன. இதற்குமேல் அப்பொருளுக்குமன்றோரு மற்றொரு இயல்பும் உண்டு. அது ஆனந்தமே வடிவெடுத்தது; தெய்வத் தத்துவத்திலுள்ள ஆனந்தமே எண்ணிறந்த உயிர்களிடத்தும் எனலாம். அறிவு வேறு, ஆனந்தம் வேறு, மெய்ப்பொருள் வேறு அல்ல. இந்த மூன்று இயல்புகளையும் ஒன்றாகக் கூட்டிவிட்டால் அது தெய்வத்தின் முடிவான கொள்கையாகிறது.

இப்பொருளுக்கு எப்பெயரை வேண்டுமானாலும் இட்டு அழைக்கலாம். இதைப் பரம்பிரம்மம் என்கிறது. வேதாந்தம். சதாசிவம் என்று சைவமதம் இதைச்சாற்றுகின்றது; மகாவிஷ்ணு என்று, வைஷ்ணவ மதம் மொழிகின்றது: பராசக்தி என்று சாக்த மதம் பகர்கின்றது: மகாகணபதி என்று காணபத்திய மதம் கூறுகிறது: முருகவேள் என்று கௌமார மதம் முரசறைகின்றது. அல்லா என்று இஸ்லாம் மதம் அழைக்கின்றது. பரலோகத்திலிக்குரும் பிதாவே என்று கிறிஸ்தவ மதம் பறைசாற்றுகின்றது: தோ என்று சீனமதம் செப்புகிறது. இவ்வாறு எல்லா மதத்திலும் தெய்வத்தின் பெயர் வெவ்வேறாக இருந்தாலும் பொருள் ஒன்றே. பலர் நினைப்பது போன்று ஒவ்வொரு மதத்திற்கும் ஒவ்வொரு தனிப்பட்ட தெய்வம் இல்லை. பொருள் ஒன்று அதற்குப் பெயர்கள் பல. எல்லா மதங்களும் தாங்கள் வழுவும் தெய்வத்தைப் பேரறிவுப் பொருள் என்றும் பரமானந்தத்தைக் கொடுக்கும் பொருள் என்றும் ஏற்றுக் கொள்கின்றனர்.

இப்பிரமம் என்னும் மெய்ப்பொருளே நிர்க்குண பிரமமாகவும் சகுண பிரமமாகவும் இருக்கின்றது. மனம் மொழிக்கெட்டாத நிலையில் அது நிர்க்குண பிரமம் எனப் பெயர் பெறுகிறது. பிரபஞ்சம் முழுவதிலும் அந்தர்யாமியாய் இருந்து தன் மகிமையெல்லாம் அது விளக்கிக் கொண்டிருக்கிறது. தூய மனது அதன் மகிமைகளைத் தெரிந்து கொள்ள வழிகாட்டுகின்றது. இந்த நிலையே சகுண பிரமம் ஆகிறது. எண்ணிறைந்த குணங்களை உடைய சகுண பிரமம் ஒவ்வொரு மதத்திலும் ஒவ்வொரு பெயர் பெற்று விளங்குகின்றது. சொரூபத்திலோ ஒவ்வொரு மதத்திற்குரிய தெய்வத்திற்கும் ஒவ்வொரு தனித்தனி வியாத்தி இருப்பது போன்று தென்படுகிறது. உதாரணமாக வானத்திலே பறந்து கொண்டிருக்கும் விமானத்திலேயிருந்து கீழே கண்ணோட்டமிட்டவாறே ஒவ்வொரு வீடுகளையும் அவதானித்தால் சில ஒற்றுமைகளையும் சில வேற்றுமைகளையும் காணலாம். ஆயினும் எவ்வகையிலும் மேற்படி அனைத்தும் வீடு என்ற வகையில் ஒத்த தன்மையானது போலவே சமயங்கள் சாற்றுகின்ற வெவ்வேறு விளக்கங்களையிட்டு ஒரு தெய்வம் பல தெய்வங்களாகிவிட முடியாது. இது சான்றோர் கண்டறிந்த உண்மையாகும்.





பக்தியில் ஈடுபடுதற் பொருட்டு ஆத்மா சாதகர்களுக்கு ஆரம்பப் படி நிலையில் அவரவர் வணங்கும் தெய்வமே மிகப் பெரியது எனப் புகட்டுவதிலும், கற்பதிலும் தவறில்லை. அவரவர் எண்ணங்களுக்கு இடங்கொடுத்து இந்துக்களின் புராணங்கள் யாவும் நமது தெய்வங்களுக்கிடையில் உயர்வு தாழ்வு உருவாக்கி பேசுகின்றன. இது முடிவான உண்மையல்ல என்பதனை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

புராணத்தில் ஒரு தெய்வத்திற்கு உயர்வு கொடுத்தும் மற்றொரு தெய்வத்திற்கு தாழ்ந்த இடம் கொடுத்தும் வெளிப்படுத்துகின்ற பகுதிகளைக் காணலாம். விஷ்ணு புராணம் மகாவிஷ்ணுவே முழுமுதற் பொருள் என்று விளம்பும் தேவி பாகபதம் ஆதிபராசக்திக்கு மேற்பட்ட தெய்வம் வேறு இல்லையெனச் சாற்றும். சிவபுராணம் சிவத்திற்கு மேல் நிற்க, செம்பொருள் இவ்வையகத்தில் இல்லை என சாற்றும். இவைகள் யாவும் இப்படியெல்லாம் பகருவதில் மிகவும் முக்கியமான உள்நோக்கம் ஒன்று உண்டு. அது யாதெனில் நமது இந்து சமயத்து ஆறு பிரிவுகளிலும் ஆழ்ந்த பக்தியுள்ள யாவரும் ஒருவரையொருவர் எப்பிரிவைத் தேர்ந்து பின்பற்றி ஒழுகினாலும் அவரவர் தம் வாழ்வில் உய்தியுற்று கடைத்தேறவும், அவர் தம் இஷ்டசித்தியையும் பெறச் செய்விப்பதே இதன் அடிப்படைத் தத்துவங்களாகும்.

வேதத்தை அங்கிகரிக்கும் சமயங்கள் ஆறையும் பெரும்பாலும் நம் நாட்டில் காணலாம். இந்த ஆறு சமயங்களுமே பொதுவாக இந்து சமயம் என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. இந்த ஆறு சமயங்கள் தோறும் வேறு வேறாக நின்று விளையாடும் மெய்ப்பொருள் ஒன்று. பரம்பொருள் உபாசகன் ஒருவன் தன் வாழ்நாள் உபாசனாமூர்த்தியாக இந்த ஆறினுள் எதை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். சமரச நோக்குடைய ஆன்ம சாதகர்கள் யாவரும் தாம் வழிபடும் தெய்வமே ஏனைய பெயர்களிலும் தோற்றங்களிலும் வெவ்வேறு சமயங்களிலும் மிளிர்கிறது என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

மற்றெல்லா மதங்களும் ஒரே பெயரிலேயே தத்தமது கடவுளை அழைக்கின்றனர். ஆனால் எல்லாப் பாங்குடனும் தெய்வத்தைத் தொழுபவர்கள் இந்துக்கள் மட்டுமே. தெய்வத்துடன் உறவாடுவதற்கு உலகில் என்னென்ன முறைகள் இருக்கின்றனவோ அவை யாவற்றையும் இந்து மதத்தில் காணலாம். கடவுளைத் தந்தை என்றும், அப்பன் என்றும், தாய் என்றும், சக்தி என்றும், அம்மை என்றும், நாயகன் என்றும், நாயகி என்றும், கருணாநிதி என்றும், தரும இலிங்கம் என்றும், அண்ணல் என்றும், பிள்ளை என்றும், தோழன் என்றும், தலைவன் என்றும், மெய்ப்பொருள் என்றும், அகிலாண்ட கோடீஸ்வரர் என்றும், அகிலாண்ட கோடி நாயகி என்றும், நிகில ஈசுவரர் என்றும், நிகில அம்பிகை எனவும், இயற்கைத்தயை ஈசுவரர் என்றும், இயற்கைத் தயை அம்பாள் என்றும் நமது இயற்கைத் தாயை, நமது இயற்கைச் சக்தி ஆளுமையை இன்னும் எண்ணற்கரிய விதங்களில் நம்மவர் அன்பு பாராட்டுகின்றனர். இத்தகைய தத்துவங்களில் நம் கடவுளைத் தாய் என்று அழைப்பது தலையாயது. ஏனெனில் தாய்க்கும் பிள்ளைக்குமிடையே உள்ள இணக்கம் ஒப்பற்றது. உலகில் வேறு எதையும் அதனோடு சீர்தூக்கிப் பார்க்க முடியாது. ஆண்டவனிடத்து அடிமையானவன் பயபக்தி கொண்டு எட்ட நிற்கின்றான். தந்தையினிடத்திலும் தனயன் மிக நெருங்கி உறவாடுவதில்லை. வயது முதிர முதிர தந்தை பிள்ளையிடத்து பல முரண்பாடுகள் உண்டாவதுண்டு. ஆனால் அன்னையின் இயல்பு எக்காலத்திலும் மாறாதது. தம் பிள்ளைகள் நன்மை செய்திடினும், தீமை செய்திடினும், உயர் தன்மை எய்திடினும், தாழ்நிலை எய்திடினும் தாயானவள் தம் பிள்ளைகளிடத்து சொரியும் அன்பு ஈடு இணையற்றது. தெய்வத்தின் அன்பு அது போன்றது. இறைவன் அன்பு வடிவினன். தங்குதடையின்றி அன்பை அளித்துக் கொண்டிருக்கும் தெய்வம் நமக்கும் தந்தை மட்டுமல்ல தாயுமானவர் என்கின்றனர் இறை அன்பை அறிகின்ற தபோதனர்கள். ஆகவே பக்திப் பிரபாகம் பெருக்கெடுக்கும்போது கடவுளைத் தாய் என்று அழைப்பது இயல்பு.

தாயின் தன்மையுடைய தெய்வத்தை வழிபடுவது மிக எளிதானது. பெற்றோரோடு பிள்ளை நெருங்கிப் பழகுவதற்கு சட்டதிட்டம் தடையில்லை. சமய சாஸ்திர விதிப்படி உபாசனை பண்ணத் தெரியாதிருப்பது பற்றி பக்தன் கவலை கொள்ளத் தேவையில்லை. குழந்தை செய்கின்ற புரளிகளைத் தாய் பொருட்படுத்துவதில்லை. தன்குழந்தை சிறுகையால் அடிப்பதும், உதைப்பதும் தாய்க்கு இன்பமூட்டுகிறது. எவ்வளவோ பரிவுடன் பெற்றவள் தன்பிள்ளையைப் பராமரிக்கின்றாள். தனது பிராணனைப் பொருட்படுத்தாது அல்லும் பகலும் அவள் சிசுவிற்குப் பணிவிடை புரிகிறாள். இது அனைத்துக்கும் காரணம் தாயும் பிள்ளையும் என்ற இணக்கப்பாடே ஆகும்.

நம் வாழ்விடையே நேரிலும் எங்கும் நிறைகடவுளைக் காண நமக்கு இயலாது இருப்பது என்பது ஏன் என்ற கேள்வியை சிலர் கேட்கின்றனர். நேர்முகத் தோற்றமுமாய், அதற்கு அப்பாலுமாய் காட்சியாய் இருப்பதும் இறைசக்தியே. ஆகவேதான் காசி விசாலாட்சி என்கின்ற பேரினாலும் அம்பிகை அழைக்கப்படுகின்றாள். கடவுளை நாம் சதா கண்டு கொண்டேதான் இருக்கின்றோம். ஆனால் நாம் கடவுளை அங்கீகரிக்கின்றோம் என்றில்லை. ஆனால் நாம்

கோணலான மனத்தைக் கொண்டு இறையைக் காண முற்படுதலாலேயே இறைதோற்றம் நம்மிடம் திரிவுபட அமைகின்றது. மேலும் பரம்பொருளில் சிவம்வேறு சக்தி வேறென்றில்லை. சிவம் என்பது மெய்ப்பொருள் முக்காலத்திலும் இது மாறாத, அழியாத தன்மையுடையது. இதனிடத்து பிரியாது நிலைத்துள்ள விபூதி அல்லது சம்பத்துக்கு சக்தி என்று பெயர்.

அண்டங்கள் அனைத்தும் சிவசக்திமயமாக இருக்கின்றன. சிவம் என்பது அறிவுப்பொருள், சக்தி என்பது ஆளுமை. இவை இரண்டும் இணைபிரியாது உலகெங்கும் இயங்குகின்றன. சக்தியின் மூலம் சிவம் ஆனந்தத் தாண்டவம் ஆடுகின்றது. நாம் வாழும் சூழலில் சிவசக்தி, லட்சுமி நாராயணன், இராதாக் கிட்டிணர், இத்தியாதி 1008, 100008 இதற்கும் மேலாக எண்ணில் உருவங்களாலும் பெயர்களாலும் அழைக்கப்படும் உருவங்கள் யாதுமற்ற பரம்பொருளே பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றன. உலக மக்கள் அனைவரும் அதன் வசமே வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். ஆனால் ஒவ்வொருவரும் தத்தமது அறிவுக் கெட்டியவரை அதனைப் பொருட்படுத்துகின்றனர்.

இனி உயிர்ப்பிராணிகளின் வாழ்வுமுறையை ஆராயுமிடத்து சக்தியின் திருவிளையாடல் விளங்கும். சகல உயிர்களுக்கும் தத்தமது இனம் சேர்ந்திருப்பது, இனம் பெருக்குவதும், இனம் காப்பதும், சத்துருவோடு சண்டை செய்வதும், சத்துருவை அழிப்பதும் சக்தியின் வாழ்க்கைத் தத்துவமே ஆகும். மானிட வர்க்கத்தினுள் இதே இயக்கம் அதிக ஆற்றலுடன் தன்னிகரற்ற அறிவுடனும் கூடியதாக இருக்கின்றது. இவ்வாழ்க்கைத் தத்துவம் கவருதல் அல்லது புறக்கணித்தல என்றோ விருப்பு அல்லது வெறுப்பு என்ற பதத்தில் திகழ்கிறது. எல்லா உயிர்களும் இனியதில் விருப்பும், கவருதல் செய்வதும், இன்னாதது வெறுப்பும் புறக்கணிப்பும் செய்வதும் முகாமையாகின்றது. வாழ்வியல் அறிவுடையோர் இவை இரண்டையும் கடத்த வேண்டும். இவையிரண்டும் வாழ்விற்கு ஆகாதது. உலகில் வைத்திருக்கும் பற்றை நீக்கிபரந்த நோக்கத்துடன் பரந்த நோக்கத்துடன் வாழ்வைப் பார்ப்பவர்களுக்கு இவ்வுண்மை புலனாகும். தேவி பராசக்தி முழுமை அன்பில் சம்பூரண நிலை அடைகிறாள். யாவருக்கும் துன்பத்தையும், மனச் சுமையையும் இல்லாதொழிக்க, அன்பு சொரிந்த இன்னுரை ஒன்றே அருமருந்தாகும். இது உலகியல் இரகசியங்களில் உண்மைக்குள் உண்மையாய் ஆனால் அதிசூட்சுமமாய் இருப்பதாலும் இதன் ஆற்றல் எளிதில் எவருக்கும் விளங்குவதில்லை.

குழந்தையைப் பெற்றபின் தாய் வேறாகவும் பிள்ளை வேறாகவும் ஆக்கிவிடுகின்றனர். ஆனால் அண்டங்களை ஈன்றிருக்கும் தாயை எக்காலத்திலும் அவைகளைவிட்டு விலகிவிடாது அவளே உலகனைத்துமாய் இருக்கிறாள். பிரபஞ்சம் யாவும் அவள் மயம் ஆதலால் இயற்கையை உள்ளவாறு நாம் அறிவது இறைவியை அறிவதாகும். பிரபஞ்ச அறிவியலில் சக்தி உண்டாக்கும் சகல காரியங்களும் நிகழ்வுகளிலும் மேலான நோக்கமுள்ளது. அப்படியாயின் போர்முனை வெற்றி தோல்வியிலும். பூகம்பம் கடற்கோல் மற்றும் பஞ்சங்களினாலும், நோய்களினாலும் உண்டாகும்



பேரிழப்புக்கள் மற்றும் அழிவுகளினாலும் ஏவி, தேவி பராசக்தி எம்மை வதைத்து, வருத்தி அழிப்பதேன்? எனக் கேள்வி எழுப்பலாம்.

சதா மாறிக்கொண்டிருப்பது பிரபஞ்ச இயக்கம். இவ் இயக்கத்தில் நமது ஆத்மாவுக்கு எக்காலத்திலும் அழிவிலும். அதுவே மோட்ச நிலை. எனவே மோட்சநிலை எட்டும்வரை வினை போகத்தை நிறைவு செய்யும் வரை எண்ணற்ற பிறவிகளில் பௌதிக உடலெடுத்தவர்கள் இயற்கை மாறுதல்களால் அல்லலுறுதலே உண்மையின் நியதி. அழிவு இல்லாத ஆக்கம் கிடையாது. பிரபஞ்சம் ஒரு அமைப்பே. மற்றொரு அமைப்பாக மாற்றும் போது அந்த பழைய அமைப்புக்கு அழிவும், புதிய அமைப்பிற்கு ஆக்கமும் உண்டாகும். இவ்வாறு புதுப்பிக்கும் தொழில் இடையறாது நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றது. கோடான கோடி உயிர்ப்பிராணிகள் நிதம் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். மாண்டவை மீண்டும் பிறந்து கொண்டேயிருக்கின்றனர். உலகமும் பூகம்பம், பிரளயம் போன்ற பல்வேறு காரணிகளால் பல்வேறு விதங்களில் மாறிக் கொண்டேயிருக்கின்றது. பழைய அமைப்பில் பற்றுடையோர் மாறுதலை விரும்புவதில்லை. இத்தகைய கொடுமைகள் வருவானேன் என்று மதி மயங்குகின்றனர். ஆனால் வையக வாழ்வில் துக்கம் கலவாத சுகமுமில்லை. மரணம் இல்லாத உயிர்களுமில்லை. மரணம் வருவது உறுதி என்றால் ஒரு நொடிப் பொழுதில் நூறுபேர் மாண்டாலென்ன? கோடிபேர் மாண்டாலென்ன? பழையன கழியப் புதியன புகுதல் போல் பழையதை விழுங்கி புதியதை வருவிப்பது இயற்கைத் தாயின் இயல்பு. இதை அறிந்து கொள்ளாதவாகள் எப்போதும் வீணே அவதிப்பட்டு அல்லலுறுகின்றனர். அழிப்பு மற்றும் தோற்றுவிப்பு மூலம் பராசக்தி மாந்தருக்குச் செய்யும் நன்மை என்னவென்றால் அவர்களுக்கு இன்பமளிப்பதும் விடுபேறு அளிப்பதுமாம். புல்லாகிப் பூடாகி பறவையாகி விலங்காகி மனிதராய் தேவராய் பல்லுயிராய் இவ்வாறு விரும்பிய பிறவிகளை எடுத்து வேண்டிய போகங்களை எல்லாம் அனுபவித்துவிட்டு முத்தியடைதலே சீவர்களின் நோக்கமாகும். இதற்கு உதவி புரிபவளே சக்தி போகத்தையும் மோட்சத்தையும் அளிப்பவள் அவள். போகம் வேண்டுமென்கிற அவா இருக்கும் வரை அதற்குப் பொருத்தமாக தொடர்ந்து பல பிறவிகளைக் கொடுக்கின்றாள். எண்ணிறைந்த பிறவிகளை எடுத்து இளைத்த பின்பு முத்திவேண்டுவோருக்கு சிவகதிக்கு வழிகாட்டுகின்றாள். ஆகவே நமது உடல் அழியும் முன்னரே நமது உடல் வாயிலாக நமது உயிர் நித்திய வாழ்வு திளைக்க தேவியிடத்து வேண்டிட வேண்டும். இவ்வாறு வேண்டியவர்க்கு வேண்டியதை வேண்டியவாறு வகுத்தளிக்கின்றமையால் அகிலாண்டங்களுக்கும் அவள் அன்னையாக விளங்குகின்றாள்.

அன்னை பராசக்தி ஆகிய நம் இயற்கைத் தாய் எங்ஙனம் விளங்குகிறது. அகில அண்டங்களிலும் வியாபித்து நிற்கும் அன்னையின் ஆட்சியை இச்சிறு கட்டுரையில் விளக்கவியலாது. ஆயினும் தூய உள்ளத்துடன் அன்புடனும் செய்வோர்க்கு தாயின் இயல்பு தெற்றெனத் தென்படும். சுருங்கச் சொல்லின் பிரபஞ்ச நடைமுறையின் அதன் உயிர் ஆன்மாக்கள் அடையும் கதி மோட்சம் அடங்கப் பெற்றிருப்பதே அன்னையின் திருவிளையாடல் ஆகும்.

ஆலயங்களில் அம்பிகையை ஸ்ரீ சக்கரத்தில் வைத்து வழிபடுவது நம் மரபு. தேவி அம்சங்களில் எங்கும் நிறைபொருளாக கருதப்படும்போது பூரணி என்றும், பராசக்தி என்றும், இராஜராஜேஸ்வரி என்றும், மகிஷா சுரவர்த்தினி, சண்டிகேஸ்வரி, சாமுண்டி, சரஸ்வதி, சாம்பவி, காமாட்சி, மீனாட்சி, பகவதி, தனலக்குமி, சுபலக்குமி, தானியலக்குமி, சந்தானலக்குமி, விஜயலக்குமி, ஜெயலக்குமி, பாக்கியலக்குமி, மகாலக்குமி என்றும் உருவமில்லா இறைவிக்கு எண்ணற்ற பெயர் கொண்டு அழைப்பதால் மூலப்பிரகிருதி என்றும் பெயர். முத்தொழிலையும் செய்யும் போது பிரம்மணி, வைஷ்ணவி, உருத்திராணி என்றும் அவள் பெயர் படைக்கின்றாள். ஈஸ்வரனுக்கு ஒப்பாகும்போது அவளுக்குத் துர்க்கை எனும் திருநாமம் வருகிறது. எல்லா உயிர்களினதும் இதயத்தில் வீற்றிருந்து அருள் பாலிப்பதால் இதயவாசினி எனவும், நீதியைப் பரிபாலிப்பவளாகையால் பார்வதி எனவும், எக்காலத்தும் பேரருள் நிறைந்த நற்காரியங்கள் யாவையும் தாமாக முன் வந்து நிறைவேற்றி வைப்பவளாகையால் கருமாரியாகவும், போற்றப்படுகிறாள்.

கால சொரூபினியாக கருதிடும்போது காலி(ளி) ஆகிறாள். வித்தையின் வடிவெடுக்கும் போது அவளுக்கு சரஸ்வதி என்றும், தனதானிய வடிவெடுக்கும் போது இலக்குமி என்றும், ஞானத்தை ஆதரிக்கும் மகாதேவியானவள் பவதாரணியாகவும் பாராட்டப் படுகின்றாள். பராசக்திக்கு அன்னியமாக காலமில்லை. அவளே கால சொரூபிணியாக பாரெங்கும் பெரும் மாறுதல்களை விளைவித்து வருகின்றாள். இயல்பிலும் நம் இயற்கையிலும் நாம் எங்கு சென்றாலும் சக்தியின் தோற்றத்தையே காண்கின்றோம். அவள் உலகனைத்துமாய் இருக்கின்றாள். மேலும் அவள் ஆடையணியாது நிர்வாணமாயிருக்கின்றாள். ஏன்? இயற்கைத் தாயை மூடிமறைப்பதற்கு ஆடையேது? பிரபஞ்சத்தின் பத்துத் திக்குகளிலும் அவளே நிறைந்திருக்கின்றாள். அதனால் அவளுக்கு திகம்பரி என்று பெயர். பத்துத் திக்குக்களையே ஆடையாக அணிந்திருப்பவள் என்பது அதன் பொருள். இயற்கைத் தாய் மறைப்பு இன்றித் தன்னை உள்ளபடி எங்கும் விளக்கிக் கொண்டிருக்கிறாள் என்று அவளது நிர்வாண நிலை பொருள்படும்.

காலசொரூபிணியின் கோலத்தை சுருக்கமாக ஆராயப் புகின் கால தேவதைக்கு இரக்கம் கிடையாது. கணம்தோறும் மக்களை கொடூரமாக மாய்க்கிறாள். உலகத்தவர் சிந்தும் கண்ணீரைப் பற்றியும், துன்பங்கள் கவலைகள் பற்றியும் காளிகை கருத்தினுள் வைக்கச் சம்மதியாள். ஓயாது அழித்தொழிப்பைச் செய்வது அவள் ஒழித்திடாள். குழந்தைகள் உட்பட தனிமக்கள் யாவரும் மாய்வார். எண்ணற்ற குடும்பங்கள் அழியும், உடைமைகளும் சூறையாடி அழிக்கப்படும். நாடும் நகரங்களும் அடிபட்டுப் போகும். இரும்பைப் போன்று அசையாத இராஜ்ஜியங்களும், இராசாக்களும், மந்திரிகளும், ஏனைய பிரதானிகளும், குடிமக்களும் இருந்த இடமும் தெரியாமல் அழித்து விடப்படுவர். எத்திசையில் திரும்பினாலும் இத்தகைய அழிவுத் தாண்டவமே தொடர்ச்சியாக நடைபெற்றுக் கொண்டிருக்கும். ஒன்றினையொன்று எடுத்து விழுங்குவது இயற்கையின் இயல்பு. இத்தகைய காட்சியை ஏற்றுக் கொள்ள மறுப்பவர் உண்மையை மறுப்பவர் ஆகிறார்.



இவ்வுலகின்கண் எப்போதுமே நன்மையும், தீமையும் இணைபிரியாது கலந்தே காணப்படுகின்றன. இன்னுமொரு விதத்தில் நன்மையைக் காட்டிலும் தீமையே மிக அதிகமாகும். இன்பம் இம்மியளவென்றால், துன்பம் சொல்லில் தொலையாதளவு உள்ளது. இந்த உலகம் நிலையற்றது, கூடவே துக்க மயமானது. மனித வர்க்கமோ இக் கூற்றை உண்மையென எளிதில் ஏற்றுக் கொள்வதில்லை. உலகியல் இயல்புடன் நித்தமும் போராடி உலகியலை வென்று பேரின்பமயமானதாக மாற்றியமைக்க முடியுமென்று பகல் கனவுடன் அல்லும் பகலும் பகீரதப் பிரயத்தனம் செய்கிறான் மனிதன். பலர் பலவேளைகளில் அவர்தம் மனச்சாட்சியை குழிதோண்டிப் புதைத்துவிட்டு மேற்கொண்டு ஆகவேண்டிய கருமத்தை தொடர்ந்து செய்கின்றனர்.

அனாதிகாலம் முதல் இன்றுவரையிற்கூட இத்தகைய முயற்சிகள் பெரும்பாலானவர்களால் தொடர்ச்சியாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றபோதிலும் அவ்வாறானவர்களே இறுதியில் பெருத்த தோல்வியையும் ஏமாற்றத்தையும் அடைவர். ஏனெனில் இது தெய்வ சங்கற்பம். இதனை "நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைக்கும்" என்ற பழமொழி ஞாபகமூட்டுகிறது. இப்பழமொழி யாவருக்கும் பொருத்தமானது. எவராலும் எக்காரணம் கொண்டும் மறுக்கவொணா இயற்கையின் நியதியாகும்.

உலகியலின் அறிவியல் கல்வி நெறிகள் பல பயில்வதும் தொழிற்றுறைகளை வளப்படுத்தி அபிவிருத்தி செய்வதும் தத்தமது வாழ்க்கைக்கு வேண்டியவைகளில் தேவைக்கு மிஞ்சிய வசதிகள் பலவற்றை அமைப்பதும், ஒரு தேசம் மற்றொரு தேசத்துடன் போர் புரிந்து இராட்சியம் நிறுவுவதும், போன்ற பல விவகாரங்கள் அனைத்துமே அவரவர் தம் துன்பத்தைத் துடைத்து இன்பத்தைப் பெருக்குதல் பொருட்டேயாம். மனிதன் இயற்கையை வென்று அபிவிருத்தியையும், முன்னேற்றத்தையும் அடைகின்ற அறிகுறி ஒரு புறம் இருக்க மறுபுறம் மனித சமுதாய துன்பங்களும் துயரங்களும் பன்மடங்கு அதிகரித்துக் கொண்டே இருக்கின்றதனை அறிவுபூர்வமாக காண முடிகின்றது. இதை எதையோயெல்லாம் வென்று சாதித்துவிட்டதாக பெருமை பேசிக்கொள்ளும் மனிதர்கள் சிலர் இன்றைய சமுதாய துன்பங்களையும் துயரங்களையும் வென்றுவிட்டதாக சொல்லத் துணிவார்களா? ஒருபோதும் துணிய முடியாது.

உலகு அனைத்தையும் ஆண்டாலும் சித்தியெல்லாம் பெற்றாலும் மனித துன்பத்திற்கு முடிவில்லை என்பதை ஞாபகமூட்டுவதற்காகவே காளிகாதேவி தனது இடது கரமொன்றில் வாளையேந்திக் கொண்டிருக்கிறாள். ஆணவத்தோடு மனிதர்கள் செய்யும் பிராயத்தனங்களையெல்லாம் அவள் காலக்கிரமத்தில் பாழ்படுத்துகிறாள். இயற்கை நடைமுறைக்கு விரோதமான மானிட பிரயத்தனம் ஒருகாலும் பலிக்காது. இருந்தும் தொடர்ந்தும் இயற்கைக்கு முரணாய் காரியம் ஆற்ற முயலும் மனிதன் இயற்கைத் தாயின் வாளுக்குப் பலியாகிறான் என்பதை அவள் மற்றொரு கையில் வெட்டிய தலையை பற்றிப் பிடித்துக் காட்டுகிறாள். ஆக ஓங்கிய வாளும் வெட்டுண்ட தலையும் தேவியின் கோரக் காட்சியை விளக்குகிறது. உலகியலில் மனிதர்களிடத்து சுய

நலப்பற்றும், பேராசையும் ஆணவத் தடிப்பும் வஞ்சகமும் புறங்கூறலும் பேதமையும் படைத்தவராயும் இருக்கும் பரிபக்குவம் இல்லாதவர்களுக்கு தாயின் இக்கலை வேதாகமாட்சியை வாழ்வில் அனுபவித்தே தீரவேண்டும்.

தொடர்ந்து நகராது தடுக்க முயல்பவன் அதன் சக்கரத்தில் அகப்பட்டு நசுங்கி அழிவான். ஆனால் நல்ல நோக்கோடு அதில் ஏறி உட்கார்ந்து கொள்பவன் தொடர்ந்து மூலம் வரும் பயன் அத்தனையையும் பெறுவான். அது போலவே இயற்கையைத் துஷ்பிரயோகப்படுத்துபவனும் அதை நல்வழியில் பயன்படுத்தாது வீணே இருப்பவர்களும் அழிவுகுள்ளாவார். இயற்கைத் தாய் தரும் நன்மைகளை நல்வழியில் பயன்படுத்துவோர்க்கு இயற்கைத் தாய் நிதமும் பரிவுடன் அபயமும் அளிகின்றாள். நல்லவர்களுக்கு மட்டும் தீங்குவரும் எனும் பயம் ஒருபோதும் கிடையாது. "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்று சாற்றும் சுதந்திரம் அத்தகைய உத்தமர்களுக்கே உண்டு. தாயின் இயல்புக்கு உகந்த குழந்தைக்கே அவள் பயத்தைப் போக்கி அபயமளிப்பது மட்டுமல்லாது செம்மையனைத்துக்கும் உறைவிடமாகிய சிவகதிக்கு வழிகாட்டுகிறாள். அதுவே அவள் அளிக்கும் வரம். எனவே அவளது வலது கரங்களில் அபயமும், வரங்களும் மிளிர்கின்றன. அவளிடத்து அமைந்திருக்கின்ற பயங்கரம், பரிவு ஆகிய இரண்டு இயல்பினுள் எவரெவர், எது, எதற்குரியவர் ஆகின்றாரோ அவரவர் அது. அதைக் கையேற்பார். இன்று உலக நடைமுறையில் நாம் காணும் காட்சி இதுவேயாம். மனிதன் அறிவற்ற சடப்பொருள் அல்ல அவன் அறிவு சொரூபி ஆயினும் பேரறிவு அவனிடத்து பொழிவதில்லை. மனித அறிவு பெரிதும் மளிங்கிக்கிடக்கிறது. ஆகவே சிற்றறிவுடையவன் என மனிதர்களை அழைப்பது முற்றிலும் பொருத்தமானது. சீவர்கள் பிரகிருதி வசப்பட்டுக் கிடக்கின்றார்கள். பராசக்தியின் கூறுபாடுகளாகிய தேகம், பிராணன், மனம், புத்தி, அகங்காரம் முதலியவை ஊடாக அம்பிகை தாண்டவம் ஆடுகிறாள். எவ்வாறாயினும் உடற்கூற்றுக்களோடு வியாபாரம் பண்ணும் மனிதன் அவைகளைத் துஸ்பிரயோகம் பண்ணுவானாயின் நிச்சயமாகவே அவனும் கேடுறுவான். எனவே அவ்வாறான கேடுகளைத் தவிப்பதற்கு வாழ்வியல் துஷ்பிரயோகங்களான எவை எவையென ஆராய்தல் நல்ல மாந்தர்க்கு நன்மை பயக்கும், அகங்காரம் அதிகரிப்பது, ஆணவம் மேலிடுவது புத்தியில் குயுக்தியும் விபரீத எண்ணங்களும் தோன்றுவதும் விநாசகாலே விபரீத புத்தி என்றாகிவிடும். மனதில் அற்ப ஆசை அல்லது பேராசை பொறாமை வெகுளி முதலிய குற்றங்கள் குடிகொள்ளுதல், அழிவுக்கு முறைதவறிய வேட்கை, தீய செயல்களில் உழல்வது இவையாவும் இயற்கைத் தாயை முறைதவறி உபயோகிக்கும் நிகழ்வுகளாகும், வாழ்க்கை நெறிமுறை வழுவுபவன் அன்னையின் கூரிய வாளினின்று தப்பித்துக் கொள்ள முடியாது. துன்பங்கள் பல துய்ப்பதுமின்றி திரும்பத் திரும்ப அவன் நரகிடர்த் துயர், மரணத்திற்கு ஆளாவான்.

எவனொருவன் இயற்கைத் தாயை நல்வழியில் உபயோகிக்கக் கற்றுக் கொள்கிறானோ அவனுக்கு வாழ்வு இன்பகரமானதாக அமையும். நாம் வாழ்வை நல்வழியில் உபயோகிப்பது என்பதை சிறிது ஆராய்வது மிக அவசியம். அகங்காரம் தேய்வது, ஆணவம் அழிப்பது, வஞ்சகம் தவிர்த்தல், கபடமற்ற புத்தி, சதா உண்மைப் பொருள் அமைந்த மேலான எண்ணங்கள் சிந்தைகள், இன்சொல் பிறருக்கு இன்னுரை, மாசற்ற மனம் யாவருக்கும் பொருத்தமான இனிய தூய உணர்ச்சிகள் அனுதாபம் சாந்தி அன்பு முதலியன செய்தல் நன்மை பயக்கும் இனிய சொற்களையும் உரைகளையும் அடக்கத்துடன் பேசுதல் புலன்கள் அடக்கப்பெற்ற சரீரத்தைக் கொண்டு சமுதாய நன்மைக்காக சேவை செய்தல் ஆகிய இவையாவும் அன்னையினின்று பெற்ற ஆற்றலை நல்வழியில் பயன்படுத்துதல் ஆகும். இவ்வாறு வாழும் உத்தம சாதகர்களுக்கே அன்னை பராசக்தி கைதூக்கி அபயமளிப்பாள். ஆதலால் அத்தகையோர் தம் வாழ்வில் கிஞ்சித்தும் பயமின்றி அன்னையின் செல்லப்பிள்ளையாக என்றென்றும் நிறைவாழ்வு வாழ்வார். அவ்வாறானோர் பரம்பொருளில் இரண்டறக் கலந்து நித்தியானந்த மயமாகின்றனர். எனவே தீயவழியில் ஈடுபடுபவரை பயமுறுத்தி மரணத்திற்கு ஆளாக்கி நல்வழிக்கு மீட்கிறாள் தேவி. மீண்டும் நல்வழிக்குத் திரும்பியவர்களுக்கு இம்மைப் பயனாகிய அபயமும், மறுமைப் பயனாகிய வரமும் அளிக்கிறாள். அனைத்து சீவர்களுக்கும் இயற்கைத் தாய் செய்யும் பெரும் அருட்பணி இதுவேயாகும். காலாந்தரத்தில் அழியும், நமது அற்பபுலைக் குடிவாழ்வை பராசக்தியின் பீடத்தில் பழியாக ஒப்படைத்து அர்ப்பணம் செய்பவர்க்கு நிலை உய்தியும், பேரானந்தப் பெருவாழ்வு வாய்க்கும். அம்பிகையை வழிபட்டு முத்திபெற்றோர் எண்ணற்றோர்.

அவ்வாறான அம்பிகை அருள் பெற்று அபிராமிப்பட்டர் பாடிய அபிராமி அந்தாதி நூறு பாடல்களில் ஒன்றான பின்வரும் ஒரு சிறு பாடல் மூலம் அம்பிகையின் அருட்திருவிளையாடல்களை நம் மனக்கண்முன்னே விரிவாக காண்பிக்கின்றேன்.

மிகையுந் துரத்தவெம் பிணியுந் துரத்தநனி
வெகுளி யானதுந் துரத்த
மிடியுந் துரத்தநரை திரையுந் துரத்தமிகு
வேதனை களுந்துரத்தப்
பகையுந் துரத்தவஞ் சனையுந் துரத்தவரு
பசியென் பதுந்துரத்தப்
பாவந் துரத்தவெகு மோகந் துரத்தஉறு
பலகாரியமுந் துரத்த
நகையுந் துரத்தவூழ் வினையுந் துரத்தவாழ்
நாளுந் துரத்த வெகுவாய்
நாவரண் டோடியே காஸ் தளர்ந்திடுமென்னை
நமனுந் துரத்த வானோர்
அகிலவுல கங்கட்கு மாதாவெ தெய்வமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

மேற்படி உண்மைகள் யாவையும் நன்கு உணர்ந்து நம் வாழ்வை கடவுள் வழிபாட்டில் செம்மையாக கடைப்பிடிப்பவர்கள் பாக்கியவான்களே யாவார். அத்தகையோர்களுக்கு எக்காலத்தும் எது விதகுறையும் இல்லை. உலகு அனைத்தையும் ஈன்ற இறைவிக்கும் தமக்கும் இடையேயுள்ள ஒற்றுமையை அறியாத மாந்தர்கள் மதிமயங்கி வருந்துகின்றனர். எல்லாம் வல்ல தேவியை வணங்கிப் போற்றுவோர்க்கு பேரின்பமும், பேராற்றலும், பேறிவும், பேரன்பும் நிலைவாழ்வும் எப்போதும் உள்ளவாறே நிறைவுற அனுபவிக்கலாம். இதுவே இயற்கையின் நியதியுமாம்.

ஓம் சக்தி

திரு. குமாரசாமி ஸ்ரீஸ்கந்தராசா
ஓய்வுபெற்ற நூலக உதவியாளர்,
பிரதேச சபை, குச்சவெளி, திருகோணமலை.

திருவருள்மிகு இரணைமடு கனகாம்பிகை அம்பாள் மீது
பாடப்பெற்ற

# கனகாம்பிகை அந்தாதி

திருச்சிற்றம்பலம்

**விநாயகர் துதி வெண்பா**

சிற்றம் பலவன் திருநோக்கால் வந்துலகில்
குற்றம் களைந்தருளும் குருமணியே - ஒற்றைக்
கொம்புடைய கோவே கோலமிகு இரணைமடு
அம்பிகையாள் அந்தாதி அருள்.

**நூல்**

01. அருள்வாய் இரணைமடு அம்பிகையே நின்பதத்தே
மருவாய் அருட்டேன் பிலிற்றிக் குலவிடவே
வருவாய் உயிராய் அந்தாதி சாத்த அருள்
தருவாய் கனகமணி துலங்கும் தயாபரியே.

02. பரியே பரனுடனே பாற்கட லோன் நாற்றிசையோன்
சுரிகுழலே நின்பணிதான் சோராது ஆற்றிநின்று
திரிபுரையே! சுந்தரியே சிவநாம வல்லிஎன்று
விரிபுகழே சூட்டுகின்ற மெல்லியலே கனகாம்பிகையே.

03. அம்பிகையே இரணைமடு அலைஅடித்து ஆர்ப்பரித்து
எம்பி எழுந்துவந்து என்றும் துதிசெய்யத்
தும்பிக்கை யோனுடன் சுப்பிரமணிய சுவாமியும்தான்
நம்பித் தொழுதிடுவார் நர்த்தகியே நின் அடியே.

04. அடியே சதமென்று அண்டமுள தேவரெல்லாம்
குடியே இரணைமடு எனக்கிடப்பர் கோமளமே
துடியோ டனலேந்தி மகிடனுடல் சோரிகக்க
அடியே பெயர்த்திட்ட ஆனந்தவல்லி அம்மே!





05. அம்மே நின்பாதம் அகத்தடக்கிப் புலனொடுக்கிச்
செம்மாந்திருந்தார் சிவனும் திருவளர்வ
இம்மாநிலத்தில் எய்தாத பேறுண்டோ
பொய்மாயம் போயகலப் பூம்பதமும் வாய்த்திடுமே.

06. வாய்த்திடுமே அம்மம்மா வாழ்வும் செழித்தோங்கிப்
பூத்துக்குலுங்கிக் காய்த்துக் கனிந்திடுமே
தோய்த்த திருமுலையால் தோகைநீ சுட்டகுறி
காய்த்த சிவநெஞ்சைக் கனிவித்த கற்பகமே.

07. கற்பகப்பூம் பாவைநீகலைமுழுதும் படைத்தவள்நீ
சிற்பரனாம் ஈசனுடன் திருநடனம் செய்பவள்நீ
அற்புதமாய் இரணைமடுப் பதியமர்ந்து ஆட்சிசெய்யும்
தற்பரையே நின்பாதம் சேவிப்பார் சோபிப்பாரே.

08. சோபிப்பார் எண்ணரிய தொண்டரெலாம் கூடிவந்து
சேவிப்பார் நின்அரிய திருப்பாத கமலமலர்
ஆகிப்பார் அனல்புனல்காற் றாகாய மூடே
தாவிப்போய் பேரருளின் ஒளிகண்டு வாழுவரே.

09. வாழ்த்திவர வானோர்கள் நாற்புறமும் மலர்கமலை
தாழ்த்த மதுகரமுரலும் இரணைமடுக் கொள்ளிடத்தே
சூழ்த்த வருமுழவோர்கள் சோறளிக்க உலகமெலாம்
பூத்தருள்வாழ் கனகாம்பிகையாம் பொற்கொடியே.

10. கொடியே அடிபரவு நல்லடியார்கள் குடியான
படியே இரணைமடு எனப்புலவர் போற்றிசெய்ய
முடியே தரைசாய்த்து முப்புரம் எரித்ததிரு
அடியே சரணம் எனக்கிடந்தார் அண்டரன்றே.

11. அன்றோ அடியார்நாம் ஆனந்த ஞானகுணக்
குன்றே புராந்தகியே புராரி புகழுமலைக்
கன்றே பரமசுகம் ஈயும் கனகாம்பிகையே
இன்றே திருவருள் செய்து எமையாளல் கடனுனக்கே.

12. உனக்கே மனம் வைத்தோம் ஒய்யாரி ரீங்காரி, ஓம்காரி
புனற்பேரியா றேடும் இரணைமடுப் பதிவாழ்வே
தனப்பேறே, மனப்பேறே மற்றுமுள தத்துவமோ
அனமே அரியதென நின்றிலையே நின்னவற்கே

13. நின்அடிக்கே மனம் வைத்தால் நிகரிலா நிதிபடைத்து
மன்னவரேஆகிவாழும் முறை தனக்கு
அன்ன வாகனது அச்சுதனோ டிந்திரனும்
பன்னகா பரனும் பார்த்திருந்த சாட்சிஅம்மே!

14. அம்மையே ஆதிசிவன் ஆகத் தமர்ந்தவளே
செம்மையே இரணைமடுப்பதியே சங்கரியே
மும்மைசேர் வல்வினைகள்போயகல வேஅருளி
எம்மையே புரந்தருள்வாய் இரைணமடுமேய கண்மணியே.

15. மணிவிளங்கு நல்ஒளியே மரகதம்போல் வயல்வெளிகள்
அணிவிளங்க வற்றிருக்கும் அம்பிகையே ஆதிசக்தி
பணிவிளங்கப் பாவலர்கள் நாவலர்கள் போற்றிசெய்யும்
திணிவிளங்கு திருவீதி வலம் செய்வார் தேறுவரே!

16. தேறுவார் சிவயோக சாமிவலம் செய்தபதி
ஏறுவார்துயர் போக்கு இனியபதி இளநிலவுக்
கீறுவார் சடைநிமலன் கிடந்துபணி செய்கின்ற
ஆறுவார் கனகராயன் அம்பிகையின் திருப்பதியே.

17. பதியே வலம்வந்து பணிசெய்ய நாடோறும்
விதியே எனக்கிடந்த வெவ்வினைகள் போயகலும்
கதியே எமக்கருளிக் காத்திடுவாள் கனகராயன்
நதியே வலம்செய்ய நர்த்தமிடும் சுந்தரியே.

18. அந்தரி வந்தருள் தந்திடு மம்பிகை சுழலுமண்ட
பந்தரி நீலி, கபாலி, வராகி, சூலி, பராரி
அந்தரி நீஎன ஆயிரம் நாமங்கள் சொல்வார் வினை
வந்தரி கின்ற வல்லபையே கனகாம்பிகை மேவிய பூவிழியே!





19. விழியே தனம் எமக்கு விளங்கவரு மானந்த
வழியே அருள்செய்து மனவூஞ்சல் தனிலிவர்ந்து
களியே பெருக நடம் ஆடுகின்ற கனகாம்பிகை நின்
அளியே பெரும்பேறு அளித்தது பேரற்புதமே.

20. அற்புதமே அரிஅயனார் அறியாத ஆங்காரி
முப்புரத்தை எரித்ததுவும் முதுகாட்டி லாடியதும்
தம்பிதம்செய் காமனுடல் தணலாக நீறியதும்
சிற்பரனார் செய்தவெலாம் தேவியுந்தன் திருநோக்கே.

21. நோக்கே பெருகிவர நோய்நொடியோ டிருவினையும்
போக்கே இலாத இடம் போய்மாய்ந்து வெந்திடுமே
நாக்கே நினது புகழ் நாளும் நவிலுகின்ற
வாக்கே அருளுகவே வளரிமவான் பொற்கொடியே!

22. பொற்கொடியே கொற்றவையே புனிதமிகு இரணைமடு
விற்கொடி சேர்அனந்தனுடல் நீறுசெய்த வித்தகியே
சிற்பரையே சிவனுடனே திருநடம்செய் திருக்கடவூர்
தற்பரைதன் மலரடியே சரண்எமக்கு அரணாமே.

23. அரன்மிகுந்த முப்புரத்தை எரித்தாய் அரனுடனே
முரண்மிகுந்த கடவூரின் முதுகாட்டி லாடலுற்றாய்
வரமிகுந்த மகிஷனுடல் வெட்டிவதம் செய்தவளே
சரணடைந்தோர் வல்வினையைச் சங்கரிப்பாய் சங்கரியே.

24. சங்கரி சாம்பவி சாந்தினி கோபினி சங்கரனார்
பங்குறை பாங்கினி, பாமினி, மோகினி பக்தி செய்வோர்
தங்குறை மாற்றிடு தாயகி நாயகி தாதவிழும்
பொங்கிதழ் நோக்கினள் வேல்விழி ஈந்திடும் வானகமே!

25. வான்படையும் கான்படையு மாலயனோடிந்திர
கோன்படையும் ஊன்படையும் வந்தெம்மைக் கூடிடுமேவ
தேன்படையும் வேற்படையும் சிவனையே வென்றுவிட்ட
மீன்படையும் வந்தெம்முன்னாக நிற்கவே.

மஹாகும்பாபிஷேக சிறப்பு மலர்

26. நிற்கவே கமல மலர்த்திருப் பாதம்தம் நெஞ்சில்
கற்கவே கனகாம்பிகைதன் திருப்புகழே எந்நாளும்
இற்கவே பழவினைகள் ஈறிலாப் பிறவியொடு
அற்கவே அம்மாநின் அடிமலரில் வீழ்வார்க்கே.

27. வீழ்வார் துயர் தீர்ப்பாய் வென்றிமிகு இரைணமடு
வாழ்வான பதியதனை வலம்வந்தே நின்அடியில்
தாழ்வான வைபோக்கித் தக்கதெலாம் தேக்கி
ஊழ்வினையைக் கட்டறுக்கும் ஒய்யாரி அம்பிகையே.

28. அம்பிகையே ஐயனுக்கு அரவ மணிமாலை
கொம்பனையே பூட்டிவிட்டுக் குறிஇரண்டு போட்டபின்னும்
பங்குறையும் பங்கைவிட்டுப் பரனை அபகரித்த
சிங்க மாருதமேநின் தீரம்தான் செப்பரிதே.

29. அரியதொன்றுளதோ அன்னே! ஆணவமலத்தைப் போக்கி
உரியநற்பாதமீது உவப்புடன் வீழ்வோர்க் கென்றும்
பரியதன் நயனம் காட்டிப் பரவெளி ஆளச்செய்யும்
அரிவையாம் கனகமணி அம்பிகை அருளினாலே.

30. அருள்பெருக இரணைமடு வாவித் திருக்கரையில்
பொருள் பெருக வன்னிநிலம் பொற்கொம்பே நீயமர்ந்தாய்
இருளகற்றி எமது குறை யாவையுமே போக்கிவிட்ட
திருவடிக்கே சூட்டுகின்றோம் எம் இதயச் செம்மலரே.

31. மலரே இட்டடியே தொழுவார் மனதில் என்றும் வளர்ந்தோங்கி
நிலைபேறான நிதியாய்வாழும் நீலாம்பிகையே விசாலாட்சி
அலையும் பொல்லாமனக் குரங்கைஅடக்கிஅருளில் மூழ்கவைக்கும்
கலையே உனது தனிப் பேறாகும் கனகாம்பிகையாம் மலைமகளே.

32. மகளே இமவான் இன்னமுதே மங்களதாரணி ஆரணியே
புகழே பொருளாம் புங்கவற்குப் புதியபாடம் கற்பித்து
காழி, கூழி, கடாரி, பிடாரி, நீலி, நிட்டூரி சூலி
வாழி, வாழி, என்றோதவும் வைத்தவளே!



33. வைத்தவளே இந்த வையகம் வானகம் அண்டங்கள் யாவையும்
மைத்தவள்மேனி மரகதமாமணி மாணிக்கவல்லியாய் மாறிநின்று
பைத்தவள் பாம்பணி பரமனின் ஆவி கவர்ந்திழுத்த
கைத்தலத்தாள் எம்மனத்தகத்தாள் எனில் அச்சமுண்டோ.

34. உண்டோ தஞ்சமென்று உனையே தொழுவார்க் குளதோ துயரம்
தண்டேன் ஒழுகு தாமரை மலர்கள் தம்மீதே
வண்டேகளித்து மயங்கித்துயிலும் இரணைமடு
கண்டே தொழுவார் அன்றே விடுவார் வல்வினையே!

35. வினைதான் பெரிதோ வேண்டுமோ அச்சம் இரணைமடுச்
சுனையிற் படிந்தால் வேரோடறுத்து நீறு செய்வாய்
மனமும் திருத்தி மதியும் கெதியும் மற்றுமுள
தனமும் தருவாள் தளிர்இன மேனித் தயாபரியே!

36. தயாபரி என்றுனைச் சாற்றிடப் போமோ அண்டமெலாம்
பராபரித் தாள்கின்ற பார்பதியே கனகாம்பிகைப் பதியில்
அராவுடன் அணிமயில் அன்பினால் வழிபாடாற்றி நின்று
பராவிடும் பூம்பதம் பற்றினார் எற்றுவர் பகைதனையே!

37. தமையே பரம்என்று தருக்கியே அயனும் அரியும்
வினையே சுடநின்று வெம்போர் புரிந்து வியர்த்திடவே
உனையே பரம்என் றோடியே சிவனார் இருவோரின்
மனமே அடங்க ஒளியாய் நிமிர்ந்தார் வான் மயிலே!

38. மயிலும் அராவும் மகிழ்ந்துறவாடும் நின்அடியில்
குயிலும் புறவும் கூவியே பாட நின்புகழைப்
பயிலும் சிறாரொடு பக்தர்கள் கூட்டம் அலைமோத
வெயிலும் சுடாதாம் விண்ணரசே நின் திருப்பதியே!

வேறு

39. பதிவேறிலையே பாரிடம் மீதே
கதிவேறிலையே கனகாம்பிகையே
நிதி வேறிலையே நம்துயர் மாற்ற
விதிவேறிலையே விமலைதன் ஊரே!

40. ஊரே உறவே உயிரே ஒளியே மணியே
பாரே விசும்பே அனலே புனலே காற்றே
நேரேவந்து நின்னடி வீழ்ந்தோம்
காரேர்குழலாள் கனகாம் பிகையே!

41. கனகாம்பிகையே காருண்யதேவி
மனவாம்பிகையே மங்களச் செல்வி
தனவாம்பிகையே தண்ணருள் தருவாய்
அனவாம்பிகையே அடியவர் சரணே.

42. சரண்'உனக்கன்னே சதுர்மறைகாண
மரணமில்வாழ்வு மகிழ்ந்தெமக் கருள்வாய்
இரணைமடுவில் இருந்தருள் தாயே
கரணங்கள் யாவும் கனிந்தன எமக்கே.

43. எமக்கருள் செய்ய இரணைமடுவின்
தவக்கரை மீதே கொண்டாய் கோயில்
பவக்கரை நீந்திடும் பக்தர் தமக்கு
சிவக்கரை காட்டும் தேவிநீ தானே!

44. தானேபரம் எனும் தருக்கர்கள் முன்னே
வானே மயங்க வளர்ந்த சிவன்மேல்
மானே இட்ட மாலையின் அளவு
தேனே சிவனார் செப்பப் போமோ.



45. போமோ! போமோ! பொன்னியின் செல்வனும்
வன்னியின் செல்வியை வாழ்த்தப் போமோ
கன்னியின் செல்வி காரிடை மயில்
சென்னியின் செல்வி என்றோ தினர் புகழே!

46. புகழுறும் அன்னை பூவடித் தாமரை
முகிழுறும் அருள் தேன் முழுதுற மாந்தி
கமழுறும் கனகராயன் ஆறு
மகிழுற ஓடி மகிழுறும் அம்மே.

47. அம்மே உனது ஆதார மின்றி
இம்மேதினியில் யாரேவாழ்வர்
செம்மேனியனாம் சிவபெருமானார்
தம்மேனியையும் வவ்விய தாயே!

48. மாதே மதுரை மாநகரோ
போதார் கைலைச் சரோருவமோ
யாதோ இரணைமடு நகர்தான்
தோதாய் நினக்கு நேர்ந்ததுவே!

49. நேர்ந்தவர் வேண்டுதல் எல்லாமே
சேர்ந்திட அருளும் தேவி நீ
தேர்ந்தவர் தவத்தோர் போற்றிசெய்யு
ஆர்ந்த துறை உறை அம்பிகையே.

50. கையிற் கனிக்கு உரைகல் ஏனோ
பொய்யிற் கிடந்து புரமுதல் விட்டு
மெய்யிற் கனிந்த கனகாம்பிகையாம்
தையலின் பாதம் சாருதல் தகுமே!

51. தகுமது கண்டு தரணியில் மாந்தர்
புகுவது கண்டே நின் திருக்கோயில்
உருகுவது கண்ணீர் ஓடியே வந்தோம்
நகுவதும் உண்டோ நயனங்கள் காட்டே!

52. காட்டினில் வாழ்ந்தாய் கானக மாந்தர்
பாட்டினில் மகிழ்ந்தாய் பரவச மானாய்
ஈட்டிய தேனும் படையலும் ஏற்றே
ஊட்டியே அருளை உவந்தவன் நீயே.

53. நீயே காட்டின் நீலமேனி
காயாம் பூவின் வண்ணம் தன்னை
மாயே ஈந்தாய் ஈசற் கென்றால்
தாயே நீரம் சாற்றுவார் யாரோ.

54. யாரோ முனிவர் மூட்டிய நெருப்பே
நேரோன் யோகரின் நெஞ்சக் கொழுந்தே
பாரோர் போற்றும் இரணை மடுவில்
சீரோடமர்ந்த தெய்வத் தாயே!

55. தாயே வானோர் தாம முடியும்
சேயோர்இட்ட செல்வக் குவையொடும்
தோயாப் பாதம் தூக்கியே ஆடப்
பாயா நிற்கும் கனகன் ஆறே!

56. ஆறே ஓடும் அம்பிகை நாமம்
கூறிக் கூறிக் குதித்தே ஓடும்
நாறும் நாறும் மலர்கள் அம்மா
ஊறும் ஊறும் அருளின் ஊற்றே!

57. ஊற்றே பெருக உயிர்கள் வாழ
சேற்றே ருழவர் செந்நெல்வரை
நாற்றேயான நாயகி நீயே
ஏற்றே ஈவாய் கருணை இனிதே!

58. இனிதே இரணைமடுவாம் பதியே
இனிதே கனகராயனாம் ஆறே
இனிதே அன்னையின் இன்னருள் தானே
இனிதே இனிதே யாவும் இனிதே.



59. இனியவள் எங்கள் இதயக் கோயில்
கனியவள் கனக யாமணித் தாயே
நுனியவள் அன்பின் உயிரும் அவளே
தனியவள் இருக்க வருமோ துயரே!

60. துயரே வருமோ இரணைமடுவின்
அயரா அன்பின் அன்னை இருக்க
வியரா நடுங்கி விம்முதல் விட்டுப்
பயரா தோடிப் பற்றுமின்அடியே!

61. அடியே அடைந்த அந்தகன் தனக்கு
கொடியே கொடுத்து வாழ்வும் ஈந்தாள்
படியே தேடிய நம்பிஆரூரற்கு
தடியே ஏறியத் தந்தவள் கண்ணே!

62. கண்ணே கண்ணின் பாய்ந்திடு ஒளியே
விண்ணே விண்ணில் விளைந்திடு வெளியே
பண்ணே பண்ணிற் பயின்றிடு இசையே
மண்ணே மண்ணில் மலர்ந்திடுமுயிரே.

63. உயிரின் உயிராய் உறவின் உறவாய்
பயிராய் உலகம் பாலித்தருளும்
தயிரும் பிரையும் போன்றவள் நீயே
வயிரம் மின்னும் கனகாம் பிகையே!

64. அம்பிகையே நின் அடியில் ஊறும் அருளின் ஊற்றே
எம்பியே எழுந்து ஆறாய்ப் பெருகி எங்கும் பாய்ந்தோட
தும்பிக்கையோனும் தோகை மயிலோனும்
நம்பியே தொழுதுவிழும் மாட்சியார் காண்பாரே!

65. காண்பார் யாருளர் காளிநின் நாடகம்
பூண்பார் யாருளர் துர்க்கைநின் போர்க்குணம்
மாண்பார் பவானியின் வரத குணத்தை
ஏண்பார் யாரும் உலகில் உளரோ!

66. உளரோ உலகில் உயர்பெரு மூதூர்
வளரா நின்ற மதுரைமா நகர்
கிளரா நின்ற பகை எரியூட்டி
தளரா நின்ற தாயினை நேரே!

67. நேரே நின்றோம் நின்னடி பணிந்தோம்
வேரே உந்தன் வியன்பதம் அன்றே
ஊரே உந்தன் திருவடி அன்றே
வாரோர் தனத்து மங்கை நல்லாளே.

68. நல்லாள் வில்லாள் நயமெலாம் கொண்ட
சொல்லாள் தூய சுத்தமெய்ஞ்ஞான
நல்நெறி வாழ்வு நலமுடன் தருவாள்
பொல்லாப் பகையைப் பொடி செய்யும் பூவே!

69. பூவே பூத்தாய் புவிஉள எல்லாம்
மாவேறான மாயனின் சோதரி
காவே விளங்கு கனகாம் பிகையே
சேவே றுடைய சிவக்கனி உமையே!

70. உமையே இரணைமடுவாம் ஊரில்
இமயவல்லி இருப்பதுகண்டு
தமையே தந்து சார்ந்து பணிந்தால்
அமையாத் தொன்று என்றும் இலையே!

71. இலை உன்போலே இன் ஓர்தெய்வம்
கலையும் கல்வியும் கவின்மிகு மனமும்
உலைதான் உலகோர் போற்றவளர்க்க
நிலையும் தருவாள் நேர்வழி நின்றே!

72. நின்றே நிலவும் நேரிளை நின்புகழ்
ஒன்றே தானும் நிலையா உலகில்
குன்றே உடைய கோனே வளர்த்த
கன்றே தாயே கனக விளக்கே!





73. விளக்கின் ஒளியே விளைவின் நிறைவே
குளத்திற் சிறந்த இரணை மடுவாம்
தளத்திற் பூத்துக் காய்த்துக் கனிந்த
பழத்தின் சாறே பார்பதி மின்னே.

74. மின்னற் கொடியே வேல்விழிமானே
உன்னைச் சரண் என ஓடியே வந்து
சென்னியே தாழ்த்திப் பணிவோர் வல்வினை
தன்னிலே ஓடத் தந்திடு வரமே!

75. வரமே தருவாய் இரணை மடுவின்
உரமே எங்கள் உள்ளத் தாமரை
பரமாய் மலர்ந்து பாங்குற மிளிரும்
தரமே தந்து தாபரிப் பாயே!

76. தாபரித் தருள்வாள் தண்ணருள் தருவாள்
வேகமிக் குடைய மனத்திமி ரடக்கி
மோகம் கோபம் முற்று மறுப்பாள்
பாகம் கொண்டாள் பரசிவன் தனையே!

77. தனையே அறியாத் தருக்கராய் வாழ்ந்து
மனநோய் பிடித்து மாழுதல் முறையோ
தனமும் மனமும் இடமாய்க் கொண்ட
கனகாம் பிகைதாழ் சேருதல் தகுமே!

78. தகுமடியார்க்குக் கனகாம்பிகை தாழ்
புகுமடியார்க்குப் புவனமும் ஏனைய
கனகமும் கண்டுகளி பெருகிடவே
நவதன மெல்லாம் நல்கிடுவாளே!

79. நல்கிடுவாள் எம்நாதாந்த வித்தகி
பல்கலையோடு பதினாறு பேறும்
சொல்வற்கரிய சுக குண நாயகி
வெல்லப் போமோ விதிஎமைத் தானே!

80. தானே புவனம் பூத்துக் காத்து
தானே புவனமும் ஏனையு மாகி
தானே நின்று கொடுகொட்டி செய்வாள்
தானேயான புவனேஸ் வரியே.

81. வரியாத் தக்கன் வேள்வி தகர்த்தாள்
உரியார் துயரை ஓட உதைப்பாள்
கரியானனொடு கந்தனைப் பயந்தாள்
தெரியலைத் தேரின் தேரும் எல்லாமே!

82. எல்லா உலகமும் இரணை மடுவெனச்
சொல்லும் படியாய் வல்லமை கொண்டாள்
கல்லா மாந்தரும் வலமாய் வந்தால்
தில்லா தோடும் தொல்லை வினையே!

83. வினைகள் ஓட மெய்ப் பதம் தருவாள்
மனைகள் தோறும் மங்கல மாவாள்
சினவே லோடு செங்கயற் கண்ணி
தனையே நினைந்தால் தவம் எதற்காமே!

84. ஆகுமெய்த் தவமும் அன்பும் எல்லாம்
போகுமிடமெலாம் வழித்துணையாகும்
வாகும் வளமும் வல்லமை யாவும்
ஈவாள் எங்கள் ஈஸ்வரிதானே.

85. தானே ஐந்தொழில் தகவாய் இயற்றி
ஊனே உருக்கி உயிருட் கலந்து
தேனே திகட்ட அருளே தருவாள்
வானோர் அறியா மலர்க் கொடி யாளே!

86. கொடியோ! பிடியோ இரணை மடுவாம்
படியே பதியாம் பாவை நல்லாளே
முடியா வினையே அடியோ டொற்றி
அடியார் துன்பம் தீர்க்கும் தாயே!




87. தாயே நாங்கள் தாகம் கொண்டோம்
வாயே குழற வந்து பணிந்தோம்
நோயோ! துயரோ! சதியோ! விதியோ
நீயே மாற்றிக் காரெமை அம்மே!

88. அம்மே உந்தன் ஆலயம் தன்னில்
விம்மியே வீழ்ந்து புரளுறு பத்தர்
தம்மேனியைத் தழுவிய மண்மேவ
பொம்மென வீழ்ந்து புரண்டோம் அருளே!

89. அருள்வாய் அம்மா அண்ட மனைத்தின்
கருவாய் நின்ற கனகாம் பிகையே
திருவாய்! சிவமாய்! தனமாய்! இனமாய்
தருவாய் நினது பேரரு ளேயோ!

90. ஏய பதங்களும் இணையிலா அண்டமும்
மேய பதிகளில் இரணை மடுவே
தூய பதியெனச் சாற்றியே பத்தர்
தாயவளே உனைச் சாருதல் பாரே!

91. பார்த்தே அருள்வாள் பணிமின் பத்தர்காள்
தீர்த்தம் இரணை மடுவில் ஆட
ஆர்த்த வினைகள் பொடிப்பொடியாகும்
நேர்த்த வெல்லாம் சித்திக்கும் நேரே!

92. நேரேகாண வேண்டுமே நிமலையை
பாரீர் வந்து இரணை மடுவில்
தேரே ஏறி ஊரும் கோலச்
சீரே காண்பீர் தவத்தின்பயனே!

93. பயனே பார்செய் தவமே
நயனே இரணை மடுவில் அமர்ந்தாய்
வியனார் பதத்தோர் மேவியே வந்து
தயவே நேர்ந்து சார்ந்தனர் இங்கே!


மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

94. இங்குன் அடியார் கூட்டமம்மா
எங்கும் காணா ஈட்டம் அன்னே!
பொங்கிடும் பக்தியில் மூழ்கிடுவார்கள்
சிங்க வாகனச் சேயிளை யாளே!

95. சேயிளை சீரடித் தாமரையில்
போய்விழப் போய்விடும் புன்மைகளே
ஆயினை அம்பிகை அன்பினிலே
தோய்வுறு பேறும் வாய்த்திடுமே!

96. வாய்த்த பிறவித் துயர் ஓட
காய்த்த மனமும் கனிந்திடுமே
ஏய்த்த மாயையை இனம் கண்டே
தீய்த்த விழியாள் நோக்காவே.

97. நோக்கால் மும்மலம் அகன்றுவிடும்
வாக்கும் மனமும் திருத்திவிடும்
பாக்கும் இடங்கள் எல்லாமும்
காக்கும் அன்னையின் கண் ஒளியே.

98. ஒளியே ஒளியின் உள் ஒளியே
அழியா அன்புப் பெரு நதியே
விழியே செய்த பெருந்தவமே
அளியே ஈந்தெமை ஆதரியே.

99. ஆதரித்தே எமை ஆட்சி செய்வாள்
போதரிக் கண்உடைப் பூம்பாவை
மாதுரி, பாதுரி, வளர்முல்லை
போதுகள் இட்டுயாம் பணிவோம்.

100. பணிவோம் அவள்தன் பாதாரவிந்தம்
அணிவோம் அம்பிகை அருள் குங்குமத்தைத்
துணிவோம் உலகத் தொடரெலாம் நாணத்
திணிவோம் அவள் திரு அடிமலரே!




ஒரு நான்கு வேதங்கள் தூண்களாக
ஓங்குசிவா கமங்களணி நாண்களாக
பொருளோங்கு பிரணவமே பீடமாக
புகன்றிடுமா றாதாரம் மாடமாக
தெருளோங்கு கலைகளெலாம் தீபமாக
திருமுறைகள் சிவஞான மாலையாக
கருவாகி இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீரூஞ்சல். (3)

அருணனொடு மதிதரளக் கவிதைதாங்க
அமரரொடு முனிவர்குழு சிவிகை தாங்க
மருவுஜயை விஜயைபசுங் கவரிவீச
மலர்வாணி திருமாது களபம்பூச
வருவிடையன் கற்பகமா மாலைபூண
வாரணனும் இளையோனும் வரிசைகாண
கருணைமிகும் இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீரூஞ்சல். (4)

அழகுவளர் சிவகாமி கௌரிமாரி
அபிராமி விசாலாட்சி ஜனனிகைலை
பழகுமுமை துர்க்கைமனோன் மணிபவானி
பார்வதிகா மாட்சிமகா காளியென்று
வழமைதரு பலகோடி நாமம்பூண்டு
வருமடியர் வினைதீர்க்கும் பெருமருந்தே
கழனிமலி இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீரூஞ்சல். (5)

விதியோடு திருநந்தி முழவந்திட்ட
விளங்குநா ரதர்மகர வீணைமீட்ட
பதியேறு மரம்பையர்கள் கானம்பாட
பங்கயனும் நாரணனும் தாளம்போட
நதியேறு சடிலத்தான் வாழ்த்துரைக்க
நமசிவய திருநடனம் புரிவாய், நான்கு
கதிகாட்ட இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீரூஞ்சல். (6)

சிற்பரவி யோமமெனும் தில்லைமன்றுள்
சிகரவெளி நடனமிடும் செல்வியாகி
சொற்பதத்துக் கடங்காத சுவையுமாகி
சுழுமுனையி லுதிக்கின்ற சுடருமாகி
அற்புதமாய் ஐந்தெழுத்தாய் அறிவாற்காணும்
ஆறாது தத்துவமாய் அப்பால்நின்ற
கற்பகமாய் இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீருஞ்சல். (7)

சீரேறு முடியாட செங்கையாட
திருத்தோடும் மணிவடமும் விழியுமாட
தாரேறு தனமலையும் கச்சுமாட
தனிப்பவளத் துகிலாடத் தண்டையாட
நீரேறு சடையனுடன் பூதராட
நெடுஞ்சிங்க வாகனமும் புலியுமாட
காரேறும் இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீருஞ்சல். (8)

இமயமுத லகிலமெலாம் செம்மைபேணி
இருவினையின் தளையறுக்க இனியசைவ
சமயநெறி தழைத்தோங்க சாத்துவீகச்
சன்மார்க்க தவமுயர, சார்ந்த தொண்டர்
தமதுமிடி யகலசிவ தர்மம்பொங்கச்
சமய சந்தானபரம் பரையையீன்று
கமலநிறை இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீருஞ்சல். (9)

பனிமலர்ச் செஞ்சடையாளே யாடீருஞ்சல்
பரவிகமெய்க் கொடையாளே யாடீருஞ்சல்
குனிசிலைக்கை யுடையாளே யாடீருஞ்சல்
குலிசநெடும் படையாளே யாடீருஞ்சல்
இனியகலை நடையாளே யாடீருஞ்சல்
இசைவெள்ளை விடையாளே யாடீருஞ்சல்
கனிநிறைந்த இரணைமடுப் பதியமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீருஞ்சல். (10)





பாரிசாதப் பூவதன்மேல்
 பைங்கிளி ஏந்து செங்கரத்தாள்
வாரி வழங்கும் வரதகரம்
 வருபிணியோட்டும் அபயகரம்
காரியம் யாவினும் வெற்றி தரும்
 கனகாம்பிகையின் திருக்கோலம்
நேரிற் கண்டு பணிவார்க்கே
 நினைத்தவையாவும் கனிந்திடுமே!

கனகாம்பிகை எனக் காசினிபோற்ற
இரணைமடுவில் இருந்தருள் செய்யும்
மன வாம்பிகையின் மலரடியுன்னித்
தினமும் துதிப்போம் அந்தாதி வைத்தே.

ஆக்கம்:– சு. சோமசுந்தரம்,
126/2, திருவையாறு, கிளிநொச்சி.

உ

# கிளிநொச்சி - இரணைமடு ஸ்ரீ கனகாம்பிகையம்மை

# திருப்பொன்னூஞ்சல்

காப்பு

தேன்பொலிந்த கொன்றைமதி சென்னி சூடித்
தில்லையிலே யாடுகின்ற சிவனும் ஞான
மீன்பொலிந்த கண்ணாலே யருள் சுரக்கும்
விமலிகன காம்பிகையும் தந்த மைந்தா
வான்பொலிந்த தேவகுலம் வாழும் வண்ணம்
வரம்பொழிந்த விநாயகனே வானம் தோயும்
கான்பொழிந்த வள்ளிமணம் நிகழ்த்த வந்த
கணபதியே நின்திருத்தாள் காப்பதாமே.

நூல்

பூவாரும் செஞ்சடையும் சிவப்பொன் னாணும்
பொலிமுகமும் நீள்விழியும் செந்தமிழ்த்தேன்
நாவாரும் சிறுநகையும் ஞால மெல்லாம்
நயந்துதவும் செழுங்கரமும் நண்ணும் தொண்டர்
தேவாரம் கேட்டினித்த செவியும் தோடும்
திருவிளங்க வமைந்தமுது கோலங்காட்டிக்
காவாரும் இரணைமடுப் பதிய மர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீரூஞ்சல். (1)

புவனமெல்லாம் நிறைந்துபடி யளந்துவேதம்
புகன்றிடுநா லெட்டறங்கள் புரிந்து நாதன்
திகழெழில்மார் பினில்முலையும் வளையும் சேர்த்துத்
தீராத தழும்பமைத்த சிவையே யன்பர்
பவவினையை வேரறுக்கப் பாசம் சூலம்
பயில்கலசம் அங்குசமா மலரு மேந்திக்
கவிபடைத்த இரணைமடுப் பதி யமர்ந்த
கனகாம்பி கைத்தாயே யாடீரூஞ்சல். (2)





உதவிய அத்தனை பேரையுமே தெய்வ நிலைக்கு உயர்த்துகின்ற மரபினையும் நாம் கொண்டிருக்கின்றோம். இதுவும்கூட ஒரு பய மேலீட்டின் பிரதிவிளைவு என்றால் மிகையாகாது. இதனைவிட இம்மை-மறுமை என்ற இருநிலை தன்மையை அடியொற்றி எழுகின்ற மோட்சம்-மற்றும் நரகம் பற்றிய எண்ணப்பாடுகளும் இவ்வகையின் அடியொற்றி எழுந்த தத்துவாஸ் தலங்களாகவே அமைந்துள்ளன. பாவம்-மற்றும் புண்ணியம் என்ற அறக்கருத்துக் கூடாக ஒவ்வொரு மனிதனும் பெற்றுக் கொள்ளும் சுயஅடக்க முகாமைத்துவம் பொறிமுறையானது பயம் மற்றும் அச்ச உணர்வு சார்ந்ததாகவே அமைந்துள்ளது. இவ்வகையில் ஆய்வுநிலைக்கு அப்பாற்பட உள்ளதை உள்ளவாறும், நிகழ்வதனை நிகழ்ந்த வாறாகவும் ஏற்றுக்கொண்டு கடவுளின் கீழ் கட்டுப்பட்டு அதன்காரணமாக நன்னெறி நோக்கி நகரும் செய்முறையாக இதனை வரைவுபடுத்தலாம்.

தோழமை மற்றும் புரிந்துணர்வு காரணமாக எழும் சுய கட்டுப்பாடு நிலையென்பது விஞ்ஞான பூர்வமாகச் சிந்தித்தல், துணிதல், நிறுவுதல் என்றவகையில் இறையன்பைத் தனதாக்கும் பொறி முறை யாகும். இதில் நவீன விஞ்ஞான சிந்தனையும் உளநிலசார் உந்துதல்களையும் தர்க்க நியாயத்துடன் நிறுவுவதனூடாக பக்தி மார்க்கத்தின் வாயிலைப் புரிந்துணர்வுடன் கூடிய தோழமையாகப் பிரசன்னப் படுத்தியுள்ளது. இறைவனைத் தோழனாகக் கண்டு வழிபடும் முறைமைக்கூடாக அவநம்பிக்கை மற்றும் மூட நம்பிக்கைகளைக் கடந்து உண்மையாக அகவடக்கத்தைப் பேணும் நிலையை இது குறிக்கிறது. அறிவுபூர்வமான தளத்திலிருந்து எழும் இவ் ஆன்மீக பயணமானது மதவெறியாக மாறி வன்முறைக்குள் புகுவதனையோ அதிக பற்றுதலுடன் உள்ளுணர்வுகளைத் தூண்டி உணர்ச்சிமயப்படுவதனையே தடுத்து பரஸ்பர புரிதலுடன் உளர்தியான பகுப்பாய்வின் அடிப்படையிலான வழிபாட்டு முறையாக இருந்து வருகிறது. இவ்வகையில் இந்து சமயத்தின் வழிபாட்டு முறையில் இவ்விரு சமூக வணக்க முறைகளுமே தற்போதும் இருப்பதனை நாம் உய்த்துணர முடியும். உருவ வழிபாடு என்பது வேதகாலம் தொடக்கம் இருந்துவரும் ஒரு வழிபாட்டு முறையாகும். இங்கு மனதை ஒருநிலைப்படுத்துவது தொடர்பில் பிறநிலை தேவைப்பாட்டின் அவசியம் காரணமாக எழுந்த பக்தி மார்க்கமே உருவ வழிபாடாகும். இவ்வாறான புறநிலை ஒருமைப்பாட்டு வடிவம் தொன்றுதொட்டு வழக்கத்துக்கு வந்து அது பாரம்பரியமாகவும், சமூக விழுமிய முறைமையாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டதால் விதிகளின்பால் அமைந்த ஆலய அமைப்பு முறை இன்றும் தொடர்கிறது. நவீன ஆகம செலவு முகாமைத்துவச் சூழலில் இவ்வேறுபாடானது சவாலான ஒன்றாக மாறியிருப்பது கவனிக்கத்தக்கது. சமகால வழிபாடு முறையில் இந்த மரபுசார் கட்டுமாண அம்சம் பல நிலைகளில் ஆலயங்களை முறைப்படுத்தி நிர்வகிக்க முடியாத சூழ்நிலையை உருவாக்கியுள்ளது. நவீன மதச் சிந்தனைகளில் பக்தி மார்க்கத்தின் அடிப்படையில் அமைந்த மன ஒருமைப்பாடும் உறுதியான நம்பிக்கையும் உருவங்களற்ற வணக்கத் தலங்களையும், ஆலயங்களையும் அறிமுகப் படுத்தியுள்ளன. பழையன கழிதலும் புதியன புகுதலுமான சமூக அசைவியக்கத்தில் இந்துசமயம் சார்ந்த வணக்க முறைகளும் கிரியைகளையும் கனதியான கருத்தாளம்மிக்க வழிபாடாகவே இருப்பதனால் புரிதல்

என்பது இன்றைய ஒரு வெறும் சடங்காசாரம் செயற்படுத்தலை நாம் மீள் நினைவூட்டிக் கொள்ளுதல் அவசியமாகும். உதாரணமாக கும்பாபிஷேக காலத்தில் கோயில்களுக்கு முடிசாத்தும் வைபவம் இடம்பெறுகிறது. இது ஒரு வெற்றியின், சிறப்பின் அடையாள மாகவே அமைந்தது என்றே பலர் கருதுகின்ற னர். ஆனால் இது ஒரு பேரிடர் முகாமைத் துவக் கொள்கை (Disaster Management Concept) சார்ந்து ஏதாவது ஒரு பேரிடர் காரணமாக மனித இனம் உட்பட எல்லா உயிரினங்களுமே அழிவடைந்தாலும் மீளவும் வரும் தேசத்தில் உயிரினங்கள் மீள உருவாக் கப்படுவதற்கு ஏற்றவகையிலான தானியங் களைச் சேமித்துப் பாதுகாக்கும் ஒரு இடமா கவே இவ் ஆலய முடிவுகள் அமைக்கப்பட்டு அதில் உயிரினங்களை மீள உருவாக்கக்கூடிய தானிய வகைகளையிட்டு உச்சியில் பாதுகாக் கும் அடிப்படையைச் சார்ந்ததாகும். இவ் வகையில் உணர்திறன் வாய்ந்த வழிபாட்டு முறைமை எீ்பது இந்து சமய வணக்க முறைகளில் இப்போது சவாலாக இருப் பது மாற்றப்பட வேண்டி யதாகும். அதேபோல சமஸ் கிருதத்தை அடியொற்றிய வழிபாட்டு முறையில் மொழி ஊடகம் என்பது மெய்யான இறைபக்தியை யும், புரிந்துணர்வையும் தூண்டுவதால் இடை வெளியை ஏற்படுத்துவது ஒரு சவாலேயாகும். நிறை வான உளஅமைதியைப் பகிருவதற்கும் உண்மை யான பங்குபற்றுதலைத் தூண்டுவதற்கும் ஒவ்வொரு இனத்திற்குமான தாய் மொழி வகிக்கும் பாத்திரத் தை வேற்றுமொழி பயன ளிக்க முடியாது என்பது நவீன சமூகவியலாளர் களின் ஆராய்ச்சி முடிவாகும்.

ஆலய வழிபாடு மற்றும் ஆன்மீக எழுச்சி என்பது ஆலயங்களின் கட்டுமாணத் தினால் தான் எழுகிறது என்ற ஆய்வு நிலைப் படாத எண்ணம் காரணமாக அவசியமற்ற பல கட்டுமாண வடிவங்கள் தற்போது எமது ஆலயங்களுக்குள் நுழைந்து கோலோச்சு வதும். அதுவே ஒரு ஆன்மீக பணியென எண்ணவும் பலரைத் தூண்டி வருகிறது. இதுவும் எமது மதத்திற்கெதிரான ஒரு நியாயபூர்வ விமர்சனமாகும். மாற்று மதங் களை நோக்கிய மக்களின் மனமாற்றம் என்பது தோழமை மற்றும் புரிந்துணர்வு காரணமாக எழும் தூண்டுதலாகவே அமைகிறது. 21ஆம் நூற்றாண்டின் சவால்களுக்கு முகம் கொடுக் கும் இறைமார்க்கமாக எமது வழிபாட்டு பொறிமுறையை மாற்றுவதற்கு நம்மால் முடியவில்லையாயின் அவ்இடைவெளியை வரலாறு வெறுமையாக வைத்திருக்கப் போவ தில்லை.

ஆன்மீகத் தேவைகளைப் பொறுத்து மதத்தினது தூரநோக்கானது (Vision) சஞ்சலப் பட்ட உள்ளங்களின் மன உறுதியை மீள நிலைப்படுத்துவதே ஆகும். இவ்வாறான உயர்நிலை உறுதிப்பாடானது இலகுவான அடைவுக்கானது அல்ல என்பதனால் பல் வேறு நிலைகளில் அதனை அமுலாக்க வேண்டியிருக்கிறது. அவையே மதத்தினது பணிநோக்கு (Missions)களாகப் பிரிக்கப் படுகிறது. சமய விழாக்கள், சமயச் சடங்குகள், தேவார பாராயணங்கள், மந்திர உச்சா டணங்கள் எனப் பல்வேறு பணிநோக்குகளி னூடான இலக்குகளை அடைவதற்கு ஒழுங்கு படுத்தப்பட்டமையை ஆற்றிவரும் பங்கை யாரும் குறைத்து மதிப்பிடமுடியாது. கடந்த மூன்று தசாப்தகால செயற்பாடுகளினால் இறைமார்க்கத்திற்கும், மனிதாபிமான அணுகு





வாழி

தரை செழிக்கும் மழைவாழி தர்மம் வாழி
தமிழ் வாழி யடியாரின் தவங்கள் வாழி
வரை பயின்ற மறைவாழி நீதி வாழி
வந்ததிரு முறை வாழி வாய்மை வாழி
பரைவண்ண வெண்ணீறும் மணியும் வாழி
பஞ்சாட்சரம்வாழி பயிர் வளர்க்கக்
கரைபொருமும் இரணைமடுத் தேக்கம் வாழி
கனகாம்பி கைப்பாதம் வாழி வாழி.

மங்களம்

ஐங்கரனைத் தந்தவளே மங்களம்
அறுமுகனை அணைத்தவளே மங்களம்
சங்கரனின் பங்கினளே மங்களம்
சகலகலை நாயகியே மங்களம்
சிங்கமிசை வருபவளே மங்களம்
திருமாயன் சோதரியே மங்களம்
கங்கைக்கரைத் தவத்தாளே மங்களம்
கனகாம்பி கைத்தாயே மங்களம்.

சுபம்.

ஆக்கம் – அருட்கவி திரு. சீ. விநாசித்தம்பி அவர்கள்

## சிவ ஹர சுப்ரமண்யம்

அன்பருக்கு அன்பனே நீ வாவா முருகா
ஆறுபடை வீடுடையாய் வாவா முருகா
இன்பமய ஜோதியே நீ வாவா முருகா
ஈசனுமை பாலகனே வாவா முருகா
உலகநாதன் மருகனே நீ வாவா முருகா
ஊமைக்கருள் புரிந்தவனே நீ வாவா முருகா
எட்டிக்குட்டி வேலவனே வாவா முருகா
ஏறுமயில் ஏறியே நீ வாவா முருகா
ஐங்கரனுக் கிளையவனே வாவா முருகா
ஒய்யாரி வள்ளிலோலா வாவா முருகா
ஓங்கார தத்துவமே வாவா முருகா
ஔவைக் குபதேசித்தவா வாவா முருகா
அகில லோக நாயகனே வாவா முருகா.

உ

ஓம் சக்தி

# சமூக தொழில்நுட்பமான வணக்கமுறையும் சமய நடைமுறைகளும் இந்துமத வழிபாடு தொடர்பிலான ஒரு சிந்தனை

மனித வாழ்வில் மதங்களின் தொடர்பு என்பது மறக்க முடியாது தொடர்ச்சியாகவே இருந்து வருகிறது. மனித வரலாறு தொடக்கப் பட்டதாகக் கருதப்படும் பழைய கற்காலம் தொடக்கம் தொடராக புதிய கற்காலம், குறுணிக்கற்காலம், பெருங்கற்காலம் என வரலாற்றாசிரியர்கள் கருதும் எல்லாக் காலப்பகுதியிலுமே மதத்தின் சார்பான கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டே மனித வரலாறு நிருபணம் செய்யப்பட்டு வந்திருப்பதனைக் காணமுடிகிறது. இவ்வகையில் மனித மனத்தின் ஆற்றுகைப்படுத்தலில் மதவழிபாடு காட்டிவரும் தீவிர பங்குபற்றுதல் மறக்கமுடியாததாகும். மதத்தின் நெறிமுறைகளை அமுலாக்குவதில் காணப் படும் மூடக் கொள்கைகள் சிலவற்றின் காரணமாக ஆஸ்திக வாதம் தன்மை பலப்படுத்திக் கொண்டாலும் உளவயப்பட்ட மனஅழுத்தம், மற்றும் மனவடு போன்ற கடுமையான உளநோய்களைத் தீர்ப்பதிலும் மனிதனுக்கு இவ்வாறான நெருக்கீடுகள் ஏற்படும்போது எழும் மன அமைதிப்படுத்தலுக்கான நம்பிக்கையைக் கட்டியெழுப்புவதிலும் ஆலய தரிசனம் ஒரு சிறப்பார்ந்த பொறி முறையாகும். இதற்கப்பால் சமூகரீதியாக நம்பிக்கை தொடர்பான தன்நம்பிக்கை மற்றும் பிறர் நம்பிக்கை என்பவற்றை உருப் பெறவைப்பதில் ஆலய வழிபாட்டு முறை ஏற்படுத்தும் பங்கு பற்றுதல் நாம் அனைவரும் உணர்வு ரீதியாகப் புரிந்துகொண்ட ஒரு செயற்பாடாகும். அதனைவிட மேலாக ஒழுங்கும் கட்டுப்பாடும் கீழ்ப்படிவும் கொண்ட சமூக உருவாக்கத்தில் மதவழிபாடு ஒரு பிரதான கட்டுப்பாட்டு முகவராக இருந்து வருவதனால் (ChangeAgent) சமூக நிர்வகிப்பு என்பது செலவு குறைந்த ஒரு பொறிமுறையாக இருந்து வருகிறது. கடவுளை வழிபடுவதில் உள்ள புரிந்துணர்வை இரு நிலைகளாக சமூகவியலாளர்கள் வரையறுத்துள்ளனர்.

i) பயம் மற்றும் அச்ச உணர்வு காரணமாக எழும் சுய அடக்க நிலை

ii) தோழமை மற்றும் புரிந்துணர்வு காரணமாக எழும் சுய கட்டுப்பாட்டு நிலை

மனித வரலாற்றின் தொடக்கம் முதல் பகுத்தறிவுவாதக் கருத்துக்கள் உச்சம் பெறத் தொடங்கிய காலம் வரை மதவழிபாடு என்பது பயம் மற்றும் அச்ச உணர்வு காரணமாக எழுந்த சுய அடக்க வழிபாடாகவே இருந்து வந்தன நாம் பல்வேறு நிலைகளில் முடியும் இயற்கை பற்றிய போதிய புரிதலின்மை காரணமாக அதனைக் கையாள முடியாத அச்சம் மற்றும் பயஉணர்வு காரணமாக அதனை வழிபாட்டுப் பொருளாக உயர்த்திக்கொண்ட நிலை ஐம்பது தலங்களினதும் வழிபாடாக மாறியிருந்ததனை நாம் காணுகின்றோம். அதேபோல கொடுமையான கடுமையான காலங்களை வெல்ல



முறைக்கும் ஏற்பட்ட நெருக்குதல்களிலிருந்து வன்னிச் சமூகத்தை விடுவிக்க ஆலய வணக்க முறையும், இறைபக்தியும் விரும்பத்தக்கதாகும். அதனை ஒரு முன்னோக்கற்ற ஒப்புவிப்பாக மாற்ற முயல்வதனையே மறு சிந்திப்பிற்கு உட்படுத்தப்படல் வேண்டும்.

இவ்வகையில் இரணைமடுவின் பெருங் கரையில் அமர்ந்து வன்னிக்கு முழுவதும் தன் பெரும் கருணை வழங்கும் அம்பிகையின் நீரானது கிளிநொச்சி சமூகத்தின் உருவாக்கத்திற்குத் தொடக்கப் புள்ளியாக இருந்துள்ளது. தொடராக அது தனித்தன்மைவாய்ந்த சமூகமாக மாறி இன்று தனக்கென ஒரு பொருளாதாரக் கட்டுமாணத்தின் உறுதி செய்வதில் இந்நீர் மூலம் மூலகாரணமாகும். நெற்குவியலாக வன்னிக்கும் கிளிநொச்சியின் பிரதான நீர் மூலமான இரணைமடுவின் ஆன்மீக உறுதிப்பாட்டை குடியேற்ற சமூகத்தில் நிறுவுவதில் இந்தப் பெருங்கோயில் ஆற்றிவரும் பங்காகிறது. அவ்வாறான இலக்குகள் சமய நெறிமுறைக்கேற்ப அமுலாக்கம் செய்யப்படும்போது பல்வேறு செயற்பாடுகளை அது உள்ளடக்குகின்றது. இவ்வகையில் நவீன விஞ்ஞான வளர்ச்சி பரிமாணத்தில் வாழும் மனித சூழலின் வழிவழியாகத் தொடரும் தொன்மை இயல்புகள் மாற்றத்திற்குள்ளாக்கப்படுவது அவசியமாகிவிட்டது. தீட்சைவைத்து சமயப் பிரவேசம் செய்யும் முறை இன்று சவால் மிகுந்த செயற்பாடாக மாறியுள்ளபோது சமயப் பிரவேசத்திற்கான மறுமார்க்கம் அறிமுகம் செய்யப்பட வேண்டியது காலத்தின் தேவையாகும். அதுபோல முறையான சமஸ்கிருதத்தை விளக்கிக்கொள்ளாத பல அந்தண சிவாச்சாரியார்களால் இந்து தன் மதத்திற்கான தலைமைத்துவம் வழங்கப்பட முயலுவதும் கேளிக்கையாக மாறிவருகிறது. வியாபார நோக்கோடான ஆற்றுப்படுத்தல் உளநிலை ஆறுதலையும் உள உறுதிப்பாட்டையும் நிலை நிறுத்துமா என்பது கேள்விக்குரியதாகும் எவ்வாறாயினும் போரும் யுத்த மோகமும் சூழ்ந்திருந்த எமது சமூக அமைப்பில் மீள அமைதியை கொண்டு வருவதிலும் உள ஆற்றுதலை ஏற்படுத்தியதிலும் ஆலய வழிபாட்டு முறை இந்த சமூகத் தின் இருப்பை உறுதி செய்த ஒரு அடிப்படை காரணியாகும். காலநிலை காரணமாக எப்போதுமே பொய்த்துப் போகும் விவசாய செய்கையில் நம்பிக்கை ஒளியை ஏற்றி தூண்டி பிரகாசிக்க அம்பிகை ஆற்றும் பங்கும் தோழமையுடனான நவீன வணக்க முறைக்குரியதாகும் கால மாற்றத்துக்கேற்ப இவ்வழிபாட்டு தலத்தின் சமூகப் பணிகளும் ஒரு சமூக முன்னுதாரணமாகும் பணிதலும் துணிதலுக்குமான வாழ்வுக்கு நம் சமூகத்தை பழக்கப் படுத்துவோம்.

அமரசிங்கம் கேதீஸ்வரன் B.A.,(Hons) M.phil (Ecn)
உதவி திட்டமிடல் பணிப்பாளர்,
மாவட்டச் செயலகம்,
கிளிநொச்சி.

உ
சிவமயம்

# அம்பாளின் அருளாட்சி ஆரம்பம்

முதலில் 1958ஆம் ஆண்டளவிற் கிளிநொச்சியின் இயற்கைச் சூழல் பற்றி ஒரு கண்ணோட்டம் செலுத்துவோம். பளையில், கிளிநொச்சி DRO கந்தோர் இயங்கியது. கண்டி வீதியிற் கிளிநொச்சிக் கந்தசுவாமி கோயில் ஒரு சிறு மண்டபத்துடன் இருந்தது. பக்கத்தில் ஒரு சைவ ஓட்டல்; இன்னும் தெற்கு நோக்கிச் செல்ல சைவத்தின் சாப்பாட்டுக் கடை. பின் வட்டக்கச்சிக்குத் திரும்பும் காக்காகடைச் சந்தி. அதன் மேற்புறத்தில் வெற்றிவேலு விதானையாரின் வீடுவளவு. அதற்கடுத்தாற் போல ஜெயினுலாவுதீன் காக்கா சகோதரர் களின் கடை (காக்கா கடை). மேலும் தெற்கு நோக்கின் புதுமுறிப்பு றோட் சந்தியில் வன இலாகா காட்டு மரக்கன்றுகள் உற்பத்தி நிலையம், இவற்றைச்சுற்றி அடர்ந்த காடு இருந்தது. புகையிரத நிலையத்துக்கு முன் மரஅரிவு ஆலையும், விடுதிகளும் இருந்தன. புகையிரத தெற்குப்பக்கக் கைகாட் டிக்குப் பக்கத்தில் புதுமுறிப்பு பகுதி களில் இருந்து யானைக் கூட்டம் தண்ணீர் குடிப்பதற்கு கிளிநொச்சிக் குளத்துக்கு வந்து போகும் யானைப் பாதை இருந்தது.

கண்டி றோட், புது முறிப்பு றோட் சந்தியிலிருந்து (இப்போ டிப்போ றோட்) இரு நூறு யார் தொலைவிற் புகையிரதப் பாதைக்குப் பக்கத்தில் 'யோகர் சுவாமிகளின்' பூரண ஆசியுடன் "ஸ்ரீ காந்தா ஐயா' அவர்களின் முழு முயற்சியிற் கோண்டாவில் கிராம முன்னேற்றச் சங்கப் பயிற்சி முகாமிலிருந்து பதினொரு படித்த இளைஞர்களின் திடசிந்தனையுடன் ஒரு முன்னோடித் திட்டம் முதலில் 'இளங்கதிர் குழு வாழ்க் கைப் பண்ணை' என்ற பெயருடன் 1958ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 29ஆம் திகதி ஆரம்பிக்கப் பட்டது. ஆரம்பித்த பின்பு ஸ்ரீ காந்தா ஐயா' என்னையும் யோகர் சுவாமிகளிடம் கூட்டிச் சென்றுள்ளார். சுவாமிகள் எனக்கும் ஆசிகள் வழங்கிப் பல விடயங்களைக் கூறினார். அப்பொழுது ஸ்ரீ கந்தாஐயா அவர்கள் இவர்களில் பதினொரு பேர் முன்வந்து திட்டத்தை ஆரம் பிப்பதாகக் கூற; சுவாமிகள் நூற்றுக் கணக்கானோரைச் சேர்த்து அங்கு குடியமர்த்துமாறும் ஒரு கிராமமே உருவாகப் போகின்றது என்றும், அதற்குக் 'கனகபுரம்' என்று, பெயர் சூட்டுமாறும் கூறியருளினார்.

அவ்வாறு 111 பேர் இத்திட்டத்தின் கீழ் வந்து குடியேறினர். அன்றுமுதல் அவ்வூரின் பெயர் "கனகபுரம்' ஆகியது. டிப்போ றோட் தெற்கு வடக்குப் பக்க மெல்லாம் அடர்ந்த காடாகவே அப்பொழுது இருந்துள்ளது. வட்டக்கச்சி றோட்டின் வடக்குப் பக்கத்திற் கிளிநொச்சிப் பாடசாலையும், தெற்குப் பக்கத்தில் நீர்ப்பாசன இலாகாவும், யோகசுவாமிகள் களஞ்சியப் பொறுப்பாளராக இருந்த காலத்தில் நாட்டப்பட்ட மாமரம் பெரு விருட்சமாக வளர்ந்து நீர்ப்பாசன இலாகாவுக்கும் கண்டி வீதிக்குமிடையில் இருந்தன. கிளிநொச்சிக் குளத்தைத் தாண்டினால் அடர்ந்த காடாகவே இருந்தது. அக்காடு இரணைமடுக் குளம்வரை பரந்திருந்தது. அப்பாதையில் இரணைமடுவுக்கு, செல்வது மிகவும் அபாயகரமானதாகவே இருந்தது.



இரணைமடுக் குளத்தின் பராமரிப்பு அலுவலராகக் காலஞ்சென்ற "இராசேந்திரம்' ஓவசியர் இருந்துள்ளார். கிளிநொச் சியிலிருந்து முறிகண்டிக்குப் போகும் வழியில் "சேவிஸ்' றோட் சந்தி இருந்தது. அச்சந்தியிலிருந்து கிழக்கு நோக்கி சேவிஸ்றோட் சென்றது. அது இரணை மடுக் குளத்திற்குச் செல்லும் கிறவற் பாதையாகும். அப்பாதையின் இருபக்க மும் அடர்ந்த யானைக்காடு. யாவரும் அவ்வழி யாற் செல்வது கிடையாது. ஒரே பயங்கரப் பாதை.

இந்தச் சூழலில் ஸ்ரீ காந்தா ஐயாவின் திருவுளத்திலே இரணைமடுக் குளத்துக்குப் பக்கத்தில் ஒரு அம்பாள் ஆலயம் அமைக்க வேண்டும் என்று பட்டது. அக்கருத்து அக்காலத்தில் கிளிநொச்சிப் பகுதிப் பிரபல மக்கள் மத்தியில் வேரூன்றியது. அதன் பிரகாரம் திட்டம் வகுக்கப்பட்டு யோகர் சுவாமிகளிடம் சென்று அவ்வாலய மூலஸ் தானத்தைக் குறித்துக் காட்டும்படி ஸ்ரீ காந்தா ஐயா கேட்டுள் ளார். அப்பொழுது சுவாமிகள் நீங்கள் சுபவேளை குறித்து வாகன அணியிற் செல்லும்போது ஒரு பருந்துப் பறவை தாழப் பறந்து வாகன அணிக்கு முன் செல்லு மென்றும், அப்பறவை இரணை மடுக் குளத்தின் மேற்குக் கரையில் உள்ள ஒருபாலை மரத்தில் அமரும் என்றும், அம்மரத்தடியினையே மூலஸ்தானமாகக் கொள்ளுமாறு அருள் வாக்களித்துள்ளார். அவ்வாறு சுப வேளையில் ஸ்ரீ காந்தா ஐயா முருகேசம் பிள்ளை (அப்போதைய DRO) V. K. முருகேசு, யோகலிங்கம் J.P. இராசேந்திரம் ஓவசியர் ஆகியோர் வாகனங்களில் வின்சன் றோட் வழியாகச் சென்றபோது பருந்து தாழப்பறந்து சென்று மூலஸ்தானத்திற்கு இடம் வகுத்து கொடுக்க, ஆரம்பித்ததே இவ்வாலயம்.

இவ்வாலயத்திற்குச் சுவாமிகள் "கனகாம்பிகை அம்பாள்' என்று பெயர் சூட்டியுள்ளார். பிரதிஷ்டாபிடேகத்தின் போது இரணைமடுக் குளத்தின்கீழ் உள்ள அனைவரும் பானை வைத்துப் பொங்க வேண்டும் என்று அறிவுறுத்தப் பட்டனர். அவ்வாறு குடமுழுக்கின் போது 1008 பானைகளிற் கோயிலின் நாலா பக்கமும் பக்திப் பரவசமான பொங்கல் நடைபெற்றது. இக் காலப்பகுதியிற் கிளிநொச்சி திருநெறிக்கழகம், மகாதேவா ஆச்சிரம தவத்திரு வடிவேற் சுவாமிகள் ஆகியோர் பிரார்த்தனைகளும், சொற் பொழிவுகளும் செய்து சிறப்பித்துள் ளனர்.

ஆலய நித்திய நைவேத்திய செலவுக், கென்று ஒவ்வொரு ஊரவர்களும் பங்கு கொண்டுள்ளனர். அவ்வாறு கனகபுர வாசிகள் ஒவ்வொரு வெள்ளிக்கிழமை களிலும் ஒவ் வொருவராக மாறிமாறிப் பூசைப் பொருட் களுடனும், ஐயரின் உணவுக்கான காய்கறி களுடனும் ஒழுங்கு முறையிற் சென்று வந்துள் ளனர். ஸ்ரீகாந்தா ஐயாவின் முழு முயற்சியினால் இரணைமடுக்குளம் மூன்று அடிக்கு வான்பரப்பு உயர்த் தப்பட்டதும், அதனால் பல நூறு ஏக்கர் வயல் நிலங்கள் விளைநிலங்களாக மாறியதும் யாவரும் அறிந்த விடயமாகும். அன்று 1008 பானைகளை வைத்துப் பொங்க ஒழுங்கு செய்த ஸ்ரீகாந்தா ஐயாவின் மகள் "மாலினி இராசநாயகம்' இன்று அம்பாளினுடைய அருளினால் அன்னதானத்திற் பங்குகொள்ளுகின்ற படம் இத்துடன் தரப்படுகின்றது.

மழைக் காலத்தில் நீர் நிரம்பி வான் பாய்வதும்,

அதில் மீன்கள் துள்ளி விளையாடுவதும், வெவ்வேறு நாட்டுப் பறவைகள் குளத்தின் நடுவே காணப்படும் பட்ட மரங்களில் மீனுக்காகக் காத்திருப்பதும் கண்கொள்ளாக் காட்சிகளாகும். அது மாத்திரமின்றி வெளிநாட்டு இரும்பு வான்பறவையும் வந்து இக் குளத்தில் இறங்கிச் சென்றது என்றால்! அதுவும் ஒரு வரலாற்றுச் சிறப்பு மிக்க அற்புதக் காட்சியன்றோ அம்பாளின் கிருபை இன்றேல் இதுவும் நடக்குமா? அம்பாள் ஆலயத்தைச் சுற்றி ஆநிரைகளும் இயற்கை வனப்பும் உள்ளத்தினைக் கொள்ளைகொள்ளும் காட்சிகளன்றோ!

சேவில் றோட்டில் மயில்கள் நடனமாடுவதும் மான்கிளைகள் துள்ளி விளையாடுவதும், யானைகளின் கூட்டம் வரிசையில் செல்வதுமான இயற்கைச் சிறப்பினைக் கொண்டதாக அன்று கிளிநொச்சி இருந்துள்ளது.

இன்று கிளிநொச்சி ஒரு மாநகரமாகக் காட்சியளிப்பதும், கோட்டை கொத்தளங்களும், வீதி விசாலிப்புகளும் நிறையக் காணக் கூடியதாக உள்ளன. பல்லாயிரக்கணக்கான உயிர்கள் தங்களை அர்ப்பணித்தனால் கிளிநொச்சி ஒரு புனித பூமியாக; தியாகிகளின் உறைவிடமாக வளம் பெற்றுள்ளது. தியாகச் செம்மல்களின் உயிர்த்தியாகங் கள்யாவும் உலக மகா சக்தியான அம்பாளுக்கு அர்ப்பணமாகும். அவர்களது ஆத்மா இன்றும் என்றும் பேசி கொண்டேயிருக்கும்.

யோக சுவாமிகள் சில அடியார் களுடன் முறிகண்டிப் பிள்ளையாரைத் தரிசிக்கச் சென்றதும், அடியார்கள் சுவாமிகளைக் காணாது பக்கத்துக் காட்டுக்குள் தேடியதும், அவர் அங்கு சிவக்கோலத்தில் சர்ப்பம் அணிந்த சீருடன் இருப்பதைக் கண்டு சிவத்தரிசனம் கிடைத்ததாக அகமகிழ்ந்து தரிசனம் செய்துள்ளனர். இது சுவாமிகளின் வரலாறாகும். இவ்வாறு ஞான முனிவனின் திருப்பாதங்கள் பட்ட புனித பூமியல்லவா கிளிநொச்சி. தியாகங்கள் வீணாகுமோ?

கனகாம்பிகை அம்பாளின் அருளாட்சியும், யோகசுவாமிகளின் கருணை நோக்கும் தியாகச் சுமை தாங்கிய புனித பூமியாகத் திகழ்வது கிளிநொச்சியாகும்.

'பேதித்து நம்மை வளர்த்தெடுக்கும் கருணை கொண்ட அம்பாள் காலத்தால் கருணை காட்டுவாளாக'.

நீரானாய் நிலலானாய் வளியானாய் விசும்பானாய்
காரானாய் கடலானாய் மதியானாய் கதிரானாய்
ஊரானா யுடலானாய் உலகானாய் பலவானாய்
பேராயி ரம்மானாய் எனப்பேசார் பிறவார்தானே.

– நற்சிந்தனை


க. இராசரத்தினம்
1ஆம் பண்ணை,
கனகபுரம், கிளிநொச்சி.

அகில இலங்கை சமாதான நீதவான்,
ஒய்வுபெற்ற நீதிமன்ற பதிவாளர்,
சத்திய மொழிபெயர்ப்பாளர்.




உ

ஓம் மாதா

# இரணைமடு கனகாம்பிகை அம்பாள்

## தோத்திரம்

யாத்தவர் :
**மகாதேவ ஆச்சிரமம் ஸ்ரீமத் வடிவேல் சுவாமிகள்**

1. பொன்னார் புரிசடைப் புண்ணியன் பொன்னடி போற்றும் அன்பர்
சின்னார் சிறுபிணி சேராமற் செல்வம் செழித்திடவே
முன்னா விரணைமடு எனும் கங்கையின் பாங்கமர்ந்தாள்
என்னாம் கனகாம்பிகை தனதின்னருள் எந்தமக்கே.

2. எமக்கு மதின்னருள் வேண்டு மென்றெண்ணி இரங்கிநிற் போர்
தமக்குத் தர்ணியில் தாழ்வின்றிச் செல்வம் தழைத்து மல்க
உமக்கே உதவ உயர் கங்கைப் பாங்கர் உகந்திருந்தோம்
எமக்கே பரமென ஏற்றாள் எமைக்கன காம்பிகையே.

3. கையே சிரமிசைக் கூப்பிக் கண்ணீர் மல்கிக் கால்தளர்ந்து
மெய்யே உருகி மனமாசு தீர்த்த நின் மெய்யடியார்
நைவே அகற்றி நல்வாழ்வே பெற நல் லமுதளித்த
மொய்யார் தடங்கரை முன்ன மர்ந்தாய் கனகாம்பிகையே.

4. ஆரணம் யாவும் அறிதற்கரிய அரும் பொருளே
பேரருளாகிப் பிறப்பறுத் தாண்ட பெருந்திருவே
தாரணி முற்றும் தழைத் தோங்கத் தண்ணருள் தான்சுரக்கும்
காரணியே கடைக்கண் ணருள்செய் கனகாம்பிகையே.

5. நீரா யிருப்பது நின்னருள் நீரின் நிறை வளமாம்
சீரா யிருப்பதும் நின்னரு ளென்று தெளிந்த அன்பர்க்
காரா வமுதளித் தாட்கொண்டு ஆனந்த வாழ்வுதவ
பேராத நீர் மடுப் பேணி வைத்தாள் கனகாம்பிகையே.

6. பேணித்தன் மெய்யடியார் பெறும் பேறும் பெருவளமும்
காணிக்கை யாய்க்கொண்டு கற்பகமாய் நின்று காத்திடுவாய்
தோணித் தொழில்பூண்டு தொண்டர் பவக்கடலைக் கடப்பாய்
ஆணிப் பொன்னே அடியேம் துயர்தீர்க்கும் அருமருந்தே.

7. மருந்தாகி மந்திரமாகி மறுமைப் பிணி யகற்றும்
பெரு மருந்தாம் பரவித்தையுமாகிப் பெறற் கரிய
குருவாகி குற்றம் பலகளைத்தாண்ட குணக்கடலே
தருவாய் உனது தடமலர்த்தாள் கனகாம்பிகையே.

8. கனகப் பெருங்கங்கை நீரும் உமது கடைக்கண்களும்
மனக்கேதம் மாற்றும் மருந்து மலப் பிணிக்காம் உடற்கு
தினமே உறும் பசிதீர்க்கும் திருவமுதாய்த் திகழு
மெனவே உகந்திருந்தாய் எமையாழ் கனகக்குன்றமே.

9. குன்று தோறாடும் குமரனைத் தந்து குறை தவிர்ப்பாய்
மன்றில் நின்றாடிய வள்ளலின் பாங்கமர் மாமணியே
நின்றும் இருந்தும் நடந்தும் நினைப்பவர் நெஞ்சகலாய்
என்றும் திருவடி யேத்தி நின்றேன் கனகாம்பிகையே.

10. நின்றேன் நினது திருவருட் பாங்கின் நிறைகருணை
என்றே பொழிந்து என்னை ஏற்றருள்வாய் என்துயர் அகற்றி
குன்றே யனைய கொடுவிட மாயையின் கோளகல
நின்றே எமை யாண்டருள் குருவாம் கனகாம்பிகையே.

- முற்றிற்று -



## கடைக்கண்ணருள் தா

தாரணியை என்று நற்காரணியெனப் பெயர்கொள்
சங்கரி தமியனிடரை செதித்து மும்மலப்
பகைவரைச் செயிக்கவருள் செய்த நின்னருள் வாழிகாண்
தீரமிகு போதநிலை பெற்றுனது திருவடிப்பேறு பெற்றுய்ந்த அன்பர்
தீதகல நினதுதிரு நாமமேசெப்பியே திவ்விய நிலை பெற்றுய்ந்தனர்.
ஆராத காதலால் அடியேமும் உமது திருநாமமே
செப்ப எண்ணி அல்லலற அருளாட்சி அகமெலாம்
பொங்கியே ஆனந்தவாழ்வு மல்கிச்
சீராயிருந்தருள ஒருநாம மோருருவ மொன்றிலா
யுன்றனக்குக் கனகாம் கைப் பெயர்
தரித்துனை வழுத்தினோம் கடைக்
கண்ணருள்தர அன்னையே.

ஓம் சாந்தி.

(22.01.1961ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட
இரணைமடுப் பதிகம் மீள் நூலுருவாக்கம் செய்யப்பட்டுள்ளது)

## திருப்புகழ்

ஏறுமயில் ஏறிவிளை யாடும்முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறும் அடியார்கள் வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமானே.

உ
தேவி துணை

# வரலட்சுமி விரத மகிமை

ஆவணி மாத வெள்ளிக்கிழமை எல்லோரது வீடுகளிலும் ஏதோ பூஜை நடப்பதற்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. உஞ்சவிருத்தி பிராமணர் ஒருவர் அதைப் பார்த்தார். கண்ணில் தென்பட்ட பழுத்த சுமங்கலி ஒருத்தியை அழைத்து "என்ன விசேஷம்?" என்று கேட்டார். அதற்கு அந்தச் சுமங்கலி "ஆவணி வெள்ளிக்கிழமையான இன்று மகாலட்சுமி பூஜை செய்கின்றோம்" என்று சொன்னாள்.

உடனடியாக வீடு திரும்பிய உஞ்சவிருத்தி பிராமணர் தன் மனைவியை அழைத்து, தினந்தோறும் பத்து வீடுகளில் பிச்சைஎடுத்து, அதில் கிடைப்பதை வைத்து ஏதோ நமது வாழ்நாள் ஓடிக்கொண்டிருக்கிறது. வரும் வழியில் பல வீடுகளில் மகாலட்சுமி பூஜைக்கான ஏற்பாடுகள் செய்து கொண்டு இருப்பதைப் பார்த்தேன். ஆவணி மாத வெள்ளிக்கிழமை மகாலட்சுமி பூஜை மிகவும் விசேஷம் என்று சுமங்கலி ஒருவர் கூறினார். நாமும் லட்சுமி பூஜை செய்யலாம். நான் ஒரு பிராமணரைச் சாப்பிட வரச்சொல்லியிருக்கிறேன். நீயும் ஒரு சுமங்கலியை வரவழைக்க ஏற்பாடு செய்." என்றார்.

"சரி" என்று ஒப்புக் கொண்ட அவர் மனைவி, தன் நான்கு மருமகள்களில் ஒருத்தியை அழைத்து விவரங்களைச் சொல்லி, குங்குமமும் எண்ணெயும் கொடுத்து அனுப்பினார்.

மாமியார் கொடுத்த பொருள்களுடன் நடந்து சென்ற மருமகள், சுமங்கலி ஒருத்தியைப் பார்த்தாள். அவளிடம் குங்குமத்தைக் கொடுத்து, "இன்று எங்கள் வீட்டில் மகாலட்சுமி பூஜை செய்யப் போகிறோம். எண்ணெய் தேய்த்து நீராடிவிட்டு வாருங்கள்" எனப் பணிவுடன் வேண்டினாள். அந்தச் சுமங்கலியும் ஒப்புக்கொண்டு எண்ணெய் வாங்கிச் சென்றாள்.

பூஜை முடிந்தது. ஆனால் வருவதாக ஒப்புக் கொண்ட சுமங்கலி வரவில்லை. பூஜை செய்து வைக்க வந்திருந்த அந்தணரின் அனுமதி பெற்று, சுமங்கலிக்காக ஓர் இலையில் உணவு வகைகளைப் பரிமாறி, அத்துடன் மஞ்சள், குங்குமம், வெற்றிலை - பாக்கு, தட்சிணை ஆகியவற்றை வைத்து ஒரு கூடையால் மூடி வைத்தார்கள். அதன் பிறகு வீட்டில் உள்ள எல்லோரும் உணவு உண்டனர்.

அடுத்த வெள்ளிக்கிழமை. உஞ்சவிருத்தி பிராமணர், மகாலட்சுமி பூஜைக்கான ஏற்பாடுகளை மீண்டும் செய்தார். அன்று இன்னொரு மருமகள் குங்குமம், எண்ணெய் ஆகியவற்றுடன் சுமங்கலியைத் தேடிப் போனாள். கடந்த வெள்ளிக்கிழமை வந்த அதே சுமங்கலி, "இந்த வெள்ளிக்கிழமை கண்டிப்பாக நான் வருகிறேன்" என்று சொல்லி குங்குமத்தையும் எண்ணெயையும் பெற்றுக் கொண்டு போனாள். ஆனால் அன்றும் அவள் வரவில்லை. உஞ்சவிருத்தி பிராமணர் வீட்டில் கடந்தமுறை செய்ததைப் போலவே பூஜையை முடித்து, சுமங்கலிக்கு உரியவற்றை வைத்துக் கூடையால் மூடிவிட்டு உணவு உண்டார்கள்.

இப்படியே நான்கு வெள்ளிக்கிழமைகள் கடந்த. ஆவணி மாதக் கடைசி வெள்ளிக்கிழமை "இந்த முறை மருமகள்களை அனுப்பிப்பலனில்லை. நாமே போவது நல்லது" என்று தீர்மானித்த உஞ்சவிருத்தி பிராமணரின் மனைவி, குங்குமத்தையும் எண்ணெயையும் எடுத்துக் கொண்டு சுமங்கலியை அழைக்கப் புறப்பட்டாள்.

நான்கு வாரங்களாக மருமகள்களின் கண்ணில்பட்ட அதே சுமங்கலியே அப்போதும் எதிர்ப்பட்டாள். "ஆகா... இந்த வாரம் கடைசி வெள்ளி ஆயிற்றே. ஏமாற்ற மாட்டேன். கண்டிப்பாக வருகிறேன்!" என்று வாக்குறுதி தந்து, வழக்கம் போலவே குங்குமத்தையும் எண்ணெயையும் பெற்றுக் கொண்டு போனாள்.

உஞ்சவிருத்தி பிராமணரின் வீட்டில் அனைவரும், சுமங்கலியின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். அப்போது பளபளக்கும் பட்டாடையுடன் உடலெங்கும் தங்கமயமான ஆபரணங்கள் ஜொலிக்க அந்தச் சுமங்கலி அவர்களது வீட்டுக்குள் நுழைந்தாள்.

அதுவரை அந்த வீட்டில் இருந்த வறுமை, போன இடம் தெரியாமல் மறைந்தது. வீட்டில் இருந்தவர்கள் அனைவரின் உடம்பிலும் ஆபரணங்கள் மின்னின. பட்டாடைகள் சரசரத்தன. வந்தது மகாலட்சுமிதான் என்பது புரிந்தது. வீட்டுக்குள் வந்த சுமங்கலி, பூஜையில் ஸ்வாமியின் அருகில் உட்கார்ந்தாள்.

பெண்கள் அனைவரும் மகாலட்சுமிக்கு மஞ்சள், குங்குமம் இட்டு, பூச்சூடினார்கள். மங்கள ஆரத்தி எடுத்தார்கள். அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே, மகாலட்சுமி அங்கிருந்த கலசத்துக்குள் மறைத்தாள்.

ஆவணி மாதம் எல்லா வெள்ளிக்கிழமைகளிலும் மகாலட்சுமியைப் பூஜிப்பவர்கள் அடையும் பலனை இந்தக் கதை விவரிக்கிறது.

இன்றும் ஆந்திரா, கர்நாடகம் போன்ற பகுதிகளில் ஆவணி மாதத்தின் எல்லா வெள்ளிக்கிழமைகளிலும் மகாலட்சுமி பூஜை செய்யும் வழக்கம் உள்ளது.

**வரலட்சுமி விரதம் வந்த விதம்**

ஐஸ்வரியங்கள் அனைத்தையும் கொடுக்கக் கூடிய வரலட்சுமி விரதம் தொடர்பான கதையும் பூஜை முறையும் வாசகர்களின் வளமான வாழ்வுக்காக இங்கு வழங்கப்பட்டுள்ளது.

இந்த விரதத்தை மகாலட்சுமியே உபதேசித்திருக்கிறார். அதன் விவரம் பின்வருமாறு:

அந்த சௌராஷ்டிர மன்னன் பெயர் பத்ரச்ரவா. அவன் மனைவி சுசந்திரிகா. மன்னன் எப்போதும் மங்கலகரமான வார்த்தைகளையே பேசுவான். கேட்பான். அவன் மனைவியான சுசந்திரிகா, நிலவைப் பழிக்கும் முகம் கொண்டவள். கோபத்தை நீக்கி உள்ளத்தைக் குளுமையால் நிரப்பி இருப்பவள். குணம், கல்வி, தர்மம், கற்பு என அனைத்திலும் முதன்மை வகிப்பவள்.

அவர்களுக்கு ஏழு ஆண் குழந்தை களும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தனர். பெண்குழந்தையின் பெயர் சியாமளா.

அரசியான சுசந்திரிகாவின் நற்குணங் களும் நற்செயல்களும் அவள் மேல் கருணை கொள்ளுமாறு மகாலட்சுமியைத் தூண்டின.

வெள்ளிக்கிழமை துவாதசி அன்று மகாலட்சுமி, பழுத்த சுமங்கலி ஒருத்தியின் வடிவில் அரசியின் அந்தப்புரத்தில் நுழைந் தார். வயிறாரச் சாப்பிட்டு, வாய் நிறையத் தாம்பூலத்துடன் இருந்த அரசி, "சுமங்கலியே! யார் நீங்கள்? எதற்காக வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

அவளை நோக்கிக் கையை நீட்டிய மகாலட்சுமி "சுசந்திரிகா! நீ நல்லவள்; உத்தமி. ஸ்ரீதேவியின் அவதார தினமான இன்று, வயிறு புடைக்கச் சாப்பிட்டுவிட்டு வாய் நிறையத் தாம்பூலம் சுவைத்துக் கொண்டிருக்கிறாயே.... இது நியாயமா? என்று கேட்டார்.

எவ்வளவுதான் நல்லவர்களாக இருந்தாலும் அவர்கள் செய்த தவறைச் சுட்டிக் காட்டினால் கடுங் கோபம் வந்துவிடும். சுசந்தி ரிகா மட்டும் விதிவிலக்கா என்ன? அவளுக்கும் கோபம் வந்து விட்டது. கையை ஓங்கி, மகாலட்சுமியின் கன்னத்தின் அறைந்தாள்.



மகாலட்சுமியின் கண்கள் கலங்கிவிட்டன. கண்களில் நீர் வழிய அங்கிருந்து நகர்ந் தார்.

மகாலட்சுமி உள்ளே நுழையும்போது அவரைப் பார்த்தாள் சியாமா. இப்போது திரும்பி வருவதைக் கண்டு, "அம்மா! ஏன் அழுகிறீர்? என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

கண்களைத் துடைத்துக் கொண்ட மகாலட்சுமி, "பெண்ணே! உன் தாயாருக்கு நல்லது சொல்ல வந்தேன். ஆனால் அவளோ என்னைஅடித்து அவமானப்படுத்திவிட்டாள். அதனால்தான் திரும்பிப் போகிறேன்" என்றேன்.

"அந்த நல்லதை எனக்குச் சொல்லிக் கொடுங்களேன்" என்ற சியாமா, மகாலட் சுமியை உட்கார வைத்து உபசரித்தாள்.

மகாலட்சுமியின் மனம் குளிர்ந்தது. அவர் வரலட்சுமி விரதம் கொண்டாட வேண்டிய வழிமுறைகளை சியாமாவுக்கு உபதேசித்தார். அன்றுமுதல் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் சியாமா, தவறாமல் வரலட்சுமி பூஜை செய்து வந்தாள்.

அதே சமயம் லட்சுமிதேவியை அவமதித்தால் சியாமாவின் பெற்றோரிடம் இருந்த செல்வங்கள் அனைத்தும் வெகு வேகமாகக் கரையத் தொடங்கின. மன்னன் மனம் அதிர்ந்தான். "ராஜ்யம் நம் கையை விட்டுப் போவதற்குள் மகளுக்கு மணம் செய்து விட வேண்டும்." என்று தீர்மானித் தான்.

அதன்படி மாலாதரன் என்ற மன்னனுக்கு சியாமாவைத் திருமணம் செய்து கொடுத்து, வழி அனுப்பி வைத்தான்.

புகுந்தவீடு போன பின்பும் சியாமா வரலட்சுமி பூஜையை நிறுத்தவில்லை. அதன் பலனாக அவள் கணவனான மாலாதரன் ஐஸ்வரியக் கடலில் நீந்தினான்.

சியாமாவின் பெற்றோரோ,... பகை வர்களால் விரட்டப்பட்டு நாட்டை விட்டு ஓடினார்கள். உணவுக்கும் உடைக்கும் வழி யின்றி ஊர் ஊராகத் திரிந்தார்கள்.

தகவல் அறிந்த சியாமா வருத்தப் பட்டாள். அவர்கள் தங்கியிருந்த இடத்துக்கு தன் சேவகன் மூலம் உணவளித்து வந்தாள். நாட்கள் கடந்தன.

ஒருநாள்.... பெரிய பாத்திரம் ஒன்றில் தங்க நாணயங்களை நிரப்பி பெற்றோரிடம் கொடுத்த சியாமா, "இதை வைத்துக் கொண்டு எங்காவது போய்ப் பிழைத்துக் கொள்ளுங் கள்" என்றாள்.

மகள் நகர்ந்ததும் ஆசையுடன் மனைவி சுசந்திரிகாவை அழைத்த மன்னன் பத்ரச்ரவா., தங்கப் பாத்திரத்தைத் திறந்து பார்த்தான். அதன் உட்புறத்தில் கரித்துண்டு கள் நிரம்பி இருந்தன.

கெட்ட காலம் வந்தால் கனக (தங்க) மும் கரியாகிப் போகும். என்பது அவர்கள் விசயத்தில் உண்மையானது. வருத்திக் கதறினர் அவர்கள்.

சியாமாவுக்குத் தகவல் தெரிவித்தார் கள். உடனே அவளுக்கு, தன்தாய் மகாலட் சுமியை அவமதித்து அடித்தது நினைவில் வந்தது. அம்மாவை அழைத்து நடந்த விவரங் களைச் சொல்லி, வரலட்சுமி விரதத்தைப் பூஜை முறைகளுடன் செய்யுமாறு கூறினாள்.

மகளின் வார்த்தைகளைக் கேட்டு மனம் வருந்திய தாய், "சியாமா! லட்சுமி தேவியை அவமானப்படுத்தியதற்கு எனக்குத் தக்க தண்டனை கிடைத்துவிட்டது. நீ சொன்னபடி வரலட்சுமி விரதத்துடன் பூஜையை முறைப்படி செய்கிறேன்!" என்றாள்.

அதன்படியே செய்தாள் லட்சுமியின் கருணையால் நாளுக்கு நாள் நன்மைகள் வந்தன. மன்னன் மனத்தில் தைரியலட்சுமி புகுந்தாள். அவருடைய மந்திரிகளும் சேனாதிபதிகளும் படைகளை முடிந்த அளவு திரட்டிக்கொண்டு மன்னனிடம் வந்தார்கள். தகவல் அறிந்த பகைவன், நாட்டை விட்டு ஓடினான். ராஜலட்சுமி மன்னனிடம் வந்து சேர்ந்தாள்.

வரலட்சுமி விரத பூஜையால், தன் பெற்றோர் இழந்த செல்வத்தை மீண்டும் பெற்றதைக் கேட்டு சியாமா மகிழ்ந்தாள். ஆனால் அவள் கணவனான மாலாதரனோ, "சியாமா! உன் பெற்றோர் எல்லாவற்றையும் இழந்து பஞ்சப் பரதேசிகளாக ஆகி அலைந் ததைப் பார்த்தாய் அல்லவா? போகட்டும்! உன் பிறந்த வீட்டிலிருந்து என்ன கொண்டு வந்தாய்?" என்று இழிவாகப் பேசி இடித்தான்.

சியாமா கலங்கவில்லை. "என்ன கொண்டு வந்தேன் என்பதை நாளை சாப்பிடும்போது சொல்கிறேன்!" என்றாள்.

மறுநாள் உணவு நேரம் மாலாதரன் உணவு உண்ண உட்கார்ந்தான். "ஹும்... இவள் பிறந்த வீட்டில் இருந்து வரலட்சுமி விரதத்தைத்தான் கொண்டு வந்தாள். வேறு எதைக் கொண்டு வந்தாள்?" என்று அவன் மனம் அசைபோட் டுக் கொண்டு இருந்தது.

கணவனது இலை யில் கனிவோடு உணவுவகை களைப் பரிமாறினாள் சியாமா. சுவைத்துப் பார்த்த மாலாதரன் முகம் மாறி னான். "ஒன்றில் கூட உப் பில்லை. மனிதன் தின்பானா இதை!" என்று கடுகடுத் தான்.

"உப்பு என்பது சாதாரணப் பொருள் தான். அதிகமாகக்கூட நாம் உபயோகப்ப டுத்துவதில்லை. மிகக் குறைவாகத்தான் உணவில் சேர்த்துக் கொள்கின்றோம். ஆனால் அது இல்லாவிட்டால், உயிரைக் காக்கும் உணவே உபயோகம் இல்லாமல் போய் விடுகிறது. அது போல்தான் வரலட்சுமி விரதமும் ஒரு ராஜ்யத்துக்கு வரலட்சுமி விரதம் மிக முக்கியமானது. அதைத்தான் நான் பிறந்த வீட்டில் இருந்து கொண்டு வந்தேன்!" என்று விளக்கினாள் சியாமா.

உண்மை உணர்ந்த மாலாதரன் மனமகிழ்ச்சியுடன் அன்று முதல் வரலட்சுமி விரதம் மற்றும் பூஜையில் பங்கெடுத்துக் கொண்டான்.

**பூஜிக்கும் முறை.**

வீட்டில் பூஜை அறையின் அருகில் ஒரு சுவரில் சுண்ணாம்பு அடித்து, அதில் லட்சுமி தேவியின் உருவத்தை அழகாக, லட்சணங்களுடன் வரைய வேண்டும். அம்மனின் கண் பார்வை கீழ்நோக்கியோ அல்லது மேல்நோக்கியோ இருக்கும்படியாக வரையக்கூடாது. நேராகப் பார்ப்பது போல் இருக்கவேண்டும்.





அதற்கு முன்புறம் முடிந்தால் ஒரு சிறிய பூஜா மண்டபத்தை அமைக்க வேண்டும். அதன் நடுவே நுனிவாழை இலையில் அட்சதை (முழு அரிசி; குறுநெய் அல்ல) பரப்பி, அதில் பூஜா கலசத்தை வைக்கவேண்டும். எந்தப் பூஜைக்கும் எவர் சில்வர் பாத்திரங்களை உபயோகிக்கக் கூடாது. அவரவர் வசதிக்கேற்ப வெள்ளி அல்லது பித்தளைக் கலசம் வைத்துக் கொள்ளலாம்.

பூஜா கலசத்தில் அட்சதையைப் போடவேண்டும். காதோலைக்கருசமணி, எலுமிச்சம்பழம் ஆகியவற்றைப் போடும் வழக்கமும் உண்டு. பூஜா கலசத்தில் லட்சுமி தேவியை ஆவாஹனம் செய்து விவரமறிந்த ஒருவரைக் கொண்டு பூஜை செய்ய வேண்டும். (பூஜை அவரவர் குல வழக்கப்படி நடத்தலாம்).

பூஜைக்கான கலசத்தில் லட்சுமிதேவியின் திருவுருவத்தை வரைந்தோ அல்லது தேவியின் திருமுக பிம்பத்தை கடையில் வாங்கியதை வைத்தோ பூஜை செய்வது வழக்கம். பூஜையின் முடிவில் பூஜிக்கப்பட்ட மஞ்சள் (கயிறை) சரடைக் கையிலும், திருமாங்கல்யச் சரடாக இருந்தால் கழுத்திலும் அணிந்து கொள்வார்கள்.

திருமணம் ஆகாத பெண்களும் இந்த பூஜையில் கலந்து கொண்டு, மஞ்சள் சரடைக் கையில் கட்டிக் கொள்ளலாம். அப்படிக் கட்டிக் கொள்கிறவர்களுக்கு சியாமா என்ற பெண்ணுக்கு நல்ல கணவனும் நல்வாழ்க்கையும் அமைந்தது போலக் கிடைக்கும்.

திருமணம் ஆன பெண்கள் வரலட்சுமி விரத பூஜை செய்வதால், வீட்டில் சுபீட்சம் நிலவும். ஒற்றுமை வளரும், மாங்கல்யபலம் அதிகரிக்கும், அஷ்டலட்சுமிகளின் அருளும் நீண்ட ஆயுளும் கிடைக்கும்.

பூஜைக்கு மறுநாள், அரிசியுடன் கூடிய பூஜா கலசத்தை வீட்டில் அரிசி வைக்கும் பாத்திரத்தில் வைக்க வேண்டும். இப்படிச் செய்வதன் மூலம் வீட்டில் உணவுப் பஞ்சமும் ஆரோக்கியப் பஞ்சமும் ஏற்படாது. ஆவணி மாதத்தில் பௌர்ணமிக்கு முன்பாக வரும் வெள்ளிக்கிழமை அன்று வரலட்சுமி விரத பூஜை செய்ய வேண்டும் (சில சமயங்களில் ஆடி மாதத்திலும் வரலட்சுமி விரதம் வரும்.)

# காலம்தோறும் சக்தி வழிபாடு

வைதிக சமயங்கள் ஆறினுள்ளும் சைவசமயத்திற்கு அடுத்த நிலையில் சிறப்புப் பெறுவது சாக்த சமயமாகும். சக்தியை பரம்பொருளாகக் குறிப்பிடுவது இந்த நெறியாகும். பெண்மையிலும் தெய்வீகத்தைக் காண்பது எமது சமயம். ஆகையால் சாக்த நெறி சமுதாயத்தில் செல்வாக்குப் பெறுகின்றது. இவ்வகையில்

சாக்த நெறி

சாக்தேயம்

வாமதேவம்

ஆகிய பெயர்களாலும் இச்சமயக் கோட்பாடு விளங்குகின்றது. ஆறுவகைச் சமயங்களில் ஒன்றாக ஆதிசங்கரர் சாக்த சமயத்தை வேறுபடுத்தியுள்ளார். இந்து சமயப் பிரிவுகளில் மிகப் பழமையும்தொன்மையும் வாய்ந்த நெறியாக சாக்த சமயம் உள்ளது. சாக்த சமயத்தினுடைய வரலாறுகளை அறிந்து கொள்வதற்கும்

இலக்கியங்கள்

கல்வெட்டுக்கள்

தொல்லியல் சாதனங்கள்

நாடுகாண் பயணக் குறிப்புகள்

எனப் பல சாதனங்கள் எமக்கு உதவுகின்றன. தாய்வழிச் சமுதாய அமைப்பினையுடைய இந்திய தேசத்திலே ஐயாயிரம் ஆண்டுகள் பழைமை வாய்ந்த வழிபாடாக தாய்த் தெய்வ வழிபாட்டினை கொள்ள முடிகின்றது. இவ்வகையில் சக்தி வழிபாட்டின் பரிமாணங்களை பின்வரும் தன்மைகளில் அறிந்து கொள்வது முக்கிய விடயமாகும்.

01. தொன்மையான வரலாறு
02. வழிபாட்டு முறை
03. பிரமாண நூல்கள்
04. சக்தி வடிவங்கள்
05. திருக்கோயில்
06. சமுதாயச் சேல்வாக்கு

**தொன்மையான வரலாறு**

இந்து சமயமானது எத்தகைய பழமை வாய்ந்ததோ அத்தகைய தொன்மைச் சிறப்பு சாக்த சமயத்திற்கும் உண்டு தாய்த் தெய்வ வழிபாட்டின் தொன்மையினை சிந்துவெளி நாகரிக காலத்திலிருந்து அறிந்துகொள்ள முடிகின்றது. ஹாரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய நகரங்களின் சிதைவுகளிலே கிடைத்த முத்திரைகள், உருவகங்களிடையே தாய்த் தெய்வம் எனக் கருதப்படும் இரு உருவங்கள் கிடைத்தன.

அவ்வடிவங்களில் ஒன்று நிர்வாணக் கோலத்தில் கைகள் இரண்டிலும் பல வளையங்கள் அணிந்து விளங்கியது. மற்றொன்று தலைகீழாக நின்று தனது வயிற்றிலே செடியொன்று முளைத்து வரக் காணப்பட்டது. உலகம் யாவற்றிற்கும் தாயாகவும், வளஞ்சுரக்கும் அன்னையாகவும் வழிபட்ட பெண் தெய்வத்தின் எச்சங்களாய் இவை கொள்ளப்பட்டன.

ஒரு காலத்தில் உலகெங்கனும் இரு வகை சமுதாய அமைப்பு முறைகள் காணப்பட்டன. ஒன்று தாய்வழிச் சமூக அமைப்பு மற்றது தந்தைவழிச் சமூக

அமைப்பு. விவசாயத்தை தொழிலாகக் கொண்ட மக்களிடையே தாய்வழிச் சமய அமைப்பு செல்வாக்குப் பெற்றிருந்தது என்றும், வேட்டையாடல், மந்தை மேய்த்தல் என்பவற்றை தொழிலாகக் கொண்ட மக்களிடையே தந்தை வெளிச்சமூக அமைப்பு மேலாண்மை பெற்றிருந்தது என்றும் சமூகவியலாளர்கள் கருதுவர். மரபுவழி, உறவுமுறை, சொத்துரிமை, அதிகாரம், மண முறை, ஆட்சியுரிமை ஆகியவற்றின் அடிப் படையிலேயே அது தாய்வழிச் சமூகமா, தந்தை வழிச் சமூகமா என்பது நிர்ணயிக்கப்படுகின்றது.

மேற்குறித்த வகைகளிலேயே கூடிய செல்வாக்கினைப் பெண் பெறும்பொழுது அவளே மேலாண்மையடைந்து தாய்வழிச் சமூகம் உதயமாகுகின்றது. இவ்வாறு தாய்வழிச் சமூகம் தோன்றும்பொழுது தெய்வமாக உருவகிக்கப்படுபவருக்கு பெண்ணின் வடிவம் அமைக்கப்படுகின்றது. அப்பனிலும் அம்மையே முதன்மை பெற்ற வணக்கத்திற்குரியவளாகின்றாள். எனவே தாய்வழிச் சமூக அமைப்பு நிலவிய காடுகளிலெல்லாம் பெண் தெய்வங்களே வழிபாட்டிற்குரியவளாகின்றாள். எனவே தாய்வழிச் சமூகஅமைப்பு நிலவிய காடுகளிலெல்லாம் பெண் தெய்வங்களே வழிபாட்டிற்குரியவையாயின சிந்து வெளியில் தாய்த்தெய்வமும், எகிப்தில் சிரியாவில் "இசஸ்" என்ற பெண் தெய்வமும் வழிபடப்பட்டதிலிருந்து அங்கெல்லாம் புராதன காலத்தில் தாய்வழி சமூக அமைப்பே நிலவியது என்பது தெளிவாகின்றது.

சிந்துவெளி நாகரிகம் திராவிட இனத்திற்குரியது என ஆய்வாளர்கள் பலர் ஏற்றுக் கொண்டுள்ளனர். திராவிட இனத்தை சார்ந்தவர்களே தமிழர்கள் என்பது ஒப்பமுடிந்த ஒன்று; எனவே தமிழரிடையிலும் தொடக்கத்தில் சிவவழிபாட்டிற்கு சமாந்தரமாகவோ மேலாகவோ சக்தி வழிபாடு நிலவியது என்று பொருள் கொள்ள இடமுண்டு. திருமுருகாற்றுப் படையிலே "இளையணி சிறப்பில் பழையோன், குழவி" என நக்கீரர் போற்றக் காணலாம். ஆகவே சிந்துவெளி பிரதேசத்தில் சிவன், அம்மை வழிபாடு மேலோங்கியிருந்தது என்பது ஏற்றுக்கொள்ளத்தக்கதாக உள்ளது.

இந்துக்களின் முதல் இலக்கிய காலமான வேத காலத்திலும் சக்தி வழிபாட்டின் பரம்பலைக் காணமுடிந்தது. இருக்கு வேதத்தில் உசை, சபிதா, இராத்திரி, சரஸ்வதி ஆகிய பெண் தெய்வங்கள் வழிபடப் பட்டன. இதில் உசை என்ற பெண் தெய்வம் சக்தியின் அவதாரமாகக் கருதப்பட்டது. பெண் தெய்வ வழிபாட்டின் முக்கியத்துவமும் வேதங்களில் உணரப்பட்டது. சந்தியா, ப்ருதுவி முதலிய பெண் தெய்வங்கள் ஆக்கத்திற்கு உரியனவாகக் கருதப்பட்டன.

சக்தியின் மகிமை முதன் முதலாக கேன உபநிடதத்திலேயே பரம்பொருள் நிலைக்கு உயர்த்தப்பட்டுள்ளதாக தெரிகின்றது. சதபதப் பிரமாணத்தில் இடம்பெற்ற அர்ச்சனை வழிபாடுகளிலும் சக்தி வழிபாட்டின் சாயல்களை காண முடிகிறது. உசை, விடியற் காலத்து பெண் தெய்வம் என்றும், அதிகாலையில் சூரியன் மலர்வதற்கு அவளே காரணம் என்றும் குறிப்பிடப்படுகின்றது.



பின்னர் ஆகம காலத்தில் சாக்த சமய வழிபாட்டு மரபுகள் செல்வாக்குப் பெறத் தொடங்கின. சக்தி வழிபாட்டு முறைகள் பற்றிக் கூறுகின்ற தந்திரங்கள் சக்தியின் வடிவங்கள் பற்றியும் வழிபாட்டு முறைகள் பற்றியும் எடுத்துக் கூறுவனவாக அமைந்தன. சாக்த ஆகமங்கள் 77 என்றும், அதில் தந்திர பேதங்கள் 64 என்றும் கூறப்படுகின்றது. சாக்த ஆகம நூல்களில் உருத்திரயாமிளம், குலார்ணவம், திரிபுர இரகசியம், மகா நிர்வாண தந்திரம் முதலியவை முக்கியமானவையாகக் கருதப்படுகின்றது. சாக்த வழிபாட்டு தந்திரங்களில் சக்தி வடிவங்களின் தன்மை, பிரதிமாலட்சணங்கள், மந்திரம், தந்திரம், யந்திரம் ஆகிய சக்தி வழிபாடு உபாசனைகள் பற்றியும் வழிபாட்டின் பயன்கள் பற்றியும் விரதங்கள் என்பன பற்றியும் கூறப்பட்டுள்ளது.

மேலும் புராண இதிகாச காலத்தில் நிலவிய சக்தி வழிபாடு பற்றி நோக்குகையில் சைவசமயத்திற்கு இணையான ஒரு வழிபாட்டு முறையாக சக்தி வழிபாடு காணப் பட்டது. மகாபுராணங்களின் பெரும்பாலான புராணங்களில் பெண் தெய்வ வழிபாட்டின் மகத்துவத்தினை குறிப்பிடுகின்றன.

இலிங்க புராணம், பார்கவபுராணம், மார்க்கண்டேய புராணம் முதலிய வடமொழிப் புராணங்கள் சக்தி வழிபாட்டின் தொன்மையினையும், சிறப்பினையும் போற்றுகின்றன. தமிழில் கந்தபுராணம் சக்தி விரதங்கள் பற்றிய கருத்துக்களைக் கொண்டுள்ளது. புராணங்களில் சக்தி-தாய்த் தெய்வமாக, பரம்பொருள் தத்துவமான பிரபஞ்ச உற்பத்தியின் அடிநாதமாக கூறப்பட்டுள்ளது.

இதிகாசங்களான இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றிலும் சக்தி வழிபாடு பற்றிய தொன்மையான கருத்துக்கள் காணப்படுகின்றது. இராமாயணக் கதையின்படி அயோத்தி, கிஸ்கிந்தா, இலங்காபுரி ஆகிய இடங்களில் சிவனுக்கும் அம்மனுக்கும் கோயில் இருந்ததாக அறியப்படுகின்றது.

சங்க காலத்தில் நில வழிபாடுகளோடு சக்தி வழிபாடு இணைந்திருந்தது. சங்க இலக்கியங்களில் இத்தெய்வம் கொற்றவை என்ற பெயருடன் பாலை நிலத்தெய்வமாக வணங்கப்பட்டது. மேலும் சக்தியை குறிக்க காடுகிழாழ், பழையோள் ஆகிய பெயர்களும் வழங்கின சங்கமருவிய காலத்தில் காரைக் காலம்மையாருடைய திருமுறைப் பாடல்களில் சிவனுடன் அதன் சக்தியும் பாடப் பட்டது. இக்காலத்தில் கொற்றவைக்கு கோயில் இருந்ததாக சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. பரிபாடலில் வரும் கொற்றவைக் கோட்டம் அம்மனுக்குரிய கோயிலைக் குறிப்பதாகும்.

சக்தி என்ற சொல்லின் பொருள் வல்லமை. சிவத்தின் வல்லமையே சக்தி. அகிலாண்டங்களுக்கும் தாயாக விளங்கும் சக்தியை மிகப் பழங்காலந்தொட்டே இந்துக்கள் வழிபட்டு வருகின்றனர். நாள்தோறும் ஓதப்படும் காயத்திரி மந்திரத்தில் காயத்திரி சூரியனுக்கு ஒளிதருவதாகக் கூறப்படுகின்றது. சூரிய வழிபாடு சக்தி வழிபாட்டுடன் இணைந்தே நிலவி வந்தமை பழந்தமிழ் நூல்களில் காண முடிகின்றது.

தொல்காப்பியத்திலே பாலை நிலத்திற்கு தெய்வம் குறிப்பிடப்படாவிட்டாலும் நச்சினார்க்கினியர் சூரியனையும், கொற்றவையையும் தெய்வங்களாய் குறிப்பிடுகின்றனர். போர், வெற்றி என்பவற்றை வேண்டி வழிபடப்படும் கொற்றவை வழிபாட்டிற்கு இணையாக பாபிலோனியர் "அனாட்" என்ற பெண் தெய்வத்தை வழிபட்டனர் என்று தெரிகின்றது. சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரியிலே கொற்றவை பாலைநில மக்களால் பேசப்படுகின்றாள்.

பல்லவர் காலத்திற்கு பின்னர் தமிழ் நாட்டிலும், ஏனைய பிரதேசங்களிலும், சக்திக்கு தனிக் கோயில்கள் அமைத்து வழிபடும் வழக்கமும் வளர்ச்சி பெற்றது. தமிழ் நாட்டில் மதுரையிலும், காஞ்சியிலும், காசியிலும் சிறந்த பல கோயில்கள் அமைந்தன. பல்லவ மன்னர்களில் பலர் அமைத்த சிவனுக்குரிய பெருங் கோயில்களில் அம்மனுக்கும் சந்நிதானங்களை அமைத்தனர்.

சோழர் காலத்தில் திருக்காமக் கோட்டம் என்ற ஒரு அமைப்பு சக்தி வழிபாட்டின் பெருமையை அக்காலத்தில் புலப்படுத்தியது. சோழர் காலத்தில் செல்வாக்குப் பெற்ற திருமுறைகள் பல்லவர் காலத்தின் தொடர்ச்சியாக சக்தி வழிபாட்டின் பெருமையினைப் புலப்படுத்தின. சக்தியின் வடிவங்களையும், அத்தெய்வத்தின் பெருமைகளையும் பாடிய திருமுறைகள் இறைவனை தாயாக உவமித்தும் கூறின. "தாயினும் நல்ல தலைவர்..." என்றும் "அம்மையே அப்பா..." என்றும் பாடிய தேவாரங்கள் தாய்த் தெய்வ வழிபாட்டின் பெருமையினைக் கூறுகின்றன.

சக்தி வழிபாடு தமிழகத்திலே நாயக்கர் காலத்தில் மீண்டும் புத்துயிர் பெற்று எழுச்சி பெற்றது. நாயக்க மன்னரால் நவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இக்காலத்தில் நாயக்க மன்னர் சக்திக்கு பெருங் கோயில்களை அமைத்தனர். இச்சூழலில் குமரகுருபரர், தாயுமானவர், அபிராமிப்பட்டர் முதலிய அருளாளர்கள் தோன்றி சக்தி மீது பிரபந்தங்களை இயற்றினர். குமரகுருபர சுவாமிகளின் சகலகலாவல்லிமாலை, மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ் என்பனவும் அபிராமிப்பட்டரின் அபிராமி அந்தாதி, தாயுமானவரின் பராபரக்கண்ணி என்பனவும் இக்காலத்தில் எழுந்து சக்தி வழிபாட்டில் பக்தி மரபினை பேணின.

வட இந்தியாவில் குப்தர் காலத்திலும் அதற்கு முன் மௌரியர் காலத்திலும் சாக்த நெறி வளர்ச்சி பெற்றது. இக்காலத்தில் காளிதாஸர், பவபூபதி முதலியோரும் கி.பி 8ம் நூற்றாண்டில் ஆதிசங்கரரும் சாக்த சமயத் தோத்திரங்களை இயற்றினர். இந்நூற்றாண்டின் பாரதியாருடைய சக்திப் பாடல்களும் வலிமை பெற்றன. ஆதிசங்கரர் சக்தியின் மகிமை கூறும். கனகதாரா, பிரபஞ்சசாரம், சௌந்தர்ய லகரி, லலிதா சகஸ்டநாமம், அன்னை பூரணி தோத்திரம் முதலிய பாடல்களை இயற்றினார். இத்தகைய சங்கரர் சக்தி பக்தனாகவும், அம்பாள் பூசகராகவும் இருந்தவர்.

தென்னிந்தியாவில் இந்துசமயம் நிலை பெற்றிருந்த காலத்தில் இலங்கையிலும் ஏனைய தென்கிழக்காசிய நாடுகளிலும் தாய்த் தெய்வ வழிபாடு சென்று பரவியது. இலங்கையில் பிரசித்தி பெற்ற கோயில்கள் அமைக்கப்பட்டதுடன் இன்று மேற்காசிய நாடுகளில் கூட சாக்த சமய பாரம்பரியங்கள் செல்வாக்குப் பெற்றுள்ளன. லண்டனில் விம்பிள்டன் ஸ்ரீமுத்துமாரியம்மன் ஆலயம் உலகப் பிரசித்தம் பெற்றுள்ளது.

**வழிபாட்டு முறைகள்**

சாக்த சமய வழிபாட்டு முறைகள் பெரிதும் ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டதாகும். ஆகம மரபுசாராத வழிபாட்டு முறைகளும் சாக்த சமயப் பாரம்பரியங்களில் பின்பற்றப்படுகின்றன. சக்தி வழிபாட்டு முறைகளில் மந்திரம், தந்திரம், இயந்திரம் ஆகிய மூன்று முறைகள் பின்பற்றப் படுகின்றன. அவற்றினை சக்தி உபாசனைகள் என்பர். நாமங்கள் கூறி வழிபடுவதை மந்திர வழிபாடு என்றும், ஆகம நடைமுறைகளை பின்பற்றுவது தந்திர வழிபாடு என்றும் உருவமைத்து வழிபடுவது இயந்திர வழிபாடு என்றும் கொள்ளப்படும். இதனை ஸ்ரீசக்கர வழிபாடு எனவும் குறிப்பிடுவர்.

இலங்கையில் அம்மன் வழிபாடு ஸ்ரீசக்கர வழிபாடாக சிறப்படைந்துள்ளது. நயினாதீவு நாகபூசணி அம்மன் ஆலயத்திலும் தெல்லிப்பளை துர்க்கை அம்மன் ஆலயத்திலும் இவ்வழிபாடு சிறப்பாக நடைபெறுகின்றது. நைமித்திய கிரியைகளில் மகோற்சவம் முக்கியமானது. விரதங்கள் மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருக்கின்றது.

வரலட்சுமி விரதம், நவராத்திரி விரதம், கேதாரகேளரி விரதம், சுவர்ண கௌரி விரதம் முதலியவை விரதங்களில் சிறப்பானதாகும். சக்தியை தாயாகவும், சிவனை ஆற்றலாகவும் சைவ மக்கள் வழிபட்டு வருகின்றனர்.

நாள்தோறும் ஓதப்படும் காயத்திரி மந்திரத்தில், காயத்திரி சூரியனுக்கு ஒளி தருவதாக கூறப்படுகின்றது. அதனால் எம்பெருமாட்டி எங்கள் உள்ளத்து ஞான ஒளியையும் தூண்டி எரிய வைக்கின்றாள் என்றே சொல்ல வேண்டும். "அன்னையே உன்னை வழிபடுவோர்க்கு நீ வரங்களை வழங்குகின்றாய்: வேதங்களும் உலகங்களும் உன்னையே மூலமாக கொண்டு தோன்றின. நீயே வல்லமை நீயே பொறுமையின் ஆற்றல்" என்றெல்லாம் காயத்திரி மந்திரம் குறிப்பிடுகின்றது.

தாத்தாத்திரேயர் என்ற பெரியார் ஸ்ரீவித்தியா எல்லா வகை வழிபாடுகளினதும் கூட்டாக இருப்பதைக் கண்டார். எனவே இதனை அடிப்படையாக கொண்டு சக்தியின் பல திறன்களையும் எடுத்து போற்றி வழிபடும் வகையிலே 18000 சுலோகங்கள் அமைய சங்கிதை ஒன்றை ஆக்கினார். தென்னிந்தியாவில் சாக்தர்கள் இவற்றையே விதியாகக் கொண்டு சக்தி வழிபாட்டினை இயற்றி வருகின்றனர்.

ஆதி சங்கரர் ஸ்ரீசக்கரம் அமைத்து சக்தி பூசை செய்யும் முறையினைத் தமது சௌந்தர்ய லகரி, பிரபஞ்சசாரம் முதலிய நூல்களில் எடுத்துக் காட்டியுள்ளார். இவற்றின் வழியிலே ஸ்ரீசக்கரம் என்னும் இயந்திரத்தகடமைத்து அதன் வாயிலாகச் சக்தி வழிபாட்டை நிகழ்த்தி வருகின்றனர்.

**சக்தி வடிவங்கள்**

சக்தி மூர்த்தங்கள் பற்றியும், அவற்றின் பிராமணங்கள் பற்றியும், ஆகமங்கள் குறிப்பிடுகின்றன, புராணங்களில் சக்தி மூர்த்தங்கள் பலவாறாக கூறப்பட்டாலும் ஆகமங்களில் 18 வடிவங்கள் சிறப்பாக குறிப்பிடுகின்றது.


மஹாகும்பாபிஷேக சிறப்பு மலர் —129—

1. பாலா
2. லலிதாம்பாள்
3. இராஜராஜேஸ்வரி
4. நவக்ஷரி பாலா
5. அன்னபூரணி
6. அஸ்வருதா
7. இராசமாதங்கி
8. லகுக்ஷயாமா
9. வாக்வதினி
10. நகுலி
11. வராகி
12. லகுவராகி
13. சொப்பனராகி
14. திரஸ்கரிணி
15. பரை
16. புவனேஸ்வரி
17. சண்டி
18. துர்க்கை

இவ்வடிவங்கள் ஒவ்வொன்றும் புராண மரபு களின்படி அம்பிகை பல்வேறு காலங் களில், பல்வேறு நோக்கங்களிற்காக உருவாக் கப்பட்டவையாகும். சக்தி வடிவங்கள் பல வாக காணப்பட்டாலும் எல்லாம் அம்பிகை யின் அம்சமே என்பது சைவ மரபாகும். சக்தியின் வடிவங்கள் பதினெட்டும் அமைய வேண்டிய விதிகள் பற்றி தந்திர நூல்களும், சிற்ப நூல் களும் குறிப்பிடுகின்றன. அவ்வகையில்

**1. பாலா:**
சக்தியைப் பத்து வயதுச் சிறுமியாக உருவகித்த திரு வடிவம் செந்தாமரையில் வீற்றிருப்பாள், திருக்கரத் திலே செபமாலை தரித்தி ருப்பாள்.

**2. லலிதாம்பாள்:**
பதினாறு வயதுக் குமரி, அவள் அமர்ந்தருளும் கட்டி லுக்கு பிரம்மன், விஸ்ணு, உருத்திரன், ஈஸ்வரன் ஆகி யோர் கால்களாய் விளங்கு வர். பாசம், சவுக்கு, மலர், கரும்பு ஆகியவற்றைத் தனது நான்கு திருக்கரங்களிலும் தரித்திருப்பாள்.

**3. இராஜராஜேஸ்வரி**
60 வயதினை உடையவள், ஞானமே உருவானவள்.

**4. நவக்ஷரிபாலா**
பாலாவின் திருவுருவ அமைப்பினை உடையவள்.

**5. அன்னபூரணி**
வலது கரத்தில் தங்கக் கரண்டியும் இடது கரத்தில் வைரம் பதித்த குடமும் ஏந்தியிருப்பாள். தங்க, வைர, வைடூரிய ஆபரணங்கள் அணிந்து அடியார்களுக்கு அமுது பாலிக்கும் அன்னையாவாள்.

**6. அஸ்வருதா**
முக்கண், சிவப்பு உடை, நாற்கரங்கள், குதிரையில் அமர்ந்த திருக்கோலம் உடை யவள்.

**7. இராசமாதங்கி**
வீணை தாங்கிய திருவுருவமுடையவள்

**8. லகுக்ஷயாமா**
நீலநிறத்திருமேனியுடையவள், இந்திர நீலம் போல் ஒளிர்பவள்.

**9. வாக்வதினி**
வெண்டாமரையில் வீற்றிருக்கும் பெரு மாட்டி. எழுத்தாணியும் ஏடும் தாங்கிய இருகரத்தாள். பூரண சந்திரனே பரிவட்ட மாய் அமையப் பெற்றவள்.

**10. நகுலி**
பற்கள் வைரம் போல் ஒளிரும். அவை பகைவரின் நச்சு நாக்கை கத்தரித்திடும் வலிமை உடையது.

**11. வராகி**
பன்றி முகமுடையவள். லலிதா என்ற மகாராணியின் படைத்தளபதியானவள். இவளை நந்தினி எனவும் அழைப்பார்.

**12. லகுவராகி**
பருத்த திருவுடல் உடையவள். பருத்த கூரான பற்கள் உடையவள்.

**13. சொப்பனராகி**
தன் அடியார்களுக்கு நிகழப் போகும் நன்மை, தீமைகளை அறிவிப்பவள். தீய கனவுகளின் பயங்கரங்களின்றும் காப்ப வள்.

**14. திரஸ்கரிணி**
ஒழுங்கற்றுக் குலைந்த கூந்தலாள். எல்லா வகையான ஆபரணங்களும் தரித்திருப் பாள். உலகப்பற்றுடையாரை அலைக் கழித்து உண்மையை உணர வைப்பவள்.

**15. பரை**
லலிதாவின் இதயபாகமாயுள்ளவள். பூரண சந்திரன் ஒத்த மேனியவள். மூன்று கண்களை உடையவள் பிறையணிந்த நெற்றியை உடையவள். சின்முத்திரையை ஒரு திருக்கரத்திற் காட்டி மறு திருக் கரத்தில் புத்தகம் தரித்தவள்.

**16. புவனேஸ்வரி**
உதய சூரியனை ஒத்த ஒளியுடையவள், பிறை தரித்த முடியானவள். மூன்று திருவழியானவள். தங்கத் தோடுகள் தரித்திருப்பாள். தாமரை மலரில் விளங் கித் தோன்றுவாள். நான்கு திருக்கரங்கள் உடையவள்.

**17. சண்டி**
மின்னலொத்த திருமேனியை உடையவள், சிங்க வாகனத்தில் அமர்ந்தவள். பயங் கரத்தோற்றமுடையவள். வாளும் கேடய மும் தரித்தவள். இன்னும் பல ஆயுதங்கள் தாங்கியவள். நெருப்புப் போல ஒளிர் பவள். மூன்று திருவிழியாள்.

**18. துர்க்கை**
இவளுக்கு பல்வேறு திருக்கோலங்கள் உள்ளன. இவள் பராசக்தியின் காவற் படைத் தலைவி. துர்க்கம் என்ற சொல் லின் பொருள் அகழி. பகைவரிடமிருந்து அகழி காப்பது போலத் துர்க்கையும் தீமைகள், பகைமைகளினின்றும் அடிய வரைக் காத்தருள்வாள்.

ஆகம மரபுகளில் இத்தகைய வடிவங்கள் குறிப்படப்பட்டாலும், பிற்காலத்தில் ஆகம மரபு சாராத வழிபாடுகளில் சக்தியின் அம்சங்கள் எனப்படுகின்ற பல வடிவங்கள் தோன்றி நாட்டார் வழிபாடுகளில் முக்கி யத்துவம் பெற்றன. அவற்றுள் கண்ணகி, மாரியம்மன், முத்துமாரி, பத்திரகாளி, சீதையம்மன், சாவித்திரி அம்மன், திரௌபதை அம்மன் முதலியவற்றைக் குறிப்பிடலாம். புராண மரபுக் கதைகளை தழுவிய இவ்வடி வங்கள் ஆகம மரபுகளைப் பின்பற்றியும் அமைக்கப்படுகின்றன.

**திருக்கோயில்கள்**

சைவமக்கள் சக்தியை குல தெய்வமாக வழிபடத் தொடங்கிய காலத்திலிருந்து அத்தெய்வத்திற்குரிய கோயில்களும் செல் வாக்குப் பெற்றன. தமிழ்நாட்டிலும் இலங்கை யிலும் பழமை வாய்ந்த சக்தி ஆலயங்கள் உண்டு எமது நாட்டில் மாத்தளை முத்துமாரி யம்மன், வற்றாப்பளை கண்ணகி அம்மன், தெல்லிப்பளை துர்க்கை அம்மன், நல்லூர் வீரமாகாளி அம்மன், திருகோணமலை பத்திரகாளி அம்மன், நயினாதீவு நாகபூசணி அம்மன், சாவகச்சேரி பன்றித்தலைச்சி அம்மன் இந்தியாவிலே மதுரை மீனாட்சி, காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி என்பன மிகவும் பிரபல்யமான கோயில்கள் ஆகும். மேலும் கன்னியாகுமரி, நாகபட்டினம், திருவேற் காடு, கும்பகோணம், சமய புரம், புதுக்கோட்டை ஆகிய இடங்களில் முக்கியமான சக்தி கோயில்கள் காணப்படு கின்றன.

பல்லவர் தமிழ் நாட்டை ஆண்ட காலங் களில் தென்கிழக்காசிய நாடுகளான கம்போடியா, யாவா, சுமாத்திரா போன்ற நாடுகளிலும் சக்திக்குரிய ஆலயங்கள் பல அமைக்கப் பட்டன. இன்றைய நிலை யில் மேற்காசிய நாடு களிலும் அம்மனுக்கு பிரசத்தி பெற்ற கோயில்கள் அமைந்துள்ளன.

### பிரமாண நூல்கள்

சாக்த சமயத்தின் நூல்கள், வடமொழியிலும் தென்மொழியிலும் தென்மொழியிலும் அமைந்திருக்கின்றன. வேதமும் சாக்தமும் சமயமும் தந்திரங்களும் வடமொழியிலுள்ள மூலநூல்களாகும். இவற்றைவிட இலிங்க புராணம், தேவி புராணம், பராபரச்கண்ணி, சௌந்தர்யலகரி, மகாதேவி பாகவதம், சகலகலாவல்லிமாலை, பார்கவத புராணம், கனகதாரா தோத்திரம், அபிராமி அந்தாதி, மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ், லலிதா சகஸ்ரநாமம் என்பனவும் சக்திக்குரிய முதல் நூல்களாகும். காத்தசமய தந்திர நூல்களில் மகா நிர்வாணதந்திரம், பிரபஞ்சாரம், ருத்தி ரயா மிளம். திரிபுர இரகசியம் முதலியவை முக்கிய வழிபாட்டு நூல்களாகும். இவை சக்தி வழிபாட்டு முறைகளை மட்டுமன்றி திருவுருவ அமைப்பு, சாக்த சமயக் கோட்பாடுகள் முதலிய விடயங்களையும் குறிப்பிடுகின்றன.

### சமுதாய செல்வாக்கு

சக்தியை தெய்வமாகவும், தாயாகவும் வழிபடும் மரவு சைவசமயத்தில் காணப்பட்டது. அம்பிகை இறைவனின் சக்தியாகவும் உயிர்களின் ஆற்றலாகவும் விளங்குபவள். இறைவனின் சக்தியின் வல்லமையினால் தான் பஞ்சகிருத்தியங்களையும் ஆற்றுகின்றார். இத்தகைய தாய்த்தெய்வ வழிபாடு அறுவகைச் சமய நெறிகளில் மிகவும் செல்வாக்குப் பெறுகின்றது.

சக்தி பல்வேறு வடிவங்களிலும் தோற்றங்களிலும் விளங்குபவர். ஆகம நூல்களில் இத்தெய்வத்திற்கு 18 வடிவங்கள் கற்பிக்கப் படுகின்றன. கல்வியைத் தருகின்ற சரஸ்வதியும், செல்வத்தை தருகின்ற இலட்சுமியும், வீரத்தை தருகின்ற துர்க்கையும் சக்தியின் வடிவங்களே. காவியங்களில் இடம் பெறுகின்ற கண்ணகி, சீதையம்மன், சாவித்திரி ஆகிய அம்சங்கள் கூட சைவ மக்கள் மத்தியில் நாட்டுப்புற வழிபாடுகளில் செல்வாக்குப் பெற்றுள்ளது. சமுதாயத்தில் ஏற்படுகின்ற கொடிய நோய்களைத் தீர்ப்பவளாகவும், வரட்சியை போக்குபவளாகவும் இந்துக்கள் சக்தியை வழிபடுகின்றனர். ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் எமக்குத் தந்தவள் ஆதிபராசக்தி ஆவாள்.

சக்தியை நோக்கிய விரதங்கள் இந்துக்கள் மத்தியில் மிகவும் செல்வாக்குப் பெற்றிருக்கின்றது. நவராத்திரி, கேதாரகௌரி, வரலட்சுமி பூசை முதலிய விரதங்கள் சிறப்பாக பின்பற்றப்பட்டு வருகின்றன. சைவமக்கள் இக்காலங்களில் நோன்பிருந்து அம்பிகையை வழிபட்டால் நிறைய வரம் பெறலாம் என்பது நம்பிக்கை. இந்துக்கள் மத்தியில் காணப்படுகின்றது.

பெண்மையின் வடிவமாக சக்தி விளங்குவதால் இந்துக்கள் மத்தியில் தாய்த் தெய்வ வழிபாட்டின் பாரம்பரியங்கள் இன்று வரை பேணப்பட்டு வருகின்றது. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இந்தி நாட்டிலே தோன்றிய சாக்த நெறி இன்றைய நிலையில் மேற்காசிய நாடுகள் வரை பரவி நிலைபெற்றிருப்பது அதன் தார்ப்பரியத்தைக் காட்டுவதாக உள்ளது.




### தகவலுக்கு உதவியவை

01. இந்துநாகரிகம்-கலாநிதி க.சொக்கலிங்கம்
02. சைவசமயவளர்ச்சி-ம.இராசமாணிக்கனார்
03.தமிழர் சால்பு-பேராசிரியர் சு.வித்தியானந்தன்
04. இந்துநாகரிகம்-க.சி.குலரத்தினம்
05. ஈழத்து தமிழ் கவிதைக்களஞ்சியம்- ஆ.சதாசிவம்
06. சண்மதங்கள்-வை. உலகநாதன்
07. இந்தியப் பண்பாட்டு வரலாறு-
ந. சுப்பிரமணியன்
08. வியத்தகு இந்தியா-A.L. பஸாம்
09. தென்னிந்திய வரலாறு-A.K. நீலகண்ட சாஸ்திரி
10. ஈழத்துச் சிவாலயங்கள்-வித்துவான் வசந்தா வைத்தியநாதன்

ஆசிரியர்: செல்வநாயகம் சிவஞானம் (B.A.Hons)-கிளி/கிளிநொச்சி மகா வித்தியாலயம்

ஆக்கம்: செல்வநாயகம் சிவஞானம், (B.A.Hons)
ஆசிரியர், கிளி/கிளிநொச்சி மாகாவித்தியாலயம்,
கிளிநொச்சி.

உ
சிவமயம்

## சரஸ்வதி தோத்திரம்

திருச்சிற்றம்பலம்

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை - தூய
உருப்பளிங்கு போல்வாள் என்னுள்ளத்தி னுள்ளே
இருப்பள்இங்கு வாரா திடர்!

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் - வெள்ளை
அரியா சனத்தில் அரசரோ டெம்மைச்
சரியா சனம்வைத்த தாய்!

படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடிகமழ்பூந்தாமரைபோற் கையும் - துடியிடையும்
அல்லும் பகலும் அனவரத முந்துதித்தால்
கல்லும் சொல்லாதோ கவி.?

திருச்சிற்றம்பலம்

# இந்து மருத்துவம்

வாழ்க்கையின் உயர்ந்த பயன் என்பது நோயின்றி வாழ்தல் ஆகும். "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என தொன்மைக் காலம் முதல் இந்துக்கள் கூறி வருகின்றனர். இத்தகைய மருத்தும் பற்றிய சிந்தனைகள் இந்துசமய வாழ்க்கை முறைகளிலும் பிரதிபலிக்கப்பட்டு வருகின்றன. இந்துக்கள் தமது சமயப் பாரம்பரியங்களாலும் எண்ணங்களாலும் விஞ்ஞான ரீதியான விளக்கங்களையும் அதற்கு ஆதாரபூர்வமான நியாயங்களையும் வெளிப்படுத்தி வந்துள்ளனர். இந்து மருத்துவமானது இந்துக்களுடைய வாழ்வியலொடு மிகவும் பின்னிப் பிணைந்த தொன்றாக காணப்படுகின்றது. எனவே அவை பற்றி விரிவாக நோக்குவோம்.

சைவ சமயம் கொண்டுள்ள வழிபாட்டுப் பாரம்பரியங்களில் மருத்துவ சிந்தனைகள் மிக நீண்ட காலமாகவே நிலவி வருகின்றன. இவ்வழிபாட்டு முறைகளில் யோகாசனம் என்ற கலை மிகவும் முக்கியமானது. காலை மாலை மூச்சை அடக்கி தியானப் பயிற்சியில் ஈடுபடு வதனால் ஞாபகசக்தி அதிகரிப்பதுடன் குருதிச் சுற்றோட்டம் சீராக நடைபெறவும் வழி செய்கின்றது. மருத்துவ ரீதியாக உடலையும், உள்ளத்தையும் குணப்படுத்தி ஆரோக்கியமாக வாழ்வதற்கு யோகாசனம் உதவுகின்றது. அத்துடன் பிள்ளையார் வழிபாட்டில் தோப்புக் கரணம் போடுதல், நெற்றிப் பொட்டின் இரு பக்கமும் குட்டிக் கும்பிடுவதால் அங்குள்ள நரம்பு மையங்கள் தூண்டப்பட்டு நினைவாற்றல் அதிகரிக்கும் என்ற சிந்தனை இன்றைய அறிவியலுடன் இணைந்து போவதை காணமுடிகின்றது. அவ்வாறே அட்டாங்க நமஸ்காரம், பஞ்சாங்க நமஸ்காரம், திரியங்க நமஸ்காரம், அங்கப் பிரதட்சணம், தலயாத்திரை செய்தல் முதலிய சமய வழிபாட்டு முறைகளும் காவடி ஆடுதல், கரகம் ஆடுதல், தீப்பந்தம் ஏந்துதல், கும்மி, கோலாட்டம், நடனங்கள், கிராமியக் கலைகளும் உடல் ஆரோக்கியத்தை உண்டு பண்ணுபவையாகும். இத்தகைய வழிபாட்டு முறைகள் உடலில் உள்ள நாரி, முழங்கால், மூட்டுக்கள், தசைகள் என்பன பலம் அடைவதற்கு உதவி புரிகின்றன. இதனால் இரத்த சுரப்பிகளில் உள்ள அடைப்புகள் நீக்கப்பட்டு குருதிச் சுற்றோட்டம் ஒழுங்கமைக்கப்படுகின்றது. மேலும் நீரிழிவு வாதநோய் முதலிய நோய்கள் குணமடைவதற்கும் இவ்வழிகள் உதவுகின்றன. குறிப்பாக சுவாச நோய்கள் நீங்குவதற்கும் இவ்வழிகள் உதவுகின்றன. இவ்வகையில் ஆங்கில மருத்துவத்தால் தீர்க்க முடியாத பல நோய்களை இந்துசமயம் கண்ட யோகாசன முறைகள், பிராணாயாமம் முதலியன தீர்த்து வருகின்றன.

இந்து விரத நியமங்களும், பண்டிகைகளும் ஆன்மீக நோக்குடையவை மட்டுமன்றி உடல் நலம் காக்கும் செயற்பாடுகளாகும். விரதங்களை அனுட்டிப்பதனால் புலனடக்கம் ஏற்படுகின்றது. அத்துடன் பண்டிகைக் காலங்களிலும் விரத காலங்களிலும் வீட்டையும், சுற்றாடலையும் தூய்மைப் படுத்துவதனாலும், அறுசுவை உணவுகளைப் பரிமாறுவதனாலும், வாழ்த்துக்களை பரிமாறுவதனாலும் மன அமைதியும் உற்சாகமும் ஏற்படுவதுடன் அறுசுவை உணவுகளினால் உடல் வளர்ச்சிக்குத் தேவையான சத்துக்களும், போசணைகளும் கிடைக்கின்றன. இந்துக்கள் பச்சிலைகளை உணவுடன் சேர்த்துக் கொள்வதுடன் காய்கறிகளை உண்பவர்களாகவும் விளங்குகின்றனர். இதனால் உடல் நலத்துடன் நீண்டகாலம் இவ்வுலகில் வாழமுடியும் என ஆய்வுகள் குறிப்பிடுகின்றன. தைப்பொங்கல் பண்டிகையின் போது சூரியனுக்கு நன்றி செலுத்துவதுடன் காலை மாலை சூரிய வழிபாட்டில் ஈடுபடுவதனால் கண்ணுக்கு பலத்தையும், உடலுக்கு விட்டமின் D என்னும் தாதுவையும் ஊட்டுகின்றன. எனவே மெய்ஞ்ஞான சமய வழிபாட்டு முறைகள் வலியுறுத்தும் அனைத்து நடைமுறைகளும் விஞ்ஞான முறையில் கொடுக்கப்படும் கருத்து விளக்கங்களாக அமைகின்றன.

இந்துக்கள் சமய சடங்குகள் நடைபெற முன்னர் சில சடங்குகள் நடைபெற்ற பின்னர் வீட்டையும் சுற்றுப்புறத்தையும் சாணம், மஞ்சள் ஆகியவற்றினால் சுத்தப்படுத்துவர். மஞ்சள் கிருமிகளை அழிக்கும் கிருமி நாசினியாகும். இதனால்தான் மரண சடங்கு நடந்த இடங்களில் மஞ்சளை பயன்படுத்திக் கொள்கின்றனர். ஏனைய கிரியைகளிலும் மஞ்சள் முதன்மை பெறுகின்றது. பசுவைத் தெய்வமாகப் போற்றுவது இந்துக்களுடைய பாரம்பரிய வழமையாகும். காரணம் பசுவின் பால் மிகச் சிறந்த சத்துணவாகும். பசுவின் சாணம் கிருமிநாசினியாக விளங்குவதால் வீடுமெழுக வாசலில் தெளிக்கப் பயன்படுத்திக் கொள்கின்றோம். பசுவின் பால் நெய், சாணம், கோசலம், தயிர் ஆகிய ஐந்தினையும் பஞ்ச கௌவியம் எனக் கூறுவார்கள். இது பல நோய்களை போக்கும் குணமுடையது. கிரியைகளின் போது தீபாராதனை செய்தல், சூடம் எரித்தல், யாகம் செய்தல், ஊதுபத்தி சாம்பிராணி போன்றவற்றை பயன்படுத்துவதனால் சுத்தமாக வாழ வழிவகுக்கின்றன.

சமயச் சின்னங்களை அணிவதன் மூலம் உடல் வியாதிகளை அகற்றலாம் என்று அமெரிக்க விஞ்ஞானிகள் குறிப்பிடுகின்றனர். விபூதி உடல் நலம் காக்கும் முக்கிய ஔடதமாகும். விபூதி அணிவது சமய நெறிமுறையாகும். அதேவேளை குளித்த பின் அணிவதனால் உடலில் உள்ள ஈரத்தன்மை உலர்த்தப்படுகின்றது. விபூதியை 16 இடங்களில் தரிக்க வேண்டும் என சைவசமயம் வலியுறுத்துகின்றது. இந்தப் பதினாறு இடங்களும் இன்றுள்ள அக்குப்பஞ்சர் வைத்திய முறையில் இனம் காணப்பட்ட இடங்களாக கூறப்படுகின்றன. தாவர உணவை உண்ணும் பசுவின் சாணத்தில் இருந்து தயாரிக்கப்படும் விபூதி உடலுக்கும், உள்ளத்திற்கும் தூய்மையைத் தரவல்லது. உடம்பில் நாடி நரம்புகள் சந்திக்கும் நெற்றிப் பொட்டில் குங்குமம் அணிவதால் அதில் உள்ள மஞ்சளின் ஜீரண சக்திகள் உடம்பில் ஊடுருவி உடல் வியாதிகளை குறிப்பாக விசத்தினால் உண்டாகும் பாதிப்புக்களை அகற்றுகின்றது. சந்தனம் அணிவதால் உடலுக்கு குளிர்ச்சியும், உள்ளத்திற்கு மகிழ்ச்சியும் தருகின்றது. இந்துக்கள் பயன்படுத்தும் மங்கலப் பொருட்களில் வாழைப் பழம் ஒன்றாகும். வாழை அடிமுதல் நுனிவரை மக்களுக்குப் பயன்படுகின்றது. வாழைப்பழத்தில் மூளை வளர்ச்சிக்குத் தேவையான செறோட்டின் என்னும் பொருளை உருவாக்கும் சக்தி நிறையவே உள்ளது. இது இருந்தால் தான் மனதில் மகிழ்ச்சியும், முகத்தில் புன்னகையும் உண்டாகும். பழங்களில் முதல்தர பழம் வாழைப்பழம். இதைக் கூடுதலாக புசிக்கும் சமுதாயம் அறிவுள்ள சமுதாயமாக





மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

விளங்கும் என்பது கண்கூடு. நமது பாவங் களைப் போக்கும் அபிஷேக தீர்த்தம் மந்திரங்களின் சக்தியை ஈர்த்து வைத்திருக்கும் நன்மைகொண்ட விக்கிரகங்களிலிருந்து வெளியேறி வரும் தீர்த்தம் உட்கொள்வதா னால் நமது உடலின் உட்புறமும், வெளியே உடலில் பூசிக் கொள்வதால் எமது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்களும் பரிசுத்தம் அடையும் எனவே வாழைப்பழம், தீர்த்தம் போன்றவையும் மருத்துவகுணம் உடையனவாகவே விளங்கு கின்றன.

இவ்வாறாக இந்து மதமும், அதனுடைய வழிபாட்டுப் பாரம்பரியங்களும் மருத்துவக் கோட்பாடுகளுடன் நெருக்கமான தொடர்பு களைக் கொண்டு விளங்குவதை காண முடிகின்றது. உள்ளமும் உடலும் சுகநிலை யிலும் ஆரோக்கியமாகவும் அமைகின்ற பொழுது தான் வாழ்க்கை பயன்களை அடைய முடிகின்றது. எதிர்காலத்தை தீர்மானிக்க முடிகின்றது. இவை யாவற்றிற்கும் எமது சமயம் பக்க பலமாக உள்ளது. எல்லா சமயங்களையும் போலவே தூய்மையை எமது சமயமும் வலியுறுத்துகின்றது. தினமும் நீராடி தோய்த்துலர்ந்த ஆடை அணிந்து ஆலயம் செல்ல வேண்டும் என சமயப் பெரியார்கள் பலர் கூறியுள்ளனர். விசேட காலங்களில் மட்டுமன்றி என்றும் நோய்நொடி அற்றவர் களாக வாழ இந்துசமயம் மருத்துவத்துடன் தொடர்புடைய கோட்பாடுகளை முன்வைத் துள்ளது. எனவே சைவசமயிகள் அவற்றை முறையாக கடைப்பிடித்தால் நலமுடன் வாழ முடியும்.

**ஆக்கம்: குணசாந்தினி அருமைநாதன்**
மாணவி,
*கிளி/கிளிநொச்சி மகா வித்தியாலயம், கிளிநொச்சி.*

உ
சிவமயம்

## முருகன் பஜனைப் பாடல்கள்

சரணம் சரணம் முத்தையா
சரவண பவனே முத்தையா
வேலூர் வளரும் முத்தையா
வேண்டுவ தருள்வாய் முத்தையா
அறிவைத் தருவாய் முத்தையா
அமைதியைத் தருவாய் முத்தையா
ஆறுதல் தருவாய் முத்தையா
தேறுதல் சொல்வாய் முத்தையா
இன்பம் தருவாய் முத்தையா
இன்னல் தீர்ப்பாய் முத்தையா
ஈசன் மகனே முத்தையா
ஈடற வைப்பாய் முத்தையா
உண்மைத் தெய்வம் முத்தையா
உயர்வைத் தருவாய் முத்தையா
சேவற் கொடியோய் முத்தையா
சேயெனைக் காப்பாய் முத்தையா
வழியைச் சொல்வாய் முத்தையா
வாழ்வைத் தருவாய் முத்தையா (சரணம்)

திருச்சிற்றம்பலம்



உ

## இரணைமடு நதியின் குடபாகத்தில் கனகபுரத் தலத்தே கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் கனகாம்பிகை அம்பாள் மேற் பாடப்பட்ட பதிகம்

யாத்தவர் கரவை நாடக கவிமணி
**திரு.எம்.வீ.கிருஷ்ணாழ்வார் அவர்கள்**

விநாயகக் கடவுள் துதி வெண்பா

சீரார் கனகபுரத் தேவிகன காம்பிகைமேல்
ஏரார் பதிக மியம்புதற்குக் - காராரும்
தொந்திவயிற் றைந்துகரச் சுந்தரமார் சிந்தூரத்
தந்திமுகனே கிருபை தா.

### நூல்

1. காருலவு முகில்தடவு முயர்சோலைக் காவுதவும்
கனிசிந்தக் கனியுஞ் சாறும்
கமழ்கந்தம் செறிமலர்க்கா தருநறவும் காரெருமை
காலிடறிக் கசியும் பாலும்
ஏருலவு வானமழை வழுவாது பொழிந்திடவூற்
றெடுத்தோங்கு மினிய நீரும்
இரும்புனலாய்ப் பொன்ராய னுறுகிப் பெருகிநல
இரணைமடு வுதித்துத் தேங்கிச்
சீருலவு பழனமெலாம் மடைதிறந்து விளைவெய்தச்
செஞ்சாலிக் கதிர் வணங்கும்
செல்வமிகு கனகபுர தெய்வதல மீதிலே
திருக்கோயில் கொண்ட கொடியே
தாருலவு மதுரைமலை யத்துவச பாண்டியன்
தவமீன்ற தவ வடிவமே
தயைமேவு கனகாம்பி கைத்தேவி யேகருணை
தந்தெமைத் தாங்கு வாயே.

2. பச்சைப் பசுங்கிளை படர்ந்தோங்கு சோலையிற்
பைங்கிளிகள் பேசு தமிழும்
பண்ணிசை திறம்பாது குயிலினம் கூடியே
பாடிடும் கீத வொலியும்
நச்சைப் பழித்தநிற மயிலினம் திசைதொறும்
நாடிநின் றாடு நடமும்
நற்றாம மலர்விட்டு வயல்தாவி யோதிமம்
நடைகாட்டு புனித வழகும்

விளங்கும் என்பது கண்கூடு. நமது பாவங்களைப் போக்கும் அபிஷேக தீர்த்தம் மந்திரங்களின் சக்தியை ஈர்த்து வைத்திருக்கும் தன்மைகொண்ட விக்கிரகங்களிலிருந்து வெளியேறி வரும் தீர்த்தம் உட்கொள்வதானால் நமது உடலின் உட்புறமும், வெளியே உடலில் பூசிக் கொள்வதால் எமது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்களும் பரிசுத்தம் அடையும் எனவே வாழைப்பழம், தீர்த்தம் போன்றவையும் மருத்துவகுணம் உடையனவாகவே விளங்குகின்றன.

இவ்வாறாக இந்து மதமும், அதனுடைய வழிபாட்டுப் பாரம்பரியங்களும் மருத்துவக் கோட்பாடுகளுடன் நெருக்கமான தொடர்புகளைக் கொண்டு விளங்குவதை காண முடிகின்றது. உள்ளமும் உடலும் சுகநிலையிலும் ஆரோக்கியமாகவும் அமைகின்ற பொழுது தான் வாழ்க்கை பயன்களை அடைய முடிகின்றது. எதிர்காலத்தை தீர்மானிக்க முடிகின்றது. இவை யாவற்றிற்கும் எமது சமயம் பக்க பலமாக உள்ளது. எல்லா சமயங்களையும் போலவே தூய்மையை எமது சமயமும் வலியுறுத்துகின்றது. தினமும் நீராடி தோய்த்துலர்ந்த ஆடை அணிந்து ஆலயம் செல்ல வேண்டும் என சமயப் பெரியார்கள் பலர் கூறியுள்ளனர். விசேட காலங்களில் மட்டுமன்றி என்றும் நோய்நொடி அற்றவர்களாக வாழ இந்துசமயம் மருத்துவத்துடன் தொடர்புடைய கோட்பாடுகளை முன்வைத்துள்ளது. எனவே சைவசமயிகள் அவற்றை முறையாக கடைப்பிடித்தால் நலமுடன் வாழ முடியும்.

**ஆக்கம்: குணசாந்தினி அருமைநாதன்**
மாணவி,
கிளி/கிளிநொச்சி மகா வித்தியாலயம், கிளிநொச்சி.

உ
சிவமயம்

## முருகன் பஜனைப் பாடல்கள்

சரணம் சரணம் முத்தையா
சரவண பவனே முத்தையா
வேலூர் வளரும் முத்தையா
வேண்டுவ தருள்வாய் முத்தையா
அறிவைத் தருவாய் முத்தையா
அமைதியைத் தருவாய் முத்தையா
ஆறுதல் தருவாய் முத்தையா
தேறுதல் சொல்வாய் முத்தையா
இன்பம் தருவாய் முத்தையா
இன்னல் தீர்ப்பாய் முத்தையா
ஈசன் மகனே முத்தையா
ஈடற வைப்பாய் முத்தையா
உண்மைத் தெய்வம் முத்தையா
உயர்வைத் தருவாய் முத்தையா
சேவற் கொடியோய் முத்தையா
சேயெனைக் காப்பாய் முத்தையா
வழியைச் சொல்வாய் முத்தையா
வாழ்வைத் தருவாய் முத்தையா (சரணம்)

திருச்சிற்றம்பலம்



உ

## இரணைமடு நதியின் குடபாகத்தில் கனகபுரத் தலத்தே கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் கனகாம்பிகை அம்பாள் மேற் பாடப்பட்ட பதிகம்

யாத்தவர் கரவை நாடக கவிமணி
**திரு.எம்.வீ.கிருஷ்ணாழ்வார் அவர்கள்**

விநாயகக் கடவுள் துதி வெண்பா
சீரார் கனகபுரத் தேவிகன காம்பிகைமேல்
ஏரார் பதிக மியம்புதற்குக் - காராரும்
தொந்திவயிற் றைந்துகரச் சுந்தரமார் சிந்தூரத்
தந்திமுகனே கிருபை தா.

### நூல்

1. காருலவு முகில்தடவு முயர்சோலைக் காவுதவும்
கனிசிந்தக் கனியுஞ் சாறும்
கமழ்கந்தம் செறிமலர்க்கா தருநறவும் காரெருமை
காலிடறிக் கசியும் பாலும்
ஏருலவு வானமழை வழுவாது பொழிந்திடவூற்
றெடுத்தோங்கு மினிய நீரும்
இரும்புனலாய்ப் பொன்ராய னுறுகிப் பெருகிநல
இரணைமடு வுதித்துத் தேங்கிச்
சீருல்வு பழனமெலாம் மடைதிறந்து விளைவெய்தச்
செஞ்சாலிக் கதிர் வணங்கும்
செல்வமிகு கனகபுர தெய்வதல மீதிலே
திருக்கோயில் கொண்ட கொடியே
தாருலவு மதுரைமலை யத்துவச பாண்டியன்
தவமீன்ற தவ வடிவமே
தயைமேவு கனகாம்பி கைத்தேவி யேகருணை
தந்தெமைத் தாங்கு வாயே.

2. பச்சைப் பசுங்கிளை படர்ந்தோங்கு சோலையிற்
பைங்கிளிகள் பேசு தமிழும்
பண்ணிசை திறம்பாது குயிலினம் கூடியே
பாடிடும் கீத வொலியும்
நச்சைப் பழித்தநிற மயிலினம் திசைதொறும்
நாடிநின் றாடு நடமும்
நற்றாம மலர்விட்டு வயல்தாவி யோதிமம்
நடைகாட்டு புனித வழகும்

இச்சைப் புலன்நீக்கி யோகத்தி லாழ்ந்தோங்கு
மிருடிகட் குற்ற வுறையும்
இனிதே விளங்குமுயர் கனகபுர தலமீதி
லெழுந்தருளி நின்ற பிடியே
கச்சைப் புனைத்திரு வபிராம வல்லியே
களிநின்ற தெய்வ கொடியே
கனகாம்பி கைத்தேவி யேகருணை யீந்தெமைக்
காத்தடித் தாங்கு வாயே.

3. கொடியபுலி மதயானை கரடிமான் கூட்டங்கள்
கூடியுண் டேயுறங்கக்
கூரரவ முங்கீரி யும்பகை யொழித்தன்பு
கொண்டண்டி யுறவு கொள்ளக்
கடியமன முடையவரு மமுதாம்பி காவென்று
கையேந்தி யமுதி ரங்கக்
கடலேரி யலைவந்து தடவார ணங்கண்டு
களித்தொலி பரப்பி விரவ
நெடியதிரு மால்கருட னாய்வந்து காட்டியருள்
நிலமதைத் தலமாக வே
நேமித்து வளர்மகுட சூரசங் காரியே
நித்தியா னந்த முதலே
படியதனி லடியர்மிடி மடயவருள் பரமனின்
பாரியே பரா சக்தியே
பழனமது சூழ்கனக புரிமருவு தேவியெம்
பவமறுத் தாளு வாயே.

4. அணிகொண்ட சிரசணிக ளுலகேங்கு மொளிவீசி
அருணகிர ணம்ம றைக்க
அங்கைவிர லாழிமணி யாரமழ கார்வளையல்
அம்புலிக் கொளியு தவிட
தணிகொண்ட தண்டைச் சிலம்பொலி புலம்பிடத்
தங்கவோட்டி யாண மின்னச்
சங்கையுறு ரத்னமூக் குத்தியொளி யும்வதன
தாமரையு மமரா டிட
மணிகொண்ட செம்பவள மலர்வாயி லிளமுறுவல்
மலர்ந்திடத் தளர முதிர
மறுவற்ற நீலோற்ப லம்தாங்கு கையிலே
மங்களக் கிள்ளை யமரப்
பணிகொண்ட பரனடியர் பணிகொள்ளு வன்னியம்
பதிமேவு கனகபுரமே
பரவுதல மாக்கோண்ட கனகாம்பி காவெமைப்
பாதுகாத் தருளு வாயே.



5. வளமிக்க மடுவோர முனதால யங்கட்டி
வருஷாதி முதல்மாத மாய்
வருசித்தி ரைத்திங்கள் தனில்மேவு பூரணையில்
வான்புகழ் விழா வெடுத்தும்
குளமீது நீர்மொண்டு நிறைபொங்கல் பொங்கிநம்
குறைநீக்கி வாழ்வ தென்றும்
கோதற்ற சிவதொண்டர் கொண்டநற் கொள்கை கை
கூடாமை யால் வருந்தி
உளநைந்து கல்லொன்று தாண்டிநீர் பெற்றநிலை
யுன்திரு வுளத் துறுத்த
ஒருமுப்ப தடிமற்ற வருஷத்தில் நீர்மட்ட
மோங்கிடச் செய்த தாயே
அளவற்ற புதுமைக்கு வழிவிட்ட தேவியே
அரனுக்கு நற்று ணைவியே
அருளூற்ற கனகபுர மருவுகன காம்பிகா
ஆதரித் தெமை யாள்வையே.

6. தீர்த்ததல மாகவும் மூர்த்ததளி யாகவும்
செகமேல் விளங்கிடக் கற்
றிருப்பணி யமைக்கவும் தேருரவும் தூய
சிங்கவா கன மேறவும்
சீர்த்திசெறி விக்கிரக மொன்றை யிஸ்த்தாபனம்
செய்யவும் விழவெடுத்துச்
சேவிக்கவும் பத்தர் கொண்ட கைங்கரியமது
சிறப்புற முடித்த வருளும்
பூர்த்தியுற வழிகாட்டி யருள்கூட்டு வாய்மலைப்
பூவைபுவ னேசு வரியே
புனல்தாவு மிரணைமடு தனில்மேவு நற்கனக
புரமீதி லென்று முனது
கீர்த்திபொலி யச்சகல தேர்த்திதயிம் நிறைவோடு
கிட்டிடக் கேடு மறையக்
கிளரொளி பரக்கவிடு கனகாம்பி காவெனுங்
கிள்ளைமொழி விள்ளு மமுதே.

7. பொன்னழகை யென்றுபுல வோர்புகழவே தமிழ்ப்
புரவலர்கள் முடி சூடியே
புவிபோற்ற வரசாண்ட பண்டைய வளங்கள்பொலி
புண்யநக ராம்வன்னி யூர்
அன்னியர் வசப்பட்டு மிடியுற்று நீர்நிலைகள்
அற்றொழிந் தாலய மெலாம்
அடியோடு தரைமட்ட மாகியா சாரங்கள்
அறவே தொலைந்த வகையால்
இன்னலுறு சைவமுங் குடிமக்களும் பிரிந்
தேகிவேற் றூரி லுறைய
இகலற்ற நற்பூமி புகலற்ற வனமாகி
எழிலற்ற யிவ் வேளையில்
தொன்மைநிலை பெற்றிடத் திருவுளங் கொண்டிங்கு
தோன்றியே கனக புரியில்
துகளிலா வாலயங் கொண்டகன காம்பிகைத்
தோகையே துணை செய்வையே.

8. கஞ்சமல ரடி யிணையை யொருநொடியு மறவாது
கைகூப்பி யழுதி ரங்கிக்
கழனிதனில் நடவுநட் டாயிரஞ் செலவிட்ட
காராள ருன்ன ருளையே
தஞ்சமென நம்பிவாழ் கின்றமையி னாலுதவி
சற்றாகி லும்வற் றிடாத்
தன்மைதனை யின்றருள் வதேபோன்று பொங்கிவரு
தடங்கட லெனப்பெருக வும்
பஞ்சமென வாடாது பிணிசிறிது நாடாது
பாக்கியம் பெற்றோங்க வும்
பழமைபோ லன்யநாட் டார்பெறத் தானியம்
பல்கவும் கிருபை யருள்வாய்
கஞ்சனைமடித்த திட நெஞ்சுடைய னுக்கிளைய
கண்ணணங் கே கௌரியே
கனகபுர மீதுவளர் கற்பூர வல்லியே
கனகாம்பி கைத்தேவி யே.





9. சித்திரைத் திங்கள்தனில் நத்திவரு பூரணைத்
திருநாளி லுனது தளியில்
திரளாக வருகோடி யடியார்கள் முறையீடு
செய்து வந்திக்கு மொலியும்
பத்தியொடு பால்பழஞ் சருக்கரையுடன் நல
பருப்புமிட் டமுது பொங்கி
படைத்தினிய மடைபரவிக் கற்பூர மீவொளி
பரவிடப் பாடு நெறியும்
முத்திதரு தலமென்று சித்தர்கள் தினம்கூடி
முடுகியுறை கின்ற நிலையும்
மூதூரெ னும்மதுரை வீட்டொருவியே யிணா
முலைமங்கை கனக புரியில்
நித்தியம் திருநடன மாடியருள் பாலிக்க
நிற்கிறா ளென்னு முரையும்
நிலவுலகி லேபெருக உலவுகன காம்பிகா
நின்கிருபை யீகு வாயே.

10. கார்கொண்ட மதகளிறை முன்னின்று கந்தக்
கடவுளைக் கையி லேந்திக்
கனகமுலை யமுதைக் கறந்துசம் பந்தனின்
கனிவாயி லூற்றி யருளி
தார்கொண்ட மாமகுட சூரைத்தடிந் தண்ட
சராசர மெலா மழித்துத்
தாயாகியே நின்ற வகிலாண்ட நாயகி
சங்கரன் தாங்கு துணைவி
வார்கொண்ட முலைவல்லி மலைவல்லி கற்பூர
வல்லியபி ராம வல்லி
மாணிக்க வல்லிமர கதவல்லி யபிடேக
வல்லியென் றோது மணியே
சீர்கொண்ட கனகபுர மீதுவளர் செல்வியே
தேவியே மீனாட்சியே
செயமேவு கனகாம்பி கைத்தெய்வ மே யெமது
தீவினைகள் நீக்கி யருளே.

(22.01.1961 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட இரணைமடுப் பதிகம்
மீள் நூலுருவாக்கம் செய்யப்பட்டுள்ளது)



மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர்

உ

## உணரமுடிந்த உன்னதம்

அரகர மகாதேவா
பதிலுக்குச் சொல்லிவிட்டு
பிரசாதத்தைத் தேடிய கண்களில்
நினைவுகளின் நீட்சி....

பௌர்ணமி வெள்ளத்தில்
நுரைக்கும் பானைகள்
பொங்கிப் படைக்கும் நாளில்
பெருமிதம் கொள்ளும்.
இரணைமடுத் தீர்த்தத்தில்
விளைந்த நெல்வயல்கள்....

மதுரையில் மீனாட்சி...
திருக்கடவூர் அபிராமி...
காஞ்சியில் காமாட்சி....
கிளிநொச்சியில்
கனகாம்பிகையின் அருளாட்சி....
உற்றுப்பார்க்கவன்றி
உணரமுடிந்த உன்னதம்....

கையிலேந்திய
கிளியின் மொழியில்
கருணை சொரியும்
கிட்சண்யம்....

காலைக் கதிர்
குளத்தில் குளித்து
கும்பிட்டுத் தொடங்கும்
ஒளிப் பிரவாகம்....

மெல்லெனத் தூறிய சாரலை
சேமித்தது இரணைமடு வாவி...
ஒரு நாளோடு தொடங்கிய விழா
ஒன்பதாவது தினத்தில்
சித்திரத்தேர் மூன்றுடன் சிரிக்கிறாள்
தேவி....



பத்தாவது நாளில்
பவனிவந்து
முத்தாக மூங்கிக்குளித்து
தீர்த்தமாடும் காட்சி
மெய்யுருக்கும்
பொய்யின்றிப் பூவுலகில்
வாழ்தலின் அர்த்தப்படும்
அந்த நாட்கள்....

புயல் வீசிப்போன வேளை
கிளை முறிந்தது
கிளிகள் ப(இ)றந்தன.

இளவேனில் திரும்பலில்
கூடுகட்டி
குடமுழுக்குக் கண்டோம்...
பாடுபட்டு அம்பாளின்
பாதத்தை தொட்டழுது
துயர் தீர்த்தோம்
விட்டெழுந்து போகட்டும்
வேதனைகள்...
சோதனைகளில்லாமல்
ஒளிரட்டும்
விளக்கொளிகள்...

வழிந்தோடும்
இரணைமடுப் பொய்கையின்
நீர்வலம்...
பங்குனித் திங்களில்
தொடங்கும் அம்பாளின்
ஊர்வலம்....

பசுமை வெளியெங்கும்
பூத்துக் குலுங்கும்
கதிர் மணிகள்....
வரப்புயர வாழ்வுயரும்
மக்களின் சிரிப்பொலிகள்....

அதோ!
புன்னகைக்கும் சோலையிலிருந்து
பூக்களின் அணிவகுப்பு
அம்பாளின் அர்ச்சனைக்காக....

அ.பிரியன்,
கிளிநொச்சி.

# மகா சிவராத்திரி

மகா சிவராத்திரி விரதத்தைச் சைவ வாழ்வு வாழ்ந்துவரும்சகல சைவப் பெரு மக்களும் அனுஷ்டிக்கலாம்.

இராத்திரி என்பது இருட்காலம் என்பதை யாவரும் அறிந்தது. எனினும் உண்மையான இருட்காலம் இறைவன் உலகம் முழுவதையும் ஒடுக்கி நிற்கும் காலம்" இதனை "சர்வசங்கார காலம்", "பிரளயகாலம்", "ஊழி முடிவு" என்று பலவாறாகக் கூறுவர். இரவில் ஒளியின்றி உயிர்களின் நடமாட்டமில்லாது எங்கும் அமைதி நிலவுவது போல், இந்த ஊழி ஒடுக்க காலத்தில் பஞ்சபூதங்களும் தனு, கரண, புவன, போகங்களும் ஒன்றுமேயில்லாது உயிர்கள் செயலற்றுக் கிடப்பனவாம். ஆகவே அப்பொழுது அமைதியே நிலவும் இந்தப் பேரிருளில் தனித்து நிற்ப வன் சிவபெருமான் ஒருவ னேயாம் நாம் நாள்தோறும் காண்கின்ற இரவு அனைத்து யிர்க்கும் உரிய சாதாரண இராக்காலம் ஆயின்உலக ஒடுக்க நிலையாகிய இரவு சிவனுக்கே உரியசாதாரண இராக் காலமாகும். இதனாற் றான் இவ்விரவு "சிவராத் திரி" எனப்பெயர் பெற்றுள் ளது.

ஒடுங்கிய உல கத்தை மீளத் தோற்றுவித்த தற்காக இறைவன் சோதிவடி வான இறைவன் சோதி வடி வான இலிங்கமாய் நின்று "இலளிதாதேவி" என்னும் பெயரோடு சக்தியைத் தோற் றுவிக்க அத்தேவி இலிங்கப் பிரானை வணங்க, அவர் இலிங்கோற்பவராகத் தோன்றி உலகின் மறு தோற்றத்தின் பொருட்டுப் பிரம்மா முதலியோரைப் படைத்துச் சிருட்டித் தொழிலை ஆரம்பிப்பார். இதனையே மாசி மாதத்துச் சதுர்த்தசித்திதியில் வரும் இரவும் அன்றுஇரவு மூன்றாம் சாமம் நடைபெறும் இலிங்கோற்பவ பூசையும் எடுத்துக்காட் டுகின்ற சிவனிடத்தில் அன்பு பூண்டொழுகு வோர்க்கு அன்றைய நாள் சிறந்த நோன்பு நாளாகும். சைவசமயிகள் யாவராலும் அனுட் டிக்கப்படவேண்டிய விரதம் சிவராத்திரி விரதமாகும். மாசி மாதத்துத் தேய்பிறைச் சதுர்த்தசித் திதியில் சிவபெருமானைக்குறித்து அனுட்டிப்பது சிவராத்திரி விரதம். இந்நாளில் உபவாசம் இருப்பதோடு இரவு முழுவதையும் நித்திரையின்றிச் சிவபூசையிலும், சிவவழி பாட்டிலும் செலவு செய்தல் வேண்டும் இரவில் நான்கு சாமப் பூசைகளும் அவ்வக் காலங்களில் செய்தல் உத்தமம். இன்றேல் ஒருகாலத்திற்சேர்த்தேனும் செய்தல் வேண் டும். இது மத்திமம் ஆகும். நான்கு சாமமும் பூசை செய்வோர் முதற் சாமத்திற் பாலாலும் இரண்டாம் சாமத்திற்தயிராலும், மூன்றாம் சாமத்தில் நெய்யாலும் நான்காம் சாமத்தில் தேனாலும் பெருமானுக்கு அபிஷேகம் செய்யக்கடவர். நான்கு சாமப் பூசைகளிலும் வில்வத்தால் அர்ச்சிப்பது மேலான பலனைக் கொடுக்கும். இக் காலங்களில் விநாயகருக்கும். சண்டேசுவரருக்கும் பூசைசெய்தல் வேண்டும் சிவபூசை இல்லாதோர் நான்கு சாமமும் சிவாலய தரிசனம் செய்வதோடு, பஞ்சாட்ச ரசெபம், சிவபுராணம் படித்தல், கேட்டல் முதலியவற்றில் இரவைக்கழித்தல் வேண்டும் உபவாசம் இருக்க இயலாதோர் நீரேனும் பாலேனும் உண்டு கொள்ளலாம். இரவு முழுவதும் இந்நாளில் நித்திரை விழிக்க முடியாதவர் பதினாலாவது நாழிகையில் வரும் இலிங்கோற்பவகாலம் வரையிலாயி னும் நித்திரைஒழித்தல் வேண்டும். இவ்இலிங் கோற்பவகாலத்தில், செய்யும் தரிசனமும் பூசையும் பெரும்பலன் நிறைந்தன இறை வனின் திருவுளம் பற்றியகாலம் இதுவாகும்.

உபவாசம் மேற்கொண்டோர் அடுத்த நாட்காலையில் நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு சூரியோதயத்தின் முன் ஆறுநாழிகைக்குள்ளே சிவனடியாரோடு பாராணம் பண்ணல்வேண்டும் பாரணம் பண்ணிய பின்பகலிலே நித்திரை செய்யக் கூடாது (பாரணம் உபவாசத்திற்குபின் உட்கொள்ளும் உணவு)

சிவசிந்தனையோடு இருந்து இரவு உணவுஉண்ட பின்துயில் கொள்ளலாம். சைவப்பெருமக்கள் யாவரும் சிவபெருமானை விரதஅனுஷ்டானங்களோடு வழிபட்டு நற்பேறுகளைப் பெற்று நல்வாழ்வு வாழ வேண்டும் என்ற உயர்ந்ததத்துவத்தை எடுத்தி யம்புகின்றது.

ஓம் நமசிவாய....... சிவாயநம ஓம்"

வில்வம் இலைமூன்று இலைகளைக் கொண்டதாகும். இவை இச்சாசக்தி, ஞான சக்தி, கிரியா சத்தியாகிய முச்சக்திகள் ஆதலால் வில்வம் இலை சிவனுக்கு விசேஷ மானது. இத்தனை சிறப்புக்களைக் கொண்ட வில்வம் இலை மஹாசிவராத்திரி பூஜை களுக்கு அதி முக்கியத்துவம் பெறுகிறது.

**சிவராத்திரியின் நான்கு சாமப்பூசை விதி முறைகள்**

| சாமம் | மலர் | பத்திரம் |
|---|---|---|
| 1ம்வது | தாமரை, அலரி | வில்வம் |
| 2ம் ஆவது | சண்பகம், தாமரை | துளசி, வில்வம் |
| 3ம் ஆவது | செங்கழுநீர், ஆத்தி பிச்சி | முட்கிளுவை, வில்வம், அறுகு |
| 4ம் ஆவது | நத்தியாவர்த்தம் | விளா |

| | பழம் | தூபம் | ஓதும் வேதம் |
|---|---|---|---|
| 1ம்வது | பலா | வில்வம் சாம்பிராணி | இருக்கு |
| 2ம்வது | மாதுளம் | சந்தனக்கட்டை | யசுர் |
| 3ம் | நானாவித பழங்கள் | குங்குலியம் | சாமம் |
| 4ம்வது | | கற்பூரம் | அதர்வனம் |

செல்வி பூ.கஸ்தூரி,
ஆசிரியர்,
அறநெறிப்பாடசாலை,
இரணைமடு.

# நவராத்திரி

ஒவ்வோராண்டும் புரட்டாதி மாதத்திலே அமாவாசைக்குப் பின்வரும் ஒன்பதுநாளும் நவராத்திரிப் புண்ணியகாலம் எனப்படும். இந்நாட்களில் தேவிபூசை இராத்திரியில் விசேஷமாக நடத்தப்படுவது ஆதலால் நவராத்திரி எனப்படும் (நவ- ஒன்பது) இவ்ஒன்பது தினங்களில் முதல் மூன்று நாட்கள் கிரியா சக்தியான அன்னை துர்க்கையையும் அடுத்தமூன்று நாட்கள் இச்சாசக்தியான திருமகளையும் இறுதிமூன்று நாட்கள் ஞானசக்தியான கலைமகளையும் வழிபடவேண்டும். உலகின் முக்கிய தேவையான வீரம், செல்வம், ஞானம் இவை மூன்றும் பெற்றுச் சிறந்திட முப்பெருந்தேவியரையும்மும் மூன்று நாட்கள் முறைப்படி வேண்டி வழிப்பட்டாலும் மூன்று சக்தியரும் ஒன்றான ஆதிசக்தியே எனக்கருதி சக்தியின் ஒன்பது ரூபங்களையும் ஒன்பது நாட்களிலும் வழிபடுவது இன்னும் சிறப்பாகும்.

அதாவது புதனுக்குரிய ராசியான கன்னியில் புரட்டாதி மாதத்தில் சூரியன் பிரவேசிக்கும் காலத்தில் தேவியை வழிபடுவது மிகவும் சிறப்பானதாகும். எனவே இப்புண்ணிய காலத்தில் நவராத்திரி தினங்களில் நவக்கிரக நாயகியை வழிபடுகிறோம். ஒன்பது நாளும் பார்வதி தேவியாரைக் கும்பத்திலே பூஜை செய்து அநுட்டிக்கும் விரதமாகும். இதிலே முதல் எட்டு நாளும் பணிகாரம், பழம் முதலியவை உட்கொண்டு மகாநவமியன்று உபவாசஞ் செய்தல் வேண்டும் அன்னை அசுரனை அழிக்க துர்க்கையாகத் தோன்றிய திருநாளில் நவராத்திரி ஆரம்பமாகியது. அன்னை அசுரனை அழித்து வெற்றி கொண்டதை கொண்டாடும் பொருட்டே இறுதி நாளான விஜயதசமி கொண்டாடப்படுகிறது. இராமர் சக்தியை வழிபட்டு இராவணனை விஜய தசமியான பத்தாவது நாளில் தான் வென்றார் என்றும், தருமத்தின் வடிவமான தர்மரும் தனது மாங்கல்ய பலம் குறையாமல் இருக்க சாவித்திரியும் இவ்விரதத்தைக் கடைப் பிடித்தார்கள் என்றும் கண்ணபிரானும் பிருந்தாவனத்தில் நவராத்திரி விரதம் கடைப்பிடித்து பூஜைகள் செய்து அன்னையின் அருள் பெற்றதாக புராதன வரலாறுகள் கூறுகின்றது. எனவே விஜயதசமின்று அம்பாளை வழிபட்டுத் தொடங்கும் அனைத்துக் காரியங் களும் வெற்றியடையும் என்பதால் அம்பாளை வழிபட்டுபேறுபல பெற்று வளமுடன் வாழ்வோம்.

| நாள் | இராகம் | பிரசாதம் | பழம் | புஷ்பம் | பத்திரம் |
|---|---|---|---|---|---|
| 1.ஆவது | தோடி | வெண் பொங்கல் சுண்டல் | வாழை | மல்லிகை | வில்வம் |
| 2.ஆவது | கல்யாணி | புளியோதரை | மா | முல்லை | துளசி |
| 3.ஆவது | காம்போதி | சக்கரைப் பொங்கல் | பலா | சம்பங்கி | மரு |
| 4.ஆவது | பைரவி | கறிச்சாதம் பொரியல் | கொய்யா | ஜாதிமல்லிகை | கதிர்ப் பச்சை |
| 5.ஆவது | பந்துவராளி | தயிர்ச்சாதம் | மாதுளை | பவளமல்லி | வீபூதிப் பச்சை |
| 6.ஆவது | நீலாம்பரி | தேங்காய்ச் சாதம் | நாரத்தை | செம்பருத்தி | சந்தன இலை |
| 7.ஆவது | பிலகரி | எலுமிச்சம்பழம் | பேரீந்து | தாழம்பூ | தும்பை இலை |
| 8.ஆவது | புன்னாகவராளி | பாயாசம் முறுக்கு | திராட்சை | ரோஜா | பன்னீர் இலை |
| 9.ஆவது | வசந்தா | திரட்டுப்பால் | நாவல் | தாமரை | மருக் கொழுந்து |

உலக நாயகியான சக்தி பல திருவுருவங்களாக காட்சி தருகிறாள். ஐந்தொழில் இயக்கத்தை ஏற்படுத்துவது நடராஜப் பெருமானின் திருநடனம். எம்பெருமான் அம்பிகையின் பக்கம் நோக்கி ஆடுகிறார்.

"மாதொரு பாகம் நோக்கி மன்னு சிற்றம்பலத்தே ஆதியும் முடிவும் இல்லாத அற்புதத் தனிக் கூத்தாடும் நாதனார்" எனச் சேக்கிழார் சுவாமிகள் போற்றுகிறார்.

தாய்மைக்கே தனியுரிமை கொடுத்துப் பேணும் சமயம் இந்துமதம் "தாயினும் சிறந்ததொரு கோயிலும் இல்லை" அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" மாதா,பிதா, குருதெய்வம்" எனத் தாயை எல்லா வற்றுக்கும் மேலாக எண்ணிப் போற்றினார். அம்பிகைக் குரிய விரதங்கள் பல உள் ளன. அவற்றுள் நவராத்திரியும் ஒன்றாகும்.

செல்வி ச.சசிகலா,
ஆசிரியர்,
அறநெறிப்பாடசாலை,
இரணைமடு.

# அறநெறிப் பாடசாலையும் வளர்ச்சியும்

சனாதன தர்மமெனச் சிறப்பிக்கப் படும் இந்துமதம் ஆழங்காண முடியாத பெரும் ஆழி இப்படிப்பட்ட இந்துமதத்தை அழியவிடாது வளர்க்கும் நோக்குடனும், மாணவரிடையே பரஸ்பர புரிந்துணர்வு, அன்பு, சகோதரத்துவம் என்பவற்றை வளர்க்கும் நோக்குடனும் கனகாம்பிகை அம்மன் கோயிலில் செல்வி ஜெ.சிதம்பர சிவகுருக்கள் முதற் தடவையாக 10 மாணவர் களுடனும் ஒரு ஆசிரியருடனும் எமது பாடசாலை ஆரம்பிக்கப்பட்டு பின்பு அசா தாரண சூழ்நிலையின் போது இடம் பெயர்ந்து மீண்டும் 2010ஆம் ஆண்டு ஆரம் பிக்கப்பட்டு எமது பாடசாலையில் ஏறக் குறைய 100 மாணவர்கள் கல்வி கற்கின் றார்கள்.

தரம் 01-11 வரையிலான வகுப்புக்கள் இப்பாட சாலையில் உள்ளன. இம் மாணவருக்கு இவ் அற நெறிக்கல்வியானது பெரி தும் பயனுள்ளதாக உள்ளது என நாம் கருதுகின்றோம். ஏனெனில் பாடசாலையில் கற்பிக்கப்படுகின்ற விடயங் களும், அறநெறிப் பாட சாலையில் கற்பிக்கின்ற விட யங்களும் ஒரேதத்துவத் தையே உணர்த்துவதால் இது மிகவும் தங்களுக்கு பயன்உள்ளதாக மாணவர் கள் கருதி தற்போது 100 இற்கு மேற்பட்ட மாண வர்கள் இப்பாடசாலையில் பயன் பெற்று வருகின் றார்கள்.

இம்மாணவரை ஊக்குவிக்கும் முகமா கவும் மாணவரின் தேர்ச்சிமட்டத்தை அறியும் முகமாகவும் கடந்த நவராத்திரி விழாவை முன்னிட்டு எமது கோயிலிலி (கனகாம்பிகை அம்மன் கோவிலில்) பல போட்டிகள் நடத்தப்பட்டு (கோலம்போடு தல், மாலை கட்டுதல், பண்ணோடு தேவாரம் பாடுதல், எடுத்து பரீட்சைகள்) 1ஆம், 2ஆம், 3ஆம் இடத்தைப் பெற்றவர்களுக்கு சிறப்பு பரிசில் களும் மற்றையவர்களுக்குச் சாதாரண பரிசில் களும் வழங்கப்பட்டன. மற்றும் மாணவர் களுக்கான சீருடைகளும் இலவசப் பாடப் புத்தகங்கள் (சைவபோதினி) இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களத்தால் வழங்கப்பட்டது.

இதைவிட எமது கோயில் அறங்காவல வர் சபையினரும் மாணவர்களுக்கு கொப்பி யும், புத்தகங்களும் வழங்கிவருவதோடு ஆசிரியர்களுக்கான சீருடை ஊக்குவிக்கும் முகமாக மாதாந்தப் பணம் என்பவற்றையும் வழங்கி வருகின்றது.

இவ் அறநெறி பாடசாலையானது பலதரப்பட்ட மாணவர்களை உள்ளடக்கி அவர்களை சமுதாயத்தில் நல்ல பிரஜைகளாக வளர்வதற்கும் மற்றும் எமது சைவசமய கோட்பாடுகளை கடைப்பிடிப்பதற்கும் எங் களால் போதிக்கப்படுகிறது. இத்துடன் அவர் கள் அறப்பணிகளிலும் செயல்பட தூண்டு கோளாக இவர்களுக்கு உள்ளது. எங்கள் அறங்காவலர் சபையின் ஊக்குவித்தல் மூலமே நாங்கள் இதனை செய்கிறோம். எமது அறநெறிப் பாடசாலை மேன்மேலும் வளர்ச்சி யுற அம்பாளின் அருள் ஆசிகள் பெற்று ஆசிரியர்களும், மாணவர்களும் தாயின் பாதார விந்தங்களை வேண்டி நிற்கிறோம்.

திருமதி த.கோகிலவதனி,
ஆசிரியர், அறநெறிப்பாடசாலை, இரணைமடு.





# கும்பாபிஷேகங்கள் (குடமுழுக்கு) ஏன்?

இறைவனின் அளவிடமுடியாத பகுத்து உரைக்க இயலாத பெரும் சக்தியால் பிரபஞ்சம் இயங்குகின்றது. இறைவனின் சக்தி சித் சக்தி என்று கூறப்படும். சித்து என்றால் அறிவே சித் அறிவாகும். ஆண் டவன் எங்கும் நிறைந்திருக்கிறான். அவனது இந்த மாபெரும் சக்தியை தேவஆகம நெறி களின்படி திருக்கோயில்களில் எழுந்தருள செய்விக்கப்படுகின்ற சிலை வடிவிலான திருமேனிகளில் நிலைபெறச் செய்கிறார்கள்.

திருக்கோயில்களில் எழுந்தருளி யுள்ள மூர்த்திகளில் தெய்வீக ஆற்றல் தேங்கி நிற்கிறது. அந்த மூர்த்திகளை நாம் வழிபட்டுப் பயனடைகிறோம். ஓடுகின்ற நீரை ஓர் அணையைக் கட்டி அதில் தேக்கி வைத்து விவசாயிகளுக்கு விவசாயக் காரியங் களுக்கும் இதர பணிகளுக்கும் பயன்படுத்து வதைப் போல எல்லாம் வல்ல எங்கும் நிறைந்துள்ள கடவுளின் மாபெரும் சக்தியைத் திருக்கோயில்களில் தேக்கி வைத்து உயிர்கள் மேன்மையடைவதற்காகப் பயன்படுத்திக் கொள்கின்றோம். இதுதான் ஆலயங்களில் அடிப்படையான தத்துவம்.

மனதில் மாசு - அழுக்கு உள்ள மனிதன் தினசரி சென்று தீண்டுவதால் ஆலய விக்கிரகங்களில் நிலைபெற்றுள்ள இறை வனின் சித்சக்தி நாளாவட்டத்தில் நிலை பெறாமல் அகன்று விடும். அவ்வாறு நிகழா மல் தடுப்பவையே கும்பாபிஷேகம் என்று சைவ நெறியிலும், சம்ரோட்சணம் என்று வைணவ நெறியிலும் குறிப்பிடப்படுகின்றன. பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை திருக்கோயில்களிற்கு கும்பாபிஷேகம் (குட முழுக்கு) அல்லது சம்ப்ரோட்சணம் செய்விக்க வேண்டும். இவ்வாறு செய்ய இயலாத ஆலயங்களில் திருவுருக்கள் அஷ்டபந்தனம் இல்லாமல் இருத்தல் கூடாது. அஷ்டபந்தனம் சாத்தி குடமுழுக்குச் செய்விக்க வேண்டும்.

பழுதடைந்த மின்சார சாதனங்களை புதுப்பிக்காவிட்டால் மின் விசிறிகள் ஓடாது. மின் விளக்குகள் எரியாது. மின் அடுப்புகள் சமைக்க முடியாது. அதேபோல அஷ்டபந் தனம் இல்லாத ஆலயங்களின் மூர்த்திகளில் தெய்வீக சக்தி தேங்கி நிற்காது. கொம்பரக்கு, கருங்குலியம், சுக்கான், காவிக்கல், வெண் மெழுகு, வெண்ணை செம்பஞ்சு, இலிங்கம் ஆகிய எட்டுப் பொருட்களால் விதிப்படி தயாரிக்கப்படுவது அஷ்டபந்தனம் ஆகும். திருக்கோயில்களில் எழுந் தருளியுள்ள மூர்த்திகளுக்கு இந்த அஷ்டபந்தனத்தைப் பக்தியுடனும் ஆகம நெறியி ன் வண்ணமும் சாத்தினால் இறைவனின் அளப்பரிய சித்சக்தி மூர்த்திகளில் தொடர்ந்து நிலைபெற்றி ருக்கும்.

மஹா கும்பாபி ஷேகத்தினால் அஷ்டபந் தனம் சாத்துவது மிக முக்கி யமான ஒரு பணி. இறை வனின் எல்லையற்ற சித்சக்தி ஆலயங்களில் பிரமந்திரம் எனப்படும் விமான உச்சி துணை வழியாக விமான கலசம் வரையில் ஊடுருவி நிற்கின்றது.

தொலைக்காட்சி நிலையங்களிலும் வானொலி நிறுவனங்களிலும் ஒலி அலைகளை வாங்கிப் பல இடங்களுக்குப் பரவச் செய்ய கருவிகள் அமைக்கப்படுகின்றன அல்லவா அதே தொழில்நுட்பம்தான் திருக்கோயில்களிலும் செயல்படுகின்றது. ஆலயங்களில் விமானகலசங்கள் செம்பினால் அமைக்கப்படுவதற்கு இதுவே காரணம் செம்பு வழியாகச் சக்தி எளிதில் பரவும்.

"மஹா கும்பாபிஷேகத்திற்கு முன்பாக ஆலயங்களைப் பழுது பார்த்து புதிய பகுதிகள் அமைப்பார்கள். அல்லது ஏற்கனவே உள்ள பகுதிகளைப் புதுப்பிப்பார்கள்".

திருக்கோயில்களில் கர்ப்பக்கிருகத்தைத் தூய்மை செய்வதற்கு முன்பாக கோயிலுக்கு வெளியே ஒரு யாகசாலை அமைத்து அங்கே சில தினங்கள் இறைவனை குடங்களில் எழுந்தருளச் செய்வார்கள். இறைவன் தற்காலிகமாக எழுந்து அருளும் இடம் "யாகசாலை" பிம்ப வடிவில் உள்ள பெருமானை கும்பத்தில் (குடத்தில்) உள்ள புனிதமான நீரில் ஆவாகனம் செய்விப்பது என்று இதனைக் குறிப்பிடலாம்.

கும்பாபிஷேக (குடமுழுக்கு)க் காலத்தில் யாகசாலை பூஜைகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. யாகசாலையில் ஆலமரம், அரசமரம் ஆகியவற்றின் சமித்துகளதும், பசு நெய்யினாலும் ஹோமங்களைச் செய்வார்கள். ஹோம குண்டத்தில் உள்ள அக்கினியில் பொருளை இட்டால் அவை இறைவனிடம் சென்று அடையும் யாகசாலையில் சிறப்பு வழிபாடுகள், வேதபாராயணம், ஆகம பாராயணம், மங்கல வாத்திய இசை, சமய விரிவுரைகள் முதலியவையும் இடம் பெறும்.

இறுதியாக யாகசாலைக்கு குடங்களில் உள்ள புனித நீரினால் கோபுர உச்சியின் விமானகலசங்களுக்கும் கருவறையில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளுக்கும் அபிஷேகம் செய்யப்படும் "கும்பநீரினால் அமையும் அபிஷேகம் கும்பாபிஷேகம் ஆகும்" தேவ ஆகம நெறிமுறை தவறாமல் மஹாகும்பாபிஷேகங்களை சம்ப்ரோட்சணங்களையும் (புனித நீரைத் தெளித்தல்) செய்பவர்களுக்கும் செய்விப்பவர்களுக்கும் பகவானின் (அம்பாளின்) பரிபூரண அருள் கிடைக்கும். "அம்பாளின் அருள் அகிலமெல்லாம் ஆளும்".

**கலசம்**

வெண்கலத்திலோ அல்லது பஞ்சலோகங்களினாலோ (செம்பு) செய்யப்பட்ட கலசத்தை கோயிலின் கோபுரத்தில் வைத்து பூஜிப்பது நம்வழக்கம். 'சூரிய ஒளி கலசத்தில் பட்டு அந்த ஒளியின் சக்தி கொடிமரத்தில் பட்டு பின்பு இது கருவறையில் திருமூர்த்தி சிலைகளின் மீது பாய்கின்றது.

**கொடிமரம்**

மின்னல் விளைவு எனப்படும் வெளிச்சத்தின் வெளிப்பாடு (Lighting Effect) வெண்கலத்தில் செய்யப்பட்ட கொடிமரத்தில் பட்டு அதிலிருந்து நேரான கதிர்கள் (Positive) கொடிமரத்தினால் ஈர்க்கப்பட்டு அது சாதாரண கதிர்களாக மாறி அதில் உள்ள ஆபத்தான கதிர்களை பிரித்து நல்லவை மட்டும் வெளியேறுகிறது. இதனால் மின்னல் ஒளியின் பாதிப்பு குறைகின்றது.

**ஆலயத்தின் அமைப்பு**

கோயில்கள் பரந்த பரப்பளவிலே அனைவரும் வந்து போகும் வண்ணம் ஊருக்கு நடுவில் அமைந்திருக்கின்றது. கோயில்கள் அனைத்தும் பெரும்பாலும் கருங்கல்லாலே கட்டப்பட்டது. நீண்ட ஆயுளுக்காகவும், நமது கலை கலாச்சாரம் அனைத்தும் உள்ளடங்கும் வகையிலே அமைகிறது.

திரு.செ.கோகிலேஸ்வரன்,
உபசெயலாளர், அறங்காவலர் சபை.



## இரணைமடு கனகாம்பிகை அம்மன் கும்மிப்பாடல்

### காப்பு

திருவாய் மலர்ந்து அருள் பொழியும் - எங்கள்
திருவையாற்று சித்தி விநாயகனே
கருப்பொருளே உன் தாழ்பணிந்தேன் - எந்தன்
கவிக்கு காப்பாக வாருமையா

பெற்றவளே முத்துமாரியம்மா - நான்
பேசும் தமிழ் எந்தன் தாய் மொழியாம்
கற்றிட நற்றமிழ் தாருமம்மா - எங்கள்
இரணைமடுக் கனகாம்பிகைத் தாயாரே.

அழகான வண்ணப்பட்டாடை கட்டி
அன்னநடையும் தான் நடந்து
இளந்தளிர் பூப்போல வாறாளாம் என்று
ஏந்திழையே கும்மி கொட்டுங்கடி

கும்பத்தின் மேலே அமர்பவளாம் - தாயார்
குலுங்கும் வேப்பிலை காரிகையாம்
குங்குமத்திலகம் கொண்டவளாம் - அன்னை
கோபாலன் தங்கையாய் வந்தவளாம்

அக்கினிப் பார்வையும் அவள் பார்ப்பாள் - அம்மன்
ஆனந்தப் பார்வையும் பார்த்திடுவாள்
சிக்கலைத் தீர்த்திட வேண்டுமென்றார் - அம்மன்
சின்ன கண்ணோட்டம் செலுத்திடுவாய்

ஆங்காரி ஓங்காரி மாரியம்மா நீயும்
ஆனந்த தாண்டவம் ஆடிடம்மா
சிங்கவாகனம் சேர்ந்தாட - இப்போ

சிந்திடையே நடனம் ஆடிடம்மா - என்று

கொட்டுங்கடி கும்மி கொட்டுங்கடி

கொங்கை குலுங்கி அசைந்தாட - அம்மன்

கூந்தல் கலைந்து விரிந்தாட

செங்கையில் சூலமும் சேர்ந்தாட - தாயே

சேவடி தூக்கி ஆடுமம்மா

தீச்சட்டி ஏந்தி கன்னியர்கள் - அம்மா

தீவினை தீர்த்திட வேண்டுமென்று

ஆச்சியுள் ஆலயவாசல் வந்தார் - தாயே

அத்தனை குறைகளும் தீர்ப்பவளே

கையில் சிலம்பு கலகலக்க - அம்மன்

காலில் சதங்கை மிகவொலிக்க

சையமாந்தரை காத்தருள - எங்கள்

மாதா வாறாள் - என்று

கொட்டுங்கடி கும்மி கொட்டுங்கடி

பாரினில் வாழும் தமிழர் குலம் - இதை

பக்தியுடன் நித்தம் பாடி வந்தால்

காரிகையே எங்கள் மாரியம்மா - நீயும்

கருணை தந்திட வந்திடுவாய்

(மங்களம், மங்களம், மங்களம்)

சந்தம் ஓசை எதிர்முனை அறியாத மூடன் பாடிவைத்த இந்த அழகு செந்தமிழ் பாங்கினிலே நெறிதவறிப் பிழை இருந்தால் தாயே நெஞ்சம் மகிழ்ந்து பொறுத்திடம்மா

ஆக்கம்:
**கலைச்சுடர் கலாபூஷணம்**
ஐயாத்துரை சிவபாதம் அவர்கள்
அம்பாள் குளம், கிளிநொச்சி.





**கோலம் போடுதல்**

பாலர் பிரிவு (2, 3)
01ம் இடம் :- டேமியன் விதுசன்
02ம் இடம் :- முருகமூர்த்தி தரணிகன்
03ம் இடம் :- பாஸ்கரதாஸ் சாகித்தியன்
03ம் இடம் :- சிவயோகநாதன் டினாத்

கீழ்பிரிவு (4, 5)
01ம் இடம் :- கருணைநாதன் சாயினி
02ம் இடம் :- பூலோகநாதன் பிரியநிலா
03ம் இடம் :- காமினி கீர்த்திகா

மத்திய பிரிவு
01ம் இடம் :- ரவீந்திரன் கஜீபா
02ம் இடம் :- சாம்பசிவம் யதுமிலா
03ம் இடம் :- முருகமூர்த்தி அனோஜன்

மேற்பிரிவு
01ம் இடம் :- கருணைநாதன் சதுர்சனா
02ம் இடம் :- பேரம்பலம் பகலவன்
03ம் இடம் :- கலைச்செல்வன் திலக்ஸஅழகன்

மேற்பிரிவு பூக்கோலம்
01ம் இடம் :- சின்னமணி தனுசியா

**மாலை கட்டுதல்**

மத்திய பிரிவு
01ம் இடம் :- விஸ்வலிங்கம் துவாரகா
02ம் இடம் :- பாலசுந்தரம் பரணிதரன்

மேற்பிரிவு
01ம் இடம் :- மகாலிங்கம் கபிலதர்சினி
02ம் இடம் :- சுதாகரன் சுதாயினி
03ம் இடம் :- இராமச்சந்திரன் டயந்தினி

